BENSONS2/NGB-101C TAM

## அவள் கல்யாணத்தில் எங்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி

ஆம், மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். எங்களது சொற்பமான வருமானத்தில் சீதாவுக்கு இவ்வளவு நன்றாக கல்யாணம் நடக்குமென்று யார்தான் எதிர்பார்த்தார்கள் ?

பல வருஷங்களுக்கு முன் நண்பர் ஒருவர் மாதா மாதம் ஒரு சிறு தொகையை நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் சேமித்து வரும்படி எங்களை தூண்டினார்.

நாங்கள் போடும் தொகை சிறிதாக இருந்தால் அதை அவர்கள் வாங்கிக் கொள்வார்களோ என்றுகூட சந்தேகமடைந்தோம். ஆனால் அதுதான் இல்லை.



நீங்கள் ஐந்து ரூபாய்களைக் கொண்டு ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கை ஆரம்பித்து விடலாம். ஆம், ஐந்தே ரூபாய் இருந்தால் போதும்.

அதோடு மட்டுமில்லை, ஆண்டுதோறும் 4% வட்டியும் சேர்ந்து உங்கள் சேமிப்பு வளரும்.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் எப்பொழுதும் மரியாதையும் திறமையான சேவையும் உங்களுக்கு கிடைக்கும். அது மிகவும் நல்ல பாங்க் என்பதை நீங்களே உணர்வீர்கள்.

இன்றே நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கின் கிளைக்கு சென்று பாருங்கள்.

***நீங்களும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கும் உற்ற நண்பர்களாகி விடுவீர்கள் !***

# நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

பிரிட்டனில் இணைக்கப் பெற்றது . அங்கத்தினர்களின் பொறுப்பு அளவிடப்பட்டது.

அசோஸியேட்ட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்கு லிமிடெட். நேஷனல் புரொவின்ஷியல் பாங்கு லிமிடெட்

**கிளைகள் : சென்னை : 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி : 4/4, பீச் ரோடு; ஹைதராபாத் : அபித் ரோட்**

## நினைவுத் திரையில்...

சென்ற வாரத்தில் சென்னை கடற்கரைச் சாலை ஓரத்தில் அய்யர்வாளின் உருவச் சிலை (உ. வே. சுவாமிநாத அய்யர்) திறந்து வைக்கப்பட்டது. இந்த விழாவில் நிகழ்ந்த சொற்பொழிவுகள் சில ஒரு விதமா யிருந்தன. ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்கள் தமிழை இங்கிலீஷில் பேசித் தீர்த்தார்.

டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் இங்கிலீஷை இங்கிலீஷிலேயே பேசினார். ஆயினும் அந்தப் புண்ணிய தினத்தில் அவர் 'இன்னும் இரண்டு வருஷத்தில் தமிழ் கற்றுக் கொண்டு வருவேன்' என்று வாக்களித்தது பெரிய விசேஷமாகும்.

இன்னும் தமிழைத் தமிழில் பேசியவர்களில் ஒருவர் 'ஆதரவாளர்' என்று சொல்லுவதற்கு ''ஆதார தாராளவர்'' என்று மிகக் குளறிக் கஷ்டப்பட்டார். இன்னொருவர் ''குண்டலகேசி'' என்பதற்குக் ''குண்டாலகேசி'' ''குண்டலகேசி'' என்றெல்லாம் சொல்லித் திண்டாடினார். வேறு ஒருவர் ஆரம்பித்த வாக்கியத்தை எப்படி முடிப்பது என்று தெரியாமல் திணறி மூச்சு முட்டிப் போனார்.

மொத்தத்தில் எல்லாரும் தமிழில் அபார அன்பு காட்டினார்கள் என்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது.

(''அய்யர்வாள் ஞாபகார்த்தம்'' என்ற கட்டுரையிலிருந்து. — கல்கி, மார்ச் 14, 1948)

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ பங்குனி 19 — ஏப்ரல் 2



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




உயிர் பிழைக்க இந்த
ஆக்ஸிஜன்தான் கதி

நேருவின்
'பிரபை'

காங்கிரஸ்

PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ❋ இதழ் 35



# முதலில் செய்ய வேண்டியவை

ஸ்ரீ மொரார்ஜி தேசாய் அவர்கள் வெளியிட்ட இடைக்கால பட்ஜெட்டிலிருந்து தேசத்தின் பொருளாதாரமும் நிதி நிலைமையும் எவ்வளவு மோசமாக உள்ளன என்பதை அறியலாம். பொருளாதார நிலை குறித்து நிதி மந்திரி சிறிது உற்சாகமற்றிருப்பதாகப் பத்திரிகைத் தலைப்புக்கள் கூறுகின்றன. இவ்வளவு காலமாகத் தேசத்தின்தேவை, சக்தி இவற்றை உணராமல் திட்டமிட்ட பின் வேறெப்படி இருக்க முடியும்?

ஒரு விஷச் சுருள் தேசப் பொருளாதாரத்தைக் கவ்விக் கொண்டிருக்கிறது. ஏதேனும் ஓரிடத்திலிருந்து இச்சுருளை அழிக்கத் தொடங்கினாலன்றி விமோசனமில்லை. அது தானாக விலகாது. நாம்தான் முயற்சி எடுக்க வேண்டும். இந்த ஆரம்ப - நடவடிக்கை என்ன? இதை அடுத்துச் செய்ய வேண்டிய காரியங்கள் என்ன? இவற்றை ராஜாஜி எடுத்துக் கூறியிருக்கிறார்.

முக்கியமாக அரசாங்கத்தின் செலவுகளைக் குறைக்க வேண்டும் — மிகவும் கணிசமாகக் குறைக்க வேண்டும். இதனால் ஊழியர்களில் பலரை ஆட்குறைப்புச் செய்யத்தான் வேண்டியிருக்கும். இவர்களுக்கெல்லாம் வேலை வாய்ப்புக் கிடைக்குமாறு தொழில் துறையை வளர்ச்சியுறச் செய்ய வேண்டும். எனவே முதல் நடவடிக்கையாகத் தொழில் துறையின் விஸ்தரிப்புக்கான காரியங்களைக் கவனிக்க வேண்டும். வரிகளைப் பெருமளவுக்குக் குறைத்து, கட்டுப்பாடுகளை நீக்கினால்தான் முதலீடுகள் பெருகித் தொழில் துறை அபிவிருத்தி அடையும். பெர்மிட் லைசென்ஸ் முறையை நீக்கி அதனிடத்தில் சுதந்திரத் தொழிலுரிமையை அமர்த்த வேண்டும். தொழில் வளர்ச்சிக்கு வழிகாட்டி என்னும் ஸ்தானத்தில் குறைந்த பட்ச அதிகாரத்தையே சர்க்கார் தன் வசம் வைத்துக் கொள்ள வேண்டும்.

மத்திய சர்க்காரின் செலவு தற்போது கட்டுக்கடங்காமல் பெருகியிருப்பதற்குக் காரணம் அது ராஜ்யங்களின் உரிமைகளில் தடையின்றித் துராக்கிரகம் செய்திருப்பதுதான். இதனாலேயே மத்திய இலாகாக்கள் பெருகி, செலவும் உயர்ந்துள்ளது. உணவு, விவசாயம், சுகாதாரம், கல்வி, போலீஸ் முதலியன முக்கியமாக ராஜ்யங்களின் அதிகார வரம்புக்கு உட்பட்டவையே. இவற்றில் இன்று விஸ்தரிக்கப்பட்டுள்ள மத்திய சர்க்கார் இலாகாக்கள் வெகுவாகக் குறைக்கப்பட வேண்டும். முன்பு போல ஒரே கட்சி தில்லியிலும் ராஜ்யங்களிலும் இன்று ஆட்சி புரியவில்லை. எனவே முன்பிருந்த மத்திய சர்க்காரல்ல இன்று. பழைய அமைப்பு பெரிதும் மாறியிருப்பதை மத்திய ஆட்சியாளர் மனத்தில் வாங்கிக் கொண்டு அதிகாரங்களைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அரசியல் சாஸனத்தின் உத்தேசத்துக்கு மாறாக, ராஜ்யங்களுக்குரிய அதிகாரங்களைக் கைப்பற்ற தில்லி முயலக்கூடாது. நிதி ஒதுக்கீடு என்ற நிர்ப்பந்தத்தைக் காட்டி ராஜ்யங்களின் மீது தில்லியின் ஆதிக்கத்தைப் பெருக்க நினைத்தால் அது அதருமமுமாகும்; அநாகரிகமுமாகும். மாறாக, ஓர் ஒழுங்குப்பாட்டின் கீழ் ராஜ்யங்களே அதிக நிதியம் பெறுமாறு செய்ய வேண்டும். ராஜ்யங்களின் செலவு பெரும்பாலும் ஸ்தூலமாகவே மக்களின் நலனுக்குச் செல்கிறது; ஆனால் தில்லியில் செய்கிற செலவுகளோ, விண்ணுயரக் கட்டிடங்களைக் கட்டும் கன்டிராக்டர்களுக்குத்தான் போகிறது.

டாம்பீகக் காட்சியாக உள்ள நமது அந்நிய தூதரகங்களுக்காகச் செய்கிற செலவையும் கணிசமாகக் குறைக்க வேண்டும். உலகெங்கிலும் தூதரகம் அமைப்பதற்கு நாம் ஒரு வல்லரசல்ல. இனி நாம் அடக்கமாக இருக்கவேண்டும். அடக்கமாக இருப்பதில் அவமான

மில்லே; பெருமிதமே கொள்ள வேண்டும். இன்ஸால்வென்ட் நிலேயில் உள்ள சர்க்கார் டாம்பீக வாழ்க்கை நடத்துவதால் அந்தஸ்துப் பெற முடியாது; முட்டாள் பட்டம் தான் கிடைக்கும். பல தூதரகங்களே ஒன்ருகச் சேர்த்து, செலவுகளே மட்டுப்படுத்த நிறைய இடமிருக்கிறது.

நாம் பெருத்த நிதியம் ஈடுபடுத்த வேண்டியுள்ள இன்னெர் இனம் ஆயுதச் செலவாகும். பாகிஸ்தானும் நாமும் நடத்துகிற ஆயுதப் போட்டியாலேயே இச் செலவு ஏகத்தாருகப் பெருகியுள்ளது. இரு நாடுகளும் ஒரே இடத்திலிருந்து உதவி பெற்று இப் போட்டியை நடத்துவது வார்த்தைகளால் வருணிக்க முடியாத மதியீனமாகும். ஆயுதப் போட்டியைத் தவிர்த்து, செலவைக் குறைக்க உபாயம் என்ன? காச்மீரப் பிரச்னேயைத் தீர்த்தால்தான் ஆயுதப் போட்டி தீரும் என்பார்கள். காச்மீரப் பிரச்னேயை எப்படித் தீர்ப்பது? இதை யோசிக்கும்போது முன் புறமாகத் தாவிக் குதிக்கக் கருதுபவர்கள் முதலில் சில அடிகள் பின்னுக்குச் செல்வதை எண்ணிப் பார்க்க வேண்டும். அதே போல் காச்மீரப் பிரச்னேயைத் தீர்ப்பதற்காக முன்னுக்குச் செல்லு முன், அப்பிரச்னேக்குத் தொடர்பில்லாத வேறு இனங்களில் முதலில் அடியெடுத்து வைக்க வேண்டும். அதாவது பாகிஸ்தானுடன் நட்பும், ஒத்துழைப்பும் பெற முதலில் முயல வேண்டும். நட்புச் சூழ்நிலே தோன்றிய பின் ராஜ தந்திரம் என்கிற காளேயின் கொம்புகளேப் பிடிக்கலாம். முதலில் ராஜதந்திர நடவடிக்கை எடுத்து, அதன் பிறகு நட்பு ஏற்படுத்திக் கொள்ள நிளேப்பது நம்மை மேன்மேலும் அவநம்பிக்கை என்ற புதை சேற்றில்தான் அழுத்தும்.

நட்பு நடவடிக்கைகளாக என்ன செய்ய வேண்டும்? பாகிஸ்தானுக்கும் பாரதத்துக்கும் இடையேயுள்ள சுங்க வரிகளே நீக்க வேண்டும். வியாபாரத் தடைகளே ரத்து செய்ய வேண்டும். இரு நாடுகளின் அபிவிருத்திக்குமாக ஒரு கூட்டுப் பொருளாதார அமைப்பை ஏற்படுத்த வேண்டும். சுங்க வரிகள் இரு நாடுகளுக்கும் ஏராள வருமானம் கொண்டு வருகின்றனவே, இவற்றை இழக்கலாமா என்று தோன்றும். ஆனல் இந்த வருமானம் ஒரு பிரமைதான். இந்த வரிக்கு மேலாகப் பொருட்களே வாங்குவோர் இரு நாடுகளிலும் பணத்தை இழக்கிருர்கள். எனவே தடைகளே ஒழித்துக் கூட்டு வர்த்தகத்தை ஏற்படுத்தத் திட்டமிட வேண்டும். இதனல் இரு தேசங்களின் அரசியல் அந்தஸ்து குன்ருமலே, பொருளாதாரம் என்ற அத்தியாவசியத் துறையில் பழைய பாரதப் பிரிவினே மறைந்து நாடிரண்டும் ஒன்ருனது போலாகும். இத்தகைய கூட்டுப் பொருளாதாரத்துக்கு, மேல் நாடுகளில் பல நல்ல முன்னேடிகள் உண்டு.

இரு நாடுகளுக்கும் அநுகூலமான விதத்தில் உற்பத்தியைப் பெருக்கக் கூட்டு முயற்சிகள் செய்ய வேண்டும். அரசியல் தொடர்பற்ற துறைகளில் ஒத்துழைப்பதால் பரஸ்பரம் அரசியலேயும் அநுதாபத்துடன் புரிந்து கொள்ள வழி ஏற்படும். ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போட்டி யிடுவதற்காக இரு நாடுகளுமே பிற நாடுகளிடமிருந்து சம அளவில் கடன் வாங்குவதன் அறிவீனம் அப்போது புலனுகும். காந்திஜியும் ஜின்னுவும் அயராது உழைத்து இவ்விரு நாடுகளுக்கும் சுதந்திரம் பெற்றுத் தந்தனர். அதன் பின் இரு நாடுகளுமே பிறரைச் சார்ந்திருக்கும் யாசக நிலேயைப் பெறுவதற்காகத் தம்மால் முடிந்ததை யெல்லாம் செய்துவருவது அவமானமாகும்.

இரு நாடுகளின் இதயமும் இணேவதற்கும், நமது ராணுவச் செலவுகளேக் குறைத்து அந்த அளவுக்கு உற்பத்தியைப் பெருக்கவும் இப்போதுள்ள வாய்ப்புக்களே இழக்கலாகாது. பாகிஸ்தான் அரசின் தலேமையிலுள்ள ஜெனரல் அயூப் கான் அவர்களுடைய மனப்பாங்கும், நடவடிக்கையும், அந்தஸ்தும் நமது நட்பு வாய்ப்புக்கு எவ்வளவு உதவியாக உள்ளன என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும்.

அடக்கம் என்கிற புதிய அமைப்பை நாம் நேர்மையுடன் நிலேநாட்டிய பின், இந்தியாவைப் பயங்கரமான அந்நியக் கடன்களிலிருந்து மீட்பதற்காக சூட்சுமமான ராஜரீகக் காரியங்களேத்தொடங்க வேண்டும்.

இதெல்லாம் நடக்கிற காரியமா என்று யாரும் ஐயுற வேண்டாம். பெரும் ராஜ நீதி நிபுணர் ஒருவர் இக்கருத்துக்களே ஆமோதித்திருக்கிருர். ''சமீபத்தில் நான் தில்லி சென்றிருந்தபோது என் பழைய நண்பர் மவுண்ட் பேட்டன் பிரபுவுடன் பேசுகையில், 'இது நடக்கக் கூடியதே' என்று அவர் கூறினர்'' என்று ராஜாஜி கூறுகிருர்.

இக்காரியங்களே யெல்லாம் வெற்றிகரமாகச் செய்து முடித்த பின் கௌரவம்—கடும் உழைப்பு என்ற இரண்டு இலட்சியங்களின் மீது பாரதம் புது வாழ்வைத் தொடங்க முடியும்; தேசத்தின் பொருளாதாரத்தைச் சீர் செய்து புனர்நிர்மாணிப்பதோடு மட்டுமின்றி தேசத்தின் மனப் பாங்கையே உயர்த்த முடியும்.

# ராஷ்டிரபதியின் உரை

சுதந்திரக் கட்சிக்கு லோக சபையில் கிடைத்துள்ள ஸ்தானங்களேக் கொண்டு மட்டும் அதன் செல்வாக்கை மதிப்பிடக் கூடாதென்பது ராஷ்டிரபதியின் தொடக்க வுரையிலிருந்து தெளிவாகிறது. உண்மையாகவே ஆட்சி பீடத்தினரின் பிடிவாதம் தளர்கிறதோ, அல்லது பச்சலின் நன்மதிப்பைப் பெறுவதற்குத்தான் அவர்கள் முயல்கிருர்களோ — எப்படியாயினும் சுதந்திரக் கட்சி காட்டும் பாதையையே அவர்கள் தேர்ந்தெடுத்துள்ளது போன்ற சூசனேயை ராஷ்டிரபதியின் உரையில் காண்கிருேம்.

திட்டக் கமிஷனின் அமைப்பை மாற்ற வேண்டும்; நான்காம் திட்டத்தின் அளவுகளே மீண்டும் பரிசீலிக்க வேண்டும்; கண்ட்ரோல் முறைகளே நன்கு ஆராய்ந்து, அவசியமற்ற

கன்ட்ரோல்களை நீக்க வேண்டும் — என்ற உத்தேசங்களை ராஷ்டிரபதி வெளியிட்டார். நீண்ட காலமாகச் சுதந்திரக் கட்சி இந்த நோக்கங்களுக்காகவே பாடுபட்டுள்ளது.

உணவுப் பிரச்னைக்கு முதலிடம் தர வேண்டும் என்று இப்போதேனும் பாரத அரசுக்குத் தோன்றியிருப்பது குறிப்பிடத் தக்கது. ஆட்சிமொழி விஷயத்தில் ஹிந்தித் திணிப்பை மத்திய ஆட்சியாளர் விட்டுவிடுவார்கள் என்ற நம்பிக்கையை ராஷ்டிரபதி ஏற்படுத்தி யிருக்கிறார்.

இவை எந்த அளவுக்கு, எந்த விதத்தில் நடைமுறையாக்கப்படும் என்பது போகப் போகத்தான் தெரியவேண்டும்.

# என்ன சேதி?

## ஜனநாயகத்தின் சாரம்

கடினமான பிரச்னைகளில் பொதுஜன வாக்கெடுப்பு நடத்தி மக்களின் கருத்தை அறியப் போவதாக முதன் மந்திரி இரு அண்ணாதுரை அவர்கள் கூறியிருக்கிறார். நல்ல யோசனைதான். ஆனால் காரியாம்சத்தில் பொதுஜன க்கெடுப்பு நடத்துவது அவ்வளவு எளிதா விஷயம் அல்ல. பொது மக்கள் எல்லாத் துறைகளிலும் ஆழ்ந்த அறிவு பெற்றிருப்பார்கள் என்று எதிர்பார்ப்பதற்குமில்லை. இதைவிட அந்தந்தத் துறையில் உள்ளவர்களின் ஆலோசனைகளைப் பெறுவது சிலாக்கியமாக இருக்கும். வர்த்தக சமூகத்தினரிடம் இவ்வாறு கலந்தாலோசிப்பதாக முதன் மந்திரி வாக்களித்தாரெனச் சமீபத்தில் ஒரு செய்தி வெளியாகி யிருந்தது. பல்வேறு கட்சி அங்கத்தினர்களையும் கொண்ட ஆலோசனைக் குழுக்களை அமைக்க முதன் மந்திரி உத்தேசித்துள்ளார். அரசியல் கட்சியினரை மட்டுமின்றி, அந்தந்தத் துறையிலும் பிரத்தியட்சமாக ஈடுபட்டு அநுபவம் பெற்றவர்களின் கருத்துக்களையும் அறிய வேண்டும்.

பல கருத்துக்களையும் கேட்டு, அவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவெடுப்பதுதான் ஜனநாயகத்தின் சாரம். இதைத் தி. மு. க. அரசாங்கம் காரிய ரீதியில் செய்து காட்ட வேண்டுமென விரும்புகிறோம்.

## உணவுத் துறையில் தி. மு. க.

கட்டுப்பாடுகளை இப்போதைக்கு நீக்குவதற்கில்லை என்று கருதும் தமிழக அரசாங்கம் உணவுக் கொள்முதலை மேலும் இறுக்கியுள்ளது. பெரும்பான்மையாயுள்ள மிகச் சிறிய நிலச்சுவான்களுக்கு விலக்களித்து, சிறுபான்மையாயுள்ள மற்ற நில உடைமைகளிலிருந்தே இக்கொள்முதல் செய்யப்படுவதால் அதன் கடுமையை ஊகிக்க முடியும். தேர்தல் சமயத்தில் பழைய சர்க்காரின் கவனக் குறைவால் தானியக் கையிருப்பு மிகவும் குன்றியதாகவும், இதை ஈடு செய்யவே இப்போது கொள்முதலை உக்கிரமாக்கியிருப்பதாகவும், போதிய கையிருப்பு கிடைத்தபின் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படுமென்றும் முதன் மந்திரி கூறியுள்ளது சற்று ஆறுதல் அளிக்கிறது. பெரிய பண்ணைகளிலிருந்துதான் பட்டணங்களுக்கு அரிசி விற்பனைக்கு வரும்; அந்தப் பெரிய பண்ணைகளுக்கு ஊக்கம் தந்தாலே தான் உற்பத்தி பெருகும் இதுவே அடிப்படை உண்மை.

நில வரியை நீக்குவதால் அரசாங்கத்தின் வருமானம் குறையுமாதலால் அதனை ஈடு செய்வதற்காகச் சர்க்காரே உணவு தானிய வியாபாரத்தை மேற்கொள்ள வேண்டி யிருக்கும் என்று பழைய காங்கிரஸ் அரசாங்கம் கருதியது. இது காரணமாகவே தாம் நிலவரி நீக்கத்துக்குத் தயங்குவதாக இரு அண்ணாதுரை கூறுகிறார். சர்க்கார் எடுத்துக் கொள்ளும் வியாபாரத்தில் நஷ்டம்தான் ஏற்படுகிறது என்பதைத் தாம் உணர்ந்துள்ளதாக அவர் கூறியுள்ளார். எனினும் இது காரணமாகச் சர்க்காரின் தானிய வியாபார உத்தேசத்தைத் தாம் அடியோடு கைவிட்டுவிட்டதாக அர்த்தமில்லை என்றும் ஒரு ஷரத்தைச் சேர்த்திருக்கிறார்.

நமக்குத் தெரிந்த மட்டில் உணவு உற்பத்திக்கும் விநியோகத்துக்கும் ஒரே ஒரு ஷரத்துத்தான் உண்டு: விவசாயிக்கு அதிகபட்ச சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பதும் உணவு தானியப் போக்கு வரத்தில் அநாவசியத் தடைகள் இருக்கக்கூடாது என்பதும்தான் அது.

---

## காமகோடியின் கருணைமொழி

லோகத்தில் ஒருவனுக்கு ஒன்றின் மேல் ஆசை இருக்கிறது. இன்னொருவனுக்கு இன்னொன்றின் மேல் ஆசை இருக்கிறது. ஒருவனுக்கே இன்றைக்கு எதனிடத்தில் ஆசை இருக்கிறதோ, அது நாளைக்கு மாறிப்போய் இன்னொன்றின் மேல் ஆசை விழுந்துவிடுகிறது. ஒரு நாளைக்கு இந்தப் பக்கமாகச் சென்றோன் என்றால் மறு நாளைக்குக் கடற்கரையோடு போகலாம் என்று அவனுக்கே தோன்றுகிறது. அதே மாதிரி பக்தர்களுக்கும் வழிபடும் மூர்த்தி 'இப்படி இருந்தால் தேவலை, அப்படி இருந்தால் தேவலை' என்று அநேகவிதமான ஆசைகள் தோன்றுகின்றன. இதனால்தான் பல தெய்வங்களை வழிபடும் மார்க்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன.



---



# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்திய யூனியனின் ராஷ்டிரபதிப் பதவியை வகிப்பதற்குப் பலருடைய பெயர்கள் சிபாரிசு செய்யப்படுகின்றன. தேர்தலுக்கு முன்பு இந்த மகத்தான பதவியை வகிப்பது எவ்வளவு சுலபமாக இருந்ததோ அது போல் இனி இராது என்பதை அனைவரும் அறிவர். இப்போது இச் சுமையைத் தாங்குவதற்கான தேக ஆரோக்கியம் தமக்கு இருப்பதாக டாக்டர் ராதா கிருஷ்ணன் கருதுவாராகில், அவருக்குள்ள அநுபவமும் அந்தஸ்தும் கவனத்துக்குரியன. டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்கள் தம்மால் நல்ல முறையில் ராஷ்டிரபதி பதவியை நிர்வகிக்க முடியுமெனக் கருதினால், நமது விசேஷ கவனத்தைப் பெறும் உரிமையை அவர் நிச்சயமாகப் பெற்றுள்ளார். எனினும் மத்திய ஆட்சிபீடத்திலுள்ள கட்சியின் முடிவுகளுக்கு ஒப்புதல் தரும் ரப்பர் ஸ்டாம்பாகவே ராஷ்டிரபதி இருப்பாரெனில், இவ்விருவருமே தேசத்தின் தேவைக்குப் போதமாட்டார்கள்.

அடுத்து வரும் ராஷ்டிரபதி மத்திய மந்திரிசபையிடம், ''உங்களுடைய கருத்துக்களைக் கேட்டபின் நான் சரியான முடிவு என்று கருதுவது இதுதான். என் யோசனையைப் புறக்கணித்துக் காரியம் செய்ய விரும்பினீர்களாயின், நான் பதவியை விட்டுப் போகிறேன். மக்களே இப்பிரச்னைக்கு முடிவு காணட்டும்'' என்று சொல்லக் கூடியவராக இருக்க வேண்டும். ஆனால் தாம் மிகவும் உறுதியுள்ளவர் என்று காட்டுவதற்காகவே அவர் அவசரப்பட்டு இவ்வாறு சொல்லக் கூடாது. நீர்க்காலோசனை செய்து தம் கருத்துக்களை உருவாக்கிக் கொண்ட பின்னரே ராஷ்டிரபதி இவ்வாறு நடந்து கொள்ள வேண்டும். ராஷ்டிரபதி பதவி ஏற்கிறவர், அந்த ஸ்தானத்துக்குப் புதிய அதிகாரங்களைப் பெற்றுத் தரும் திறமை படைத்தவராக இருக்க வேண்டும். பதவிக்குச் சக்தி யூட்டுவதில் கவனம் காட்டுபவராக இருக்க வேண்டும். இல்லாவிடில் தேர்தல்களுக்குப்பின் ஏற்பட்டுள்ள இந்தியாவின் உருவைக் கட்டுக்கோப்பாகக் காக்க முடியாது. பழைய அமைப்பில் உள்ள நல்ல அம்சங்களைக் காக்கவும், புதிய அமைப்பை நல்ல முறையில் ரட்சிக்கவும் வழி, மாறுதல் என்பதே. மாற மறுப்பது மூல அமைப்பையே சிதைப்பதில் கொண்டு விடும். நமது அரசியல் சாஸன ஷரத்துக்கள் வரையறுத்து எழுதப்பட்டிருப்பது உண்மை. எனினும் அதில் எழுதப்படாத அம்சங்களும் உண்டு. இவை அவசியமான மாறுதல்களுக்கு வளைந்து கொடுக்கக்கூடியவை.

❀❀❀❀

சர்க்காரை அமைப்பதற்கு வசதியாகவோ அல்லது குந்தகமாகவோ சில சட்டசபையாளர்கள் கட்சி மாறுவது தேர்தலுக்குப் பின்வர் ஒரு மானக்கேடான அம்சமாகியுள்ளது. இதைத் தடுக்க ஏதேனும் செய்தாக வேண்டும் என்ற நிலைமை தோன்றியுள்ளது. மாறுவதற்குள்ள சுதந்திரத்தை அடியோடு மறுப்பதற்கில்லைதான். இருந்த போதிலும் அது இவ்வளவு ஆபாசமாகி விடாமலிருப்பதற்கு ஏதேனும் செய்தாக வேண்டும். உதாரணமாக, தேர்தலில் சுயேச்சையாக நின்று வெற்றி பெற்றவர்கள் ஏதாவது ஒரு கட்சியில் சேர அநுமதிக்கலாம் — ஆனால் இதையும் தேர்தல் முடிவுகளை அறிவித்த ஒரு வாரத்துக்குள் செய்ய வேண்டும்; அல்லது ஓராண்டுக்குப்பின் செய்ய வேண்டும்; இடைக்காலத்தில் கூடாது.

❀❀❀❀

மத்திய சர்க்காரிடம் அதிகாரங்களைக் குவித்து, தார்மிக ரீதியில் மக்களையெல்லாம் வீரியம் இழக்கச் செய்யும் கொள்கையை விரும்பாத பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கெல்லாம் நான் தரும் இலட்சிய வாசகம் இதுவே: ''விரைவில் ஒன்றுபட்டுச் செயலாற்றுங்கள்.''

நம்முன்னுள்ள காலம் சிறிதேயாகும். வித்தியாசங்களைத் தீர்த்துக் கொண்டு, ஒன்று சேர்ந்து, சர்க்கார் சர்வாதிபத்தியத்தையும் பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியையும் அழித்து அவற்றினிடத்தில் சுதந்திர வாழ்வை அமர்த்த நமக்குச் சிறிதே காலமுள்ளது. லைசென்ஸ்—பெர்மிட் — கோட்டா ஆட்சியால் விளைந்த பரவலான நேர்மைக் குறைவை அகற்றி அதனிடத்தில் தருமப் பண்புகளை அமர்த்த நமக்கு அதிக அவகாசமில்லை. நாம் விரைவில் ஒன்று சேராவிடில், அவ்வாறு சக்தி வாய்ந்த அமைப்பாக நாம் சேரத் தவறியதை அடிப்படையாகக் கொண்டே காங்கிரஸ் புதிதாக ஓர் அந்தஸ்தைப் பெறத் தொடங்கும். இன்று ராஜ்யங்கள் காங்கிரஸிடமும் காங்கிரஸல்லாதாரிடமும் சம பலத்தில் பிரிந்துள்ளன. மத்திய அதிகாரக் குவிப்பை அழித்து அரசியல் சாஸனம் கூறும் ஆரோக்கியமான சமஷ்டி முறையை ஏற்படுத்த இந்தச் சமயத்தையும் வாய்ப்பையும் நாம் ஒருகாலும் நழுவ விடக் கூடாது.

❀❀❀❀

மத்திய சர்க்கார் பட்ஜெட்டில் கொழுத்து வருகிற மூன்று அம்சங்கள்: நிர்வாக இயந்திரத்தின் செலவுகள், கடன்கள், பாதுகாப்புச் செலவு ஆகியன. தேசப் பாதுகாப்பு, ராஜ நீதி, நிருவாகம் இவற்றின் சகல அம்சங்களிலும் தேர்ந்த ஞானம் பெற்ற மூவரைத் தில்லியில் உள்ள பொது விவகார நிலையம் ஓர் ஆராய்ச்சி அரங்குக்கு அழைத்

திருந்தது. நம் அந்நியக் கொள்கையை மாற்ற உறுதியான முயற்சி செய்து, பாது காப்புச் செலவைக் குறைத்தால்தான் பொருளாதாரச் சிர்குலைவைச் சரிசெய்ய முடியும் என்று இம் மூவரும் மிகவும் அழுத்தமாகக் கூறினர் — இது ' ஹிந்துஸ்தான் டைம் 'வின் விசேஷ நிருபர் தரும் செய்தி.

பாதுகாப்புச் செலவு பயங்கரமாக உயர்ந்து வருகிறது. 1950ல் அது ரூ. 164 கோடியாயிருந்தது. 1960ல் 247 கோடியாயிற்று. 1966ல் 797 கோடியாக உயர்ந்துள்ளது.

ஃஃஃ

நடப்பு ஆண்டு முடிவில் பாரத சர்க்காரின் பொதுக் கடன்கள் சுமார் பதினோராயிரம் கோடியாகவும் அடுத்த ஆண்டில் சுமார் பன்னிரண்டாயிரம் கோடியாகவும் இருக்கும். இவ்வாண்டு உள்நாட்டுக் கடன் 6217 கோடி. வெளி நாட்டுக் கடன் 4623 கோடி. இவை முறையே அடுத்த நிதி ஆண்டு முடிவில் 6313 கோடியாகவும், 5413 கோடியாகவும் உயரும்.

நடப்பு ஆண்டு முடிவுவரையில் தேசவாரியாக இந்தியா பட்டுள்ள கடன்கள் வருமாறு: பிரிட்டிஷ் சர்க்கார் — ரூ. 482 கோடி; அமெரிக்கா — ரூ. 1416 கோடி; அமெரிக்க ஏற்றுமதி இறக்குமதி பாங்கு — ரூ. 153 கோடி; பி.எல். 480 — 878 கோடி; ருஷியா— ரூ. 365 கோடி; ஜெர்மனி — ரூ. 346 கோடி; ஜப்பான் — ரூ. 122 கோடி; சர்வதேச அபிவிருத்தி பாங்கு — ரூ. 274 கோடி; சர்வதேச அபிவிருத்திக் கழகம் — ரூ. 416 கோடி.

ஃஃஃ

தேசத்தின் ஐக்கியத்தைக் குலைக்க வேண்டும் என்றும், உலகமெல்லாம் நம்மைப் பார்த்துச் சிரிக்க வேண்டும் என்றும் நாம் விரும்பினுலொழிய, ஆங்கிலத்தின் இடத்தைப் பெற ஹிந்தி கோரும் உரிமையைக் கிடப்பில்தான் போட வேண்டும். விவேகம் பிறந்தபின்னரே இந்தப் பிரச்னையை எடுத்து விவாதிக்க வேண்டும். இந்த இடைக் காலத்தில், இதுவரை ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருந்துவந்த நியதியையே பின்பற்ற வேண்டும். 1950ல் சாஸனம் நிறைவேற்றப்பட்ட பின்தான் ஆட்சி மொழிப் பிரச்னை பிறந்தது. 1947ல் நாம் சுதந்திரம் பெற்றதிலிருந்து 1950வரை ஆங்கிலத்தையேதான் ஆட்சி மொழியாகக் கொண்டிருந்தோம். இதனுல் உலகத்தில் சுதந்திர இந்தியாவுக்கு கௌரவமோ மதிப்போ குறையவில்லை. அந்த மதிப்புடனும் கௌரவத்துடனுமே இனியும் காரியங்களைத் தொடருவோம். இரண்டு விதமாகத் தொனிக்கக் கூடிய வாக்குறுதிகளின் உட்பொருள்களைத் தெளிவு செய்யும் காரியத்தில் முனைந்து புதிய சட்டங்கள் செய்வதும், அதற்காக அரசியல் சாஸனத்தைத் திருத்த நேரிடுவதும் புதிய சண்டைகளை — முன்னிலும் மோசமான சண்டைகளை - உண்டாக்குவதிலேயே முடியும். எனவே ஆட்சி மொழிப் பிரச்னையை அப்படியே பிற்காலத்துக்கென ஒதுக்கிவிட்டு, நீண்ட காலமாக இருந்து வந்த நடைமுறையைத் தொடருவோம்.

வியட்நாம் போரிலிருந்து அமெரிக்கா விலகி, ஹனோய்க்கு விட்டுக் கொடுக்க வேண்டும் என்று சொல்பவர்கள், டென்னஸி சட்டசபையின் கூட்டத்தில் ஜனாதிபதி ஜான்ஸன் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும்:

> மும்முறை குண்டு வீச்சை நிறுத்தி வைத்து யுத்த நிறுத்தத்துக்கு வழிகாணலாம் என்று நினைத்தபோதும், ஹனோய் அதிகாரிகள் இந்த வாய்ப்பை மறுத்துவிட்டனர். போர் மும்முரங்களைக் குறைப்பதில் எதிர்த் தரப்பும் பிரதி நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பது அடிப்படைக் கொள்கையாகும்.
>
> யுத்தத்தில் சேராத ஸிவிலியன் மக்களுக்கு நமது போர் நடவடிக்கையால் ஏதேனும் தீங்கு ஏற்பட்டால் அது கவனக் குறைவால் நிகழ்வதேயன்றி வேண்டுமென்று செய்வதல்ல. ஆனுல் இதற்கு நேர்மாறாக வியட்காங் கொள்கையோ வேண்டுமென்றே பொதுமக்களைப் பயமுறுத்துவதாக உள்ளது. ஒன்றுமறியா ஸிவிலியன் வியட்நாம் மக்கள் பத்தாயிரக் கணக்கில் வியட்காங் படையால் கொல்லப்பட்டிருக்கின்றனர்; அல்லது சித்திரவதை செய்யப் பட்டிருக்கின்றனர்; அல்லது கடத்திச் செல்லப் பட்டிருக்கின்றனர். இது பொதுச் சர்ச்சைக்கு வராமலே இருக்கிறது. நமது கொள்கையைக் கண்டிப்பவர்கள் இம்மாதிரி இரண்டு விதமாக நடந்துகொள்வதுதான் நமக்கு அலுப்பூட்டுகிறது.

ஃஃஃ

அமெரிக்க 'டைம்' பத்திரிகைக் குறிப்பு ஒன்று வருமாறு:

> அமெரிக்க சுப்ரீம் கோர்ட் நீதிபதி டாம் ஸி. க்ளார்க்கின் புதல்வர் ராம்ஸே க்ளார்க் அமெரிக்காவின் அட்டர்னி ஜெனரலாக நியமிக்கப்பட்டார். பெருமையுற்ற மகன், தந்தைக்கு இந்தச் சந்தோஷ சமாசாரத்தைத் தெரிவிப்பதற்காக ஃபோன் செய்ய விரும்பினுர். ஆனுல் தந்தையோ வேறொரு காரியத்தில் கருகருப்பாக இருந்தார். அந்தக் காரியம் என்னவெனில், தமது புதல்வர் அட்டர்னி ஜெனரலாக இருக்கும் போது தாம் நீதிபதியாக இருப்பது நேர்மையாக இராது என்று கருதி நீதிபதி பதவிக்கு ராஜிநாமா அனுப்பியது தான். சட்டமோ அல்லது சம்பிரதாயமோ அவரை ராஜிநாமா செய்யக் கட்டுப்படுத்தாவிடினும் அவர் இவ்வாறு செய்தார்.
>
> இதே போல் — ஆனுல் மாற்றுத் திசையில் 1930ல் ஒரு சம்பவம் நடந்தது. அப்போது ஸொலிஸிடர் ஜெனரல் பதவி வகித்து வந்த ஜெனரல் சார்லஸ் இவான்ஸ் ஹஃப்ஸ் என்பவர் தமது தந்தை ஸுப்ரீம் கோர்ட் நீதிபதியாக நியமிக்கப்பட்டதும் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார்.

* பஞ்சதந்திரக் கதைகள்
* இதிகாசம், வேதம், புராணங்களிலிருந்து சிறுகதைகள்
* விஷ்ணு புராணம்
* ஆழ்வார்களின் ஜீவிய சரித்திரங்கள்
* ஆச்சாரியார்களின் ஜீவிய சரித்திரங்கள்
* ஸ்தல புராணங்கள்
* ஸ்ரீ அழகிய சிங்கரின் அருள் மொழிகள்
* விசிஷ்டாத்வைதத்தின் விரிவுரை (ஆங்கிலத்தில்)

மற்றும் பல தொடர்கட்டுரைகளுடன்
வெளி வந்து கொண்டிருக்கிறது

# ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா

## ஸ்ரீ அஹோபில மடத்தின் தமிழ் மாதப் பத்திரிகை

உங்களுக்கும், உங்கள் குடும்பத்தினருக்கும் சிறுகதைகள், வேதம் மற்றும் புராணங்களிலுள்ள சிறந்த கருத்துக்களை போதித்து அறிவுச் செல்வத்தை வளம் பெறச் செய்யும் பத்திரிகை ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா.

இப்பொழுது நகர்புறங்களில் வாழ்ந்து நமக்கும் குழந்தைகளுக்கும் தெய்வீக, ஆன்மீக விஷயங்களை உணர்த்த நம் தாத்தா பாட்டி கூடயில்லாத குறையை இப்பத்திரிகை நீக்குகிறது. இப்பத்திரிகையை தொடர்ந்து வாசித்து வருவதால் பொழுதுபோக்காக மட்டும் அமையாமல் அறிவு வளர்ச்சி பெறுவதுடன் மறந்து கொண்டுவரும் நம் பூர்வீக கலாசார வாழ்வின் சிறப்பும் நமக்குத் தெளிவாய் புலப்படும்.

இன்றே உங்கள் சந்தா தொகையை மணி ஆர்டர் மூலம் அனுப்புங்கள்.

வருடச்சந்தா ரூ. 10/-
ஆறுமாதம் ரூ. 5/- தனிப்பிரதி ரூ. 1/-

ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா,
7, டாக்டர் ரங்காச்சாரி ரோடு,
சென்னை-18

நம் கலாச்சார ஒழுக்கத்திற்கு
புத்துயிர் அளிக்க
ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா வாசியுங்கள்



# மஞ்சள் விளக்கு

கார் ஓட்டிப் பழகியவர்களுக்குத் தெரியும், பிரேக்கை அழுத்தத் தொடங்கியவுடன் பின்புறம் சிவப்பு விளக்கு பிரகாசமாய் எரியும். உடனே பின்னால் வேறு ஒரு காரில் வருபவர் எச்சரிக்கை அடைகிறார். இப்போது இம்முறையில் இன்னும் ஒரு படி முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள். ஆக்ஸிலேட்டரிலிருந்து காலை எடுத்தவுடனேயே பின்புறம் ஒரு மஞ்சள் விளக்கு எரியத் தொடங்குகிறது. பிறகு பிரேக்கில் காலை வைத்ததும் சிவப்பு விளக்கும் பிரகாசமாய் எரிகிறது. ஆகவே, பின்புறம் வேறு காரில் வருபவர் மஞ்சள் விளக்கு எரிவதைக் கண்டதும் எதிரே உள்ளவர் பிரேக் போடப் போகிறார் என்று கண்டு கொள்கிறார். இதனால் பின்னால் வருபவர் சற்று முன்கூட்டியே எச்சரிக்கப்படுகிறார்; விபத்துக்கள் அந்த அளவுக்குக் குறையும் அல்லவா ?



கியர் மாற்றும்போது ஆக்ஸிலேட்டரிலிருந்து காலை எடுத்தபோதிலும் பின்னால் மஞ்சள் விளக்கு எரிவதில்லை. ஏனெனில், அதே சமயம் கிளச் பெடல் அழுத்தப்படுவதால் அந்த இயக்கம் மஞ்சள் விளக்குக்கு மின்சாரம் பாயாமல் தடுத்து விடுகிறது. அப்படி ஓர் ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

ஆபத்துக்கு உதவுவதற்காக நாம் 'பாங்கு'களில் பணம் சேமித்து வைக்கிறோமல்லவா? இதே போல் அமெரிக்காவில் ஆபத்துக்கு உதவுவதற்காகத் தங்களது ரத்தத்தையே சேமித்து வைத்துக் கொள்ளுகின்றனர் அமெரிக்கர்கள்.

காரணம், ஏதேனும் விபத்து ஏற்பட்டு நமக்கு ரத்தம் உட்செலுத்த வேண்டிய தேவை ஏற்பட்டால், இந்தச் சேமிப்பு நிலையத்தில் நாம் சேமித்து வைத்துள்ள நமது ரத்தத்தையே உட்செலுத்திக் கொள்ளலாம். மற்றவர்களுடைய ரத்தத்தை நம் உடலில் செலுத்துவதை விட நம் ரத்தத்தையே செலுத்திக் கொள்ளுவது மிகச் சிறந்தது என்று டாக்டர்கள் கருதுகின்றனர்.

ஆதாரம்: ''ஸயன்ஸ் டுடே''
தகவல்: வி. சம்பத்குமார்

ஃ ஃ ஃ

குளு குளு அறைக்குரிய குட்டி இயந்திரம் ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இது ஏழு அங்குல நீளம், நாலு அங்குல அகலம், நாலு அங்குல உயரம்தான் உள்ளது. இந்த இயந்திரத்தினுள் அசையும் பாகங்களே எதுவும் இல்லை. விலையும் மலிவு. இதனை ஹோட்டல்கள், ஆஸ்பத்திரிகள், கிடங்குகள் ஆபீஸ்கள், சினிமாக்கள், வீடுகள் போன்ற



எந்த இடத்தில் வேணுமானாலும் கொண்டு போய் வைத்துக் கொள்ளலாம். 10 டிகிரி ஸெண்டிகிரேட் முதல் 5 டிகிரி ஸெண்டிகிரேட் வரை எந்த வெப்ப நிலையை வேணுமானாலும் கொடுக்கவல்லது. குளுமையாக்குவதுடன் புகை, தூசி இவற்றைச் சுற்றுச் சூழலிலிருந்து அப்புறப்படுத்தவும் செய்கிறது இந்த 'ஏர்—கண்டிஷனர்'.



மேற்கு ஜெர்மனியில் அணுசக்தியினால் இயங்கக் கூடிய கப்பல் கட்டப்பட்டிருக்கிறது. ''ஆட்டோஹான்'' எனப் பெயரிடப்பட்டுள்ள இந்தக் கப்பல், கப்பல் போக்குவரத்துத் துறையில் புரட்சியை ஏற்படுத்தும் என நம்பப்படுகிறது. (யூ.பி.எஸ்.)

# தமிழ்க் கோயில்

**''தமிழுக்கு இதோ ஒரு கோயில்'' என்று காட்ட வால்மீகி முனிவரால் புனிதப்படுத்தப்பட்ட திருவான்மியூரில் ஓர் இடம் இருக்கிறது.**

ஐம்பெருங் காப்பியங்கள் பெயரளவில் மட்டுமே உலவி வந்த காலம் அது. பத்துப் பாட்டையோ, சங்க இலக்கியங்களையோ கண்ணால்கூட யாரும் பார்த்திராத காலம். அந்தக் காலத்தில் புதிதாக வெளியிடப்பட்ட கம்பராமாயணப் பிரதி ஒன்றைப் பார்த்து விட்டுப் பண்டார சன்னதியொருவர் ''இதைக்கூட ''புக்கு'' (Book) போட்டு விட்டாரா?'' என்று ஆச்சரியப்பட்டாராம். தமிழ் நூல்களைப் புத்தக வடிவில் கொண்டு வரலாம் என்ற நினைப்பே வியப்பை அளித்த காலத்தில் தமிழ் நூல்களைப் பதிப்பித்த பெருமை ஐயரவர்களுக்கே உரியது.

கறையான் அரித்த ஓலைச் சுவடிகளில் தெளிவின்றி எழுதியிருந்த எழுத்துக்களைப் படித்து, பாடபேதம் பார்த்து, விளக்கம் எழுதுவது என்பது சாமான்யமான காரியமா? அதுவும் யாராவது ஓலைச் சுவடிகளைக் கொண்டு வந்து கையில் கொடுத்தார்களா? ஊர் ஊராகச் சென்று வீடு வீடாக நுழைந்து யார் யாரிடம் என்னென்ன இருக்கின்றன என்பதைக் கேட்டறிந்து கெஞ்சிக் கூத்தாடி அவற்றை வாங்கி வந்தாக வேண்டும்.

ஐயரவர்கள் எழுதியுள்ள, ''என் சரித்திரம்'' என்ற நூலைப் படித்துப் பார்க்கும்போது அவர் எப்படியெல்லாம் சிரமப்பட்டு ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்தார் என்ற விவரம் தெரிய வரும். முதலும் இல்லாமல் பிற்பகுதியும் இல்லாமல் கிடைத்த சுவடிகளை வைத்துக் கொண்டு அவர் பட்ட சிரமமும், பூரணமான சுவடிகளைத் தேடித் தேடி அவர் அலைந்ததையும் படிக்கும் போது நம் உள்ளம் உருகி விடுகிறது. ''ஆகா! எத்தனை தமிழ்ப் பற்று இருந்தால் இத்தனை விடாமுயற்சியுடன் இத்தனை பெரிய காரியத்தைத் தனியாக நின்று சாதித்திருக்க முடியும்?'' என்று எண்ணித் தலை வணங்கத் தோன்றுகிறது.

வீர வைஷ்ணவர்கள் சைவ நூல்களை ஒதுக்கியும் சைவர்கள் வைணவ நூல்களை ஒதுக்கியும் குறுகிய மனப்பான்மையோடு நூல்களைப் படித்து வந்த காலத்தில் ஐயரவர்களோ தமிழ் ஒன்றையே மனத்தில் இருத்தி எந்த மதநூலாக இருந்தாலும் அதைப் புதையலாகக் கருதி வெளியிட்டார். சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி இவையெல்லாம் அவர் பதிப்பித்திருக்காவிட்டால் கறையானுக்கு உணவாகி இருந்த இடம் தெரியாமல் போயிருந்திருக்கும்.

பண்டிதர்கள் டாக்டர் சுவாமிநாதய்யர் நூல் நிலையத்தில் ஏடுகளை ஆராய்கிறார்கள்.

ஐயர் அவர்கள் தாம் இளம் வயதில் தமிழ் கற்கப் பட்ட சிரமங்களை எண்ணி அந்த மாதிரி வருங்காலத்தில் யாரும் கஷ்டப்படக் கூடாது என்று கருதி யிருக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் 'உயிரோடு இருக்கும் போது கவிகளையும், பெரியார்களையும் கொண்டாடுவதில்லை. மறைந்த பிறகு மண்டபம் கட்டுவார்கள்' என்று ஒரு பேச்சு உண்டு. ஆனால் தமிழ்த் தாத்தாவின் விஷயத்தில் அப்படி நடக்கவில்லை என்று நாம் பெருமைப் படலாம்.

அவரைப் புரிந்து கொண்டு பெரியார்கள் எல்லாரும் பாராட்டினார்கள். பத்திரிகைகள் எல்லாம் பாராட்டின. அரசாங்கம் பாராட்டியது. மதத் தலைவர்கள் பாராட்டினார்கள். கல்லூரி மாணவர்கள் கொண்டாடினார்கள். புலவர்கள் பாராட்டினார்கள். ஆசிரியர்கள் பாராட்டினார்கள். அரசர்கள் பாராட்டினார்கள். அயல் நாட்டார் பாராட்டினார்கள். இப்படியெல்லாம் ஏகோபித்த பாராட்டுதலை அடைந்த ஐயரவர்களுடைய வாழ்க்கை நிறைவு பெற்ற பூர்ணமான வாழ்க்கை என்பதில் ஐயமே இல்லை.

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் ஐயரவர்களுக்கு 'மஹா மஹோபாத்யாய' என்ற பட்டம் அளிக்கப்பட்டபோது ஒரு கவிதை இயற்றி மகிழ்ந்தார். ஐயரவர்களுடைய 80வது ஆண்டு விழாவின்போது கல்கி அவர்கள் ''தமிழ்த் தாத்தா ஸ்ரீ உ. வே. சுவாமிநாதய்யர் அவர்களுடைய சமூகத்துக்குப் பேரன் பணிவுடன் எழுதிக்கொள்வது'' என்று ஆரம்பித்துக் கடிதம் எழுதுவது போலக் கட்டுரை ஒன்று எழுதினார். அது முதல் 'தமிழ்ப்பாட்டி' என்ற பெயர் ஔவையாரையே குறிப்பிடுவது போல் ''தமிழ்த் தாத்தா'' என்ற பெயர் ஐயரவர்களைக் குறிப்பிடுவதாயிற்று. ''தமிழ்த் தாத்தா! தமிழ் தா! தா!'' என்று பேரன்கள் கேட்பதாக அமைந்திருந்தது கட்டுரை.

தமிழ் கற்ற பண்டிதர்கள் விளங்காத சொற்களையே அரும் பதவுரை அகராதியிலிருந்து தேடி எடுத்துக் கொண்டு ஒருவருக்கும் புரியக் கூடாதென்று தமிழ் எழுதுவார்கள். இதைக் கண்ட பொதுமக்கள், தமிழ் என்றால் பயப்பட ஆரம்பித்தார்கள். ஆங்கிலம் படிப்பவர்களோ, தமிழ் படிப்பது கேவலம் என்று நினைத்தார்கள். இந்த இரண்டு ஆபத்துக்களிலிருந்தும் தமிழை மீட்டுக் கொடுத்தவர் தமிழ்த் தாத்தாதான்.

அவருடைய வசன நடை எளிமையானது. குழந்தைகள் கூடப் புரிந்து கொள்ளும்படியாகத் தம்முடைய கதையை மிகச் சுவையாக எழுதி யிருக்கிறார்.

1935ஆம் ஆண்டு தமிழ் மக்கள் அவருடைய சதாபிஷேக விழாவைத் தமிழன்னையின் முடிசூட்டு விழாவாகவே கொண்டாடினார்கள். சென்னை 'ஸெனட்' மண்டபத்தில் நடந்த இந்த வைபவம் முடிந்து வெளியே வந்தவுடன் பிரபல அட்வகேட் ஒருவர், ''மூன்று வருஷங்களுக்கு முன் இப்படி ஒரு வைபவம் நடக்கக் கூடும் என்று யாரும் எதிர்பார்த்திருக்க முடியாது'' என்றாராம். தமிழ் நாட்டில் தமிழ் அபிமானம் அவ்வளவு விரைவாகப் பரவுவதற்குக் காரணமாக இருந்தவர்களில் முக்கியமானவர் தமிழ்த் தாத்தா அவர்கள்.

தமிழ்த் தாத்தாவை ராஜாஜி எப்படிப் பாராட்டியிருக்கிறார் பாருங்கள்.

''முற்காலத்தில் வேதங்களையும் இதிகாச புராணங்களையும் வியாசர் எப்படித் தேடித் திரட்டி உருவாக்கித் தந்தாரோ அப்படியே தமிழ் இலக்கிய ரத்தினங்களை ஸ்ரீமான் உ. வே. சாமிநாத ஐயர் திரட்டித் தந்தவர். ஆகையால் ஸ்ரீ சாமிநாதையருக்குத் 'தமிழ் வியாசர்' என்றே நாம் புதுப் பட்டம் இடலாம்....

''தாய் மொழிக்கு இவ்வளவு தொண்டு செய்து பெரும் புகழும் பெற்றிருந்த போதிலும் ஸ்ரீ சாமிநாதய்யருடைய அடக்கமானது ஒப்பில்லாத அரிய குணம்.

''ஸ்ரீ சாமிநாதய்யரின் கல்வி, கடலைப் போன்றது. மெய் வருத்தம் பாராத அவருடைய முயற்சியுடன் எறும்பும் தேனீயுமே போட்டி போடலாம்.''

இத்தகைய பெரியார் சேகரித்து வைத்த பெருஞ் செல்வமாகிய ஏட்டுச் சுவடிகள், கலாக்ஷேத்திரத்தில் அமைந்துள்ள டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையத்தில் உள்ளன.

தமிழ்த் தாத்தாவின் ஞாபகச் சின்னமாக விளங்கும் இந்தத் தமிழ்க் கோவிலில் பல நூறு ஏட்டுச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்தத் தமிழ் புரக்கும் கைங்கரியத்தை ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்கள் செய்து வருகிறார்கள்.



தமிழ்த் தாத்தா டாக்டர் சுவாமிநாதய்யர் நூல் நிலையக் கட்டடம் உருவாகி முடிவுறும் நிலையிலுள்ளது.

பல ஆண்டு காலம் இந்த நூல் நிலையம் அடையாறு பிரும்மஞான சங்கத்தின் கட்டிடத்தில் செயல்பட்டு வந்தது. இப்போது மத்திய அரசாங்கம், சென்னை அரசாங்கம் இரண்டும் அளித்துள்ள உதவியுடனும், பல பெரியார்கள் அளித்துள்ள பொருளுதவியுடனும் திருவான்மியூர் க்ஷேத்திரத்தில் சொந்தக் கட்டிடம் உருவாகி யிருக்கிறது.

இந்த நூல் நிலையக் கட்டிடத் திறப்பு விழா ஏப்ரல் 9ந் தேதி நடைபெறவிருக்கிறது.

இந்த நூல் நிலையத்தைப் பய பக்தியுடன் பேணி வருபவர் பேராசிரியர் ரா. விசுவநாதய்யர் அவர்கள்.

இந்த நூல் நிலையத்தில் இதுவரை பிரசுரமாகாத நூற்றுக் கணக்கான சுவடிகள் இருக்கின்றன. தமிழ்த் தாத்தா அவர்கள் இன்னின்ன புத்தகங்களைப் பதிப்பிக்க வேண்டும் என்று குறிப்பிட்டு வரிசைப்படுத்தி வைத்திருந்த நூல்களை யெல்லாம் பதிப்பிக்க முயன்று வருகிறார்கள்.

இன்னும் சிறந்த நூல்களை ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து வெளியிடவும் ஆசைப்படுகிறார்கள்.

இத்தகைய தகுதியுள்ளதொரு காரியத்துக்குத் தமிழ் மக்களும் இந்த நிலையத்தின் முக்கியத்துவத்தை அறிந்த பெருமக்களும் மனமுவந்து எல்லா வகையிலும் உதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

நாடக
விமர்சனம் :

# நீரோட்டம்

நூற்றுக்கு நூறு இயற்கையான குடும்பச் சூழ்நிலையை அடிப்படையாகக் கொண்ட நாவல்கள் எழுதுவதில் திரு பி. வி. ஆர். திறமை மிக்கவர். இந்நாடகத்திலும் நாம் சந்திக்கும் கதாபாத்திரங்கள் அன்றாட வாழ்க்கையில் நம் கண் முன் பல குடும்பங்களில் பரவி நிற்பவர்கள்தான். இதனால் தானோ என்னவோ, நாடகம் ஆரம்பித்த விநாடியிலிருந்தே பக்கத்து வீட்டுக்காரர்களையோ, எதிர் வீட்டுக்காரர்களையோ நம் வீட்டு ஜன்னல் வழியாகப் பார்க்கும் உணர்ச்சி நமக்கு ஏற்பட்டு விடுகிறது. நாடகம் முடிந்துவிட்டது என்றுகூடத் தெரியாத நிலையில் வாத்திய கோஷ்டியினரின் 'ஜன கண மன' இசைதான் நம்மை எழுப்பி விடுகிறது!

அட்வகேட் பூதலிங்கமாகத் தோன்றும் அநுபவமிக்க திரை நடிகர் டி. எஸ். பாலையாவும், அவர் மனைவியாக வரும் பழம்பெரு நடிகை எஸ். டி. சுப்புலட்சுமியும் ஆரம்பக் காட்சிகளை ஆக்ரமித்துக் கொண்டாலும், அவர்கள் கதைப் போக்கை விட்டு விலகிச் செல்லவில்லை. அதட்டல் மனைவியாகவும் அடங்கிப் போகும் கணவராகவும் சக்கைப் போடு போடுகிறார்கள்.

'இண்டி' பாஷையில் சொல்லப் போனால் இந்த நாடகத்தில் 'வின்' அடிப்பவர் தியாகராஜனின் தகப்பனாராகத் தோன்றும் வி. எஸ். ராகவன்தான்! பிள்ளை படித்துப் பாஸாகி ஐ. ஏ. எஸ். அதிகாரி ஆகவேண்டும் என்ற துடிப்பு; ஆசை நிறைவேறிய ஆனந்தம்; அவன் அந்தப் பதவியை உதறிவிட்டானே என்ற கோபம் ஆகிய பலவித உணர்ச்சிகளையும் மாறி மாறிக் கையாண்டு, கைதட்டலை ஏகமாகப் பெறுகிறார்.

கமலாவாகத் தோன்றும் விஜயராணி அமைதியான பாகத்தை அழகாக ஏற்று நடிப்பில் நற்பெயர் வாங்கினார்.

ஒரு குடும்பக் கதையை மேடையிலும் அப்பழுக்கற்ற 'குடும்பக் கதையாகவே விட்டு வைத்திருக்கும் டைரக்டர் கே. எஸ். வி. வெங்கடராமனுக்கு நாடக வெற்றியில் பெரும் பங்கு உண்டு. ஒன்றிரண்டு கட்டங்கள் உடனடியாகச் சிரிப்பை ஊட்டினாலும், அந்தச் சிரிப்பு ஓய்ந்தபின் விரச உணர்ச்சி நிலவுகிறது. தவிர்க்கலாம்.

குமாரி சச்சு, டி. வி. குமுதினி, வரதாச்சாரி, ரமணன் முதலிய நடிகர்களும் ஒத்துழைத்து நடிக்கிறார்கள். கதாநாயகனுகத் தோன்றும் ஆர். பார்த்தசாரதியின் நடிப்பில் மெருகு ஏற வேண்டும் என்று சொல்வதற்கில்லை. கதாபாத்திரமே மெருகில்லாத ஒன்றுதானே! பாலக்காடு சூழ்நிலையை மணக்கவிட வேண்டும் என்பதற்காகத் தோன்றும் மொட்டைப் பெட்டிஷன் பணிக்கர், மணத்துக்குப் பதிலாக நெடியை வீசுகிறார். தேவையற்ற காட்சி.

சஸ்பென்ஸ், திடுக்கிட வைக்கும் மர்மங்கள் இல்லாத கதை என்று நமக்கு நன்கு தெரிந்திருந்த போதிலும், அவ்வப்போது நடிகர் பாலையா, சோபாவில் உட்காராமல் டீபாயின் மேல் உட்கார்ந்த வேளைகளில், எந்த விநாடியில் அந்த டீபாய் உடைந்து விழுமோ என்ற 'சஸ்பென்ஸ்' நமக்குத் தோன்றாமல் இல்லை!

நாவலாசிரியர் திரு பி. வி. ஆர். தம்முடைய இந்த முதல் நாடகத்தின் மூலமே தாம் ஒரு நல்ல நாடக ஆசிரியராகவும் மாறலாம் என்று காண்பித்துக் கொள்கிறார்.



## உயிர்மேல் ஆசை

ஒரு பணக்கார மூதாட்டியை அவள் சொத்துக்கு ஆசைப்பட்டுத் தீர்த்துக் கட்டி விட நான்கு பேர்வழிகள் தீவிரமாக ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களுடைய முயற்சிகளெல்லாம் தோல்வியடைந்து விடுகின்றன.

அம்மூதாட்டியின் பேரனே சதிகாரர்களுக்குத் துணை புரிவது போல் நடித்து அவர்களைக் கவிழ்த்து விடுகிறான்.

பணக்கார மூதாட்டியாக வரும் கே. பி. சுந்தராம்பாள் அவ்வையாரைத்தான் நினைவூட்டுகிறார். திரைக் கதையைப் பற்றியோ, தாம் ஏற்ற பாத்திரத்தைப் பற்றியோ அவர் பொருட்படுத்தவேயில்லை. 'முருகா, எல்லாம் உன் செயல்' என்றிருப்பவருக்கு மற்ற நினைவுகள் எப்படியிருக்க முடியும்? பாடல்களைக் கணீரென்று பாடியிருக்கிறார்.

இடாத்திரமாயிருக்கும் அசோகன் ஜெயசங்கரிடம் நடுங்கிக் கொண்டிருப்பது பொருத்தமாயில்லை. எல். விஜயலட்சுமி காதல் காட்சிகளில் குஷியாக நடிக்கிறார். மற்ற இடங்களில் வெறும் நடிப்பாயிருக்கிறது. ஜெயசங்கரின் நடிப்பு விசேஷமாகப் பாராட்டிக் கூறும்படியாக இல்லை.

கே. ஏ. தங்கவேலு பெண் வேடம் பூண்டு ஜமாய்க்கிறார். காதல் கடிதம் எழுதச் சொல்லும் இடத்தில் அவருடைய பண்பட்ட நடிப்பு அதியற்புதமாக வெளிப்படுகிறது.

கொஞ்சமும் நம்பமுடியாத சண்டைக் காட்சிகள் தலைவேதனையைத் தருகின்றன.

திரைக் கதை என்று ஒன்றை எழுதி, அதற்குப் பெயர் என்று ஒன்றை வைத்துக் கடைசியாக அதையும் படமென்று துணிந்து தயாரித்திருக்கிறார்களே, அதை என்னவென்று சொல்வது?





# ரூபாய்க்கு மூன்றுபடி அரிசி!

ஆனை.ஸி.குஞ்சிதபாதம்

"ஸார், அந்த ஊர் மண்ணை இந்த ஊரில் எருவாகக் கொண்டு வந்து போடலாம். அப்பேர்ப்பட்ட பொன் விளையும் பூமியாக்கும்" என்று எங்கோ யாரோ பேசுவதைக் கேட்டிருக்கிறோம். நல்ல விளைவு மண்ணின் தன்மையை மட்டும் பொறுத்தது அல்ல. நல்ல விளைவுக்கு லாயக்கில்லாத பூமி என்று எதையுமே சொல்லிவிட முடியாது. மண் அரிப்பினால் கட்டாந்தரையாகிவிட்ட இடங்களிலும் புதிய மண்ணைக் கொண்டு வந்து போட்டு அபரிமிதமாக விளையும்படி ஜப்பானில் செய்திருக்கிறார்கள். மணல் பாங்கான இடங்களிலும் பெட்ரோலியக் கழிவுப் பொருள்களைத் தெளித்துப் பூமியைக் கெட்டிப்படுத்திப் பல நாடுகளில் நெற்பயிர் நிரம்பவும் பலன் தரும்படி செய்திருக்கிறார்கள். உவர், களர் நிலங்களிலும், அமிலத்தன்மை அதிகம் உள்ள நிலங்களிலும் மண்ணைப் பரிசோதித்து, காரத்தையும் அமிலத்தையும் ஏற்றத்தாழ்வு இல்லாமல் சீராக்குவதும் சாத்தியம் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. மண் நெற்பயிர் ஊன்றி வளர்வதற்கான ஒரு சாதனம் மட்டும்தான். வண்டல், கரிசல், களி, செம்மண், உவர் எந்தமண்ணாக இருந்தாலும் மண்ணைப் பரிசோதனை செய்து நெல் வளரத்தக்கவிதம் செவ்வனே திருத்தியமைத்துக் கொள்ள முடியும் என்று விஞ்ஞானம் செயல்படுத்தியுள்ளது.



**நீர்வளம்:** நெல் செழித்து வளர ஏராளமான தண்ணீர் தேவை என்ற எண்ணம் தொன்றுதொட்டு மக்கள் மனத்திலே ஊறியுள்ளது. தண்ணீர் அதிகம் தேவைப்படும் பயிரன்று நெல். அதிகத் தண்ணீரையும் தாங்கிவளரக்கூடிய பயிர் என்று சொல்லலாம். வியட்நாமில் ஓடைகளில் தண்ணீர் குறைந்துள்ள காலத்தில் விதைத்துவிட்டால் நீர்மட்டம் உயர உயர வளர்ந்து கொண்டு விளையும் ஒரு நெல் இனம் இருக்கிறது. நம் நாட்டிலும் மேலைக்கடல் ஓரத்திலே அப்படிப்பட்ட நெல் உண்டு. நெற்களஞ்சியம் என்று கூறப்படும் தஞ்சை மாவட்டத்தில் மாரிக் காலத்தில் பயிர் நீரில் மூழ்குவதனாலேயே விளைவு குன்றிப் போகிறது. பாசன வசதி எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் வடிகால் வசதி. பயிர் தண்ணீரில் மூழ்கா வண்ணம் எப்படி வடிகால் ஏற்பாடு செய்வது என்பது ஒரு நீண்டகாலப் பிரச்னை. பெலிக்ஸ் எஸ். பொன்னம்பெருமா என்ற நிபுணர், தண்ணீரில் நெல் மூழ்குவதனால் என்ன என்ன அனர்த்தங்கள் விளைகின்றன என்று சர்வதேச அரிசி ஆராய்ச்சிக் கழகக் கருத்தரங்கில் நிகழ்த்திய உரை விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் சிந்தனையைக் கிளறி விடக்கூடியது. ஓரிரு அங்குல மட்டத்துக்கு மேல் வயலில் தண்ணீர் தேங்கி நிற்கத் தேவையில்லை. பயிர்ப் பாதுகாப்பு முறையில் வயலில் நீர் மட்டத்தைச் சீராக இருக்கும்படி பார்த்துக் கொள்வது மிகவும் முக்கியமான காரியம்.

**உழவும் நடவும்:** 'அகல உழுவதைவிட

ஆழ உழுவதே சாலச் சிறந்தது' என்னும் பழைமையான அபிப்பிராயம்கூட இன்று மாறுதலுக்கு உட்பட வேண்டியதாகிறது. பயிரின் வேர்முனைகள் எந்த அளவு வரையில் பூமியில் இறங்குமோ, அதற்கும் அதிக ஆழமாக உழுவது வியர்த்தம்தான். எந்த ரக உரமாயினும் நீரில் கரைந்துதான் பயிருக்கு ஊட்டம் அளிக்கிறது. அதிக ஆழம் வரை பூமி கெட்டிப்படாமலிருந்தால் நீரில் கரைந்துள்ள உரம் வேர்முனைகள் நீண்டக்கூடாத நிலைக்கு இறங்கிப் போதுமான போஷாக்கு அளிக்கத் தவறிவிடும். சில வருட காலமாக வரிசையாக நாற்றுக்களை நடுவதும் பழக்கத்துக்கு வந்திருக்கிறது. களையெடுப்பதற்குச் சாதகமாக இருப்பது மட்டுமின்றி சூரிய வெளிச்சம் பயிரின் மீது நன்கு பரவுவதற்கும் இம்முறையால் ஏதுவுண்டு.

**களையும், பூச்சியும்:** களைப்பூண்டுகளின் நுண்ணிய விதைகள் பூமியில் பதுங்கியிருந்து எந்தச் சந்தர்ப்பம் முளைப்பதற்கு வாய்க்கும் என்று காத்துக் கிடக்கின்றனவோ என்று தோன்றுகிறது. வயலில் தண்ணீர் இருந்து கொண்டேயிருந்தால் அவை முளைப்பதில்லை. நம் நாட்டில் வயலில் நீர் தேங்க வைப்பதற்கு ஓர் உபயோகம் அவை களைகளை மண்டிவிட அனுமதிக்காமல் இருப்பதுதான் என்று நிபுணர்கள் கூறுகிறார்கள். அமெரிக்காவில் விமானத்திலிருந்து நெல் விதைகளையும், உரங்களையும் போட்டுச் சாகுபடி செய்யும் அளவுக்கு விவசாயம் வளர்ந்திருந்தும் களைகள் நிலங்களில் வளர விடாமல் செய்வது அங்கு ஒரு பிரச்னையாயிருக்கிறது. களைக் கொல்லிகளான மருந்துகளைத் தெளித்துச் சமாளிக்கிறார்கள் அங்கு. எவ்வளவு சிறப்பான விளைச்சலாக இருந்தாலும் பூச்சிகள் தாக்குமானால் பலன் திருப்திகரமாக இருக்காது. கொடிய விஷமான பூச்சி நாசினிகளைப் பிரயோகிப்பதற்குப் பதிலாக தீங்கற்ற பொருள்களை உபயோகிக்க வேண்டும் என்றொரு புதிய திருப்பம் பயிர்ப் பாதுகாப்பில் ஏற்பட்டிருப்பது வரவேற்கத்தக்கது. ஒரிஸ்ஸாவில் இருக்கும் அரிசி ஆராய்ச்சிக்கூடத்தில் பூச்சி நாசினியாகப் பிளீச்சிங் பௌடரைப் பரிசோதித்து வெற்றிகள் கண்டிருக்கிறார்கள். பயிர்ப் பாதுகாப்புக்கு மிருகங்களை ஒரு காலத்தில் வேட்டையாடிக் கொண்டிருந்த மனிதன் இன்று பூச்சிகளைவேட்டையாடுவதும் விந்தை.

**நெற்பயிரின் உணவு:** ரமணீயமான துங்கபத்திரை நதி தீரத்திலே, ஆந்திரப் பிரதேசத்திலே கர்நூல் மாவட்டத்திலே, எம்மிகனூர்



● முன்பக்கம்: 1. அதிக விளைச்சல் காண விவசாயி அரும்பாடு படுகிறான்.

● இந்த பக்கம்: 1. அந்தமானில் கிழக்கு வங்காளத்திலிருந்து குடியேறியவர்கள் நெல் அறுவடை செய்கிறார்கள்.

● 2. எம்மிகனூரைச் சேர்ந்த திரு எம். கங்கண்ணா 1965 - 66 ஆண்டுக்கான அகில இந்திய நெல் பயிர் விளைச்சல் போட்டியில் வெற்றி பெற்றுக் 'கிருஷி பண்டிட்' என்ற புகழைப் பெற்றார்.

❁ "ரூபாய்க்கு மூன்று படி அரிசி" என்பது கனவல்ல;
❁ நடக்கக்கூடிய காரியம்தான். இதற்குத் தேவை
❁ அதிக விளைச்சல்; அதிக விளைச்சலைத் தரக்
❁ கூடியது புதிபன புகுந்த நெல் சாகுபடி.







“உங்களுக்குக் கண் ஆபரேஷனை நாளைக்கு வைத்துக் கொள்ளலாமா ?”

என்று ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு கங்கண்ணு என்றொரு விவசாயி இருக்கிறார். அவர் தம்முடைய நிலத்தின் ஓர் ஏக்கர் மண்ணின் மாதிரியை விவசாய இலாகா மூலம் பரிசோதனை செய்தார். பாசனமும், வடிகாலும் வசதியாக அமைந்த அந்த நிலத்தை நன்கு உழுதார். கிச்சலிச்சம்பா நெல் விதை விதைத்தார். முப்பது நாட்களில் பிடுங்கி நாற்றை வரிசை நடவு நட்டார். காலாகாலத்தில் பூச்சி மருந்து தெளித்தார். கிழக்கே அஸ்ஸாம் முதல் மேற்கே அமிருதசரஸ் வரையிலும், தெற்கே குமரிமுதல் வடக்கே பத்ரிநாத் வரை பரவியுள்ள நம் பாரத புண்ணிய பூமியில் லட்சோப லட்சம் விவசாயிகள் திறமையாக என்ன என்ன செய்கிறார்களோ அவ்வளவும் செய்தார். அவருடைய அந்த ஓர் ஏக்கர் நிலத்தில் 3834.87 கிலோகிராம் நெல் விளைந்தது. ஸ்ரீ எம். கங்கண்ணு கிருஷி பண்டிட் ஆனார். சுப்பிரமணியம் பரிசாக ஒரு டிராக்டர் அவருக்குக் கிடைத்தது. இது எப்படிச் சாத்தியமாயிற்று? பயிரை ஆரோக்கியமாகப் பாதுகாத்து அதற்குப் போஷாக்காக உணவு அளித்தார். பதினைந்து டிராக்டர் பின் வண்டிகள் நிறைய கம்போஸ்டு, 200 கிலோ ஸூப்பர் பாஸ்பேட், 300 கிலோ கடலைப் பிண்ணாக்கு, 60 கிலோ பொட்டாஷ், 100 கிலோ அம்மோனியம் பாஸ்பேட், 60 கிலோ யூரியா இவ்வளவையும் அளவறிந்து காலமறிந்து பயிருக்கு ஊட்டினார். 632 ரூபாய் பெறுமான உணவை உட்கொண்டு 1886 ரூபாய் பெறுமான தானியத்தை நன்றி உணர்ச்சியுடன் தலையாலே தாங்கித் தந்துவிட்டன நெற்பயிர்கள். போதுமான உரம் இன்றி வேறு என்ன செய்த போதிலும் நெல் விளைவு காண முடியாது என்பது யாருக்குத்தான் தெரியாது? “சாமி, விபூதி பூசியவன் வயலில் இறங்கிக் குறுக்கே போனதில்லை. அவன் வயல் எப்படி விளையும் சாமி?” என்று கிராமக் குடியானவர் பேசுவதை நாம் கேட்பதில்லையா? இப்படி உரம் இடுவதிலும் விவசாய விஞ்ஞான ஆராய்ச்சி கருத்து மாற்றத்தை உண்டாக்கத் தொடங்கிவிட்டது. கம்போஸ்டு, பிண்ணாக்கு, தொழு எரு, பசுந்தாள் உரம் முதலிய பிராணிகளினின்றும் தாவரங்களினின்றும் கிடைக்கும் ஜீவ அங்கக உரங்கள் ரசாயன உரங்களைப் போலப் பலனளிக்கக் கூடியவை அன்று என்றும், அவற்றை நெற்பயிருக்கு இடவேண்டியது அத்தியாவசியமில்லை என்றும் நவீன விவசாய விஞ்ஞானம் கூறுகிறது. சர்வதேச அரிசி ஆராய்ச்சிக் கழகக் கருத்தரங்கு ஒன்றில் இம்முடிவு வெளியிடப்பட்டது.

இது பகுத்தறிவுக்கு ஏற்ற முடிவுதான் என்பது சிந்தித்தால் தெரியும். எந்த உரமாயிருந்தாலும் தண்ணீரில் கரையக் கூடியதையே நெற்பயிர் உறிஞ்சி உட்கொள்ளும். நெற்பயிர் வளர்ச்சிக்கு நைட்ரஜன் முக்கிய உணவு. காற்றிலே உள்ள நைட்ரஜன் தண்ணீரில் கரையும் தன்மை உள்ளது அல்ல. அதிக அழுத்தத்தில் அதைச் சூடாக்கித் தண்ணீரில் கரையக் கூடிய விதம் ஓர் இணைப்புப் பொருளுடன் இணைத்து வைப்பதே ரசாயன எருவின் அடிப்படைத் தத்துவம். ஜீவ அங்ககக் கழிவுப்பொருள்களிலிருந்து கிடைக்கும் நைட்ரஜனைவிட ரஸாயன எருவிலிருந்து கிடைக்கும் நைட்ரஜன் சுலபமாக ஜீரணமாகக் கூடியது. ரஸாயன எருக்களில் அம்மோனியம் ஸல்பேட்டில் உள்ள கந்தக அம்சம் பயிருக்கு நல்லது அல்ல; அம்மோனியம் நைட்ரேட்டும் நைட்ரஜன் சத்தை இழக்கும் தன்மையது. நைட்ரஜன் சத்துள்ள ரஸாயன உரங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது யூரியா. நைட்ரஜனுடன் பாஸ்பரமும், பொட்டாசியமும் கூடவே இருந்தால்தான் பயிர் வளர்ச்சி சிறப்பாக இருக்கும் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**புதிய நெல் விதைகள்:** ஆனைகட்டிப் போரடித்த செந்தமிழ் நாட்டினிலே இன்று இருபத்தைந்து லட்சம் ஹெக்டேர் நிலங்களில் விளைகின்ற நெல்லின் சராசரி விகிதம் ஹெக்டேருக்கு 1480 கிலோகிராம்கள் என்று கணக்குப் போட்டுச் சொல்லப்படுகிறது. ஸ்பெயின், இத்தாலி, ஜப்பான், ஆஸ்திரேலியா முதலிய நாடுகளின் நெல் விளைச்சலுடன் ஒப்பிடும்போது நாம் மிகவும் குறைவாகவே பலனடைகிறோம் என்பது தெளிவாகிறது. இத்தனைக்கும் நம் நாட்டு விவசாயிகள் மிகுந்த உழைப்பாளிகள். நெல் சாகுபடி முறைகளை அபிவிருத்தி செய்வதனால் எந்த நாட்டுக்கும் சரிநிகர் சமானமாகச் சொல்லக்கூடிய அளவு நாம் நெல் கண்டு முதல் செய்துவிட முடியும். க்ஷேத்திரம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் பீஜம். நெல் வகைகளை ஜப்பானிகா நெல் என்றும், இண்டிகா நெல் என்றும் பொதுப்படையாக இனம் பிரித்துச் சொல்கிறார்கள். ஜப்பானிகா நெல் குட்டையாகவும், அழுத்தமாகவும் கரும் பச்சை நிறத்தில் நிமிர்ந்த செங்குத்தான இலைகளுடனும் வளரக் கூடியது; அதிக உரத்தை உட்கொண்டு அதிகத் தான்யத்தையும் தரவல்

லது. இண்டிகா நெல்லுக்கு அதிக உரம் இல்லாததினால் தழைந்து சாய்ந்துவிடக் கூடும். இண்டிகா நெல்லை ஜப்பானில் விதைத்தால் பயிர் வளரும்; கதிர் வருவது கடினம். ஜப்பானிகா நெல்லை நம் நாட்டில் விதைத்தால் அதிக உஷ்ணத்தால் சீக்கிரமே பயிர் வளர்ந்து முதிர்ச்சியடைவதனால் மிகச் சின்னஞ்சிறு கதிர்களுடன் சொற்பப் பலனே தரும். கட்டாக் அரிசி ஆராய்ச்சி நிலையத்தில் மகரந்தச் சேர்க்கை மூலம் ஜப்பானிகா நெல்லையும் இண்டிகா நெல்லையும் இணைத்துப் புதிய ரக நெல் உண்டாக்குவதற்கான முயற்சி 1950 முதலே நடைபெற்று வந்தது. இதன் விளைவாக இன்று ஆடுதுறை 27 என்று பிராபல்யமடைந்துவிட்ட நெல் கிடைத்தது அற்புதமான சாதனை என்று சொல்ல வேண்டும். ஜப்பானிகா — இண்டிகா நெல் இந்திய விவசாய விஞ்ஞானிகளின் திறமையைப் பல நாட்டினரும் பாராட்டிப் புகழும் வாய்ப்பைத் தேடித் தந்து விட்டது. ஜப்பானிய நோரின் 8 நெல்லையும் இந்திய ஜி. இ. பி. 24 கிச்சிலிச்சம்பா நெல்லையும் இணைத்த இந்த நெல் கல்ச்சர் நெம்பர் 2914 என்றால் அதற்கு முன்னால் எவ்வளவு பரிசோதனைகள் செய்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்வதும் சுலபம். நூற்றைந்து நாட்களில் பலனளிக்கும் இந்த அமோக விளைச்சல் ரகம் நம் நாட்டில் அரிசிப் பஞ்சத்தைப் போக்குவதிலே முக்கிய பங்கு வகிக்கும் என்பதில் ஐயமில்லை. ஜப்பானிய நெல் ரகங்கள் அப்படியே நம் ஊரில் கொண்டு வந்து விதைத்தால் நன்கு விளையாது.

சர்வதேச அரிசி ஆராய்ச்சிக் கழகம் தாய்வானில் (பார்மோஸா) விளையும் ஒரு குட்டை ரக நெல்லையும், உயர்ந்து வளரும் வெப்ப மண்டல இண்டிகா நெல்லையும் இணைத்து ஐ. ஆர். 8 என்ற வித்தை நெல்லைத் தயாரித்து அபரிமிதமாக நெல் விளைச்சலைப் பெருக்கியிருக்கிறது. ஆஸ்திரேலியாவின் ஒய். ஆர். எல். 1, 2 என்ற நெல் ரகங்கள் ஹெக்டருக்குப் பதினேந்து டன்கள் விளைகின்றன. அவைகளும் நம் நாட்டுக்கு ஏற்றவண்ணம் பயிரிடப் பரிசோதனை நடைபெறுவதாகத் தெரிகிறது.

நெல்விதைகள் ஒரே ரகத்தைச் சேர்ந்தவைகளாக இல்லாமல் கலந்து விட்டால் பலன் நன்றாக இராது. ஒரு நெல்லைவிட இன்னொரு நெல் பலனளிப்பதில் கால வேறுபாடு ஏற்படும்; நீண்ட காலப் பயிரான நெல் கதிர் வந்து முதிர்ச்சியடையாமல் இருப்பதனாலும், குறுகிய காலப் பயிரான நெல் பழுத்து உதிர்வதனாலும் இருவேறு நெல்விதைகள் கலந்து விடுவதனால் விளைச்சல் குறைந்துவிடும். மேலும் ஒரே வயலில்கூட மிக முதிர்ச்சியடைந்த நெல்லும், முற்றாத நெல்லுமாக அறுவடையில் கிடைக்கக்கூடும்; அந்த விதைகளும் திருப்தியான பயிர் வளர்ச்சிக்கு ஏற்றதாக இரா. ஆகவே, சமமான அளவும் எடையும் உள்ள நெல்லை மட்டும் விதைக்காகத் தேர்ந்தெடுப்பது முக்கியம். அமெரிக்காவில் இயந்திர சாதனங்கள் மூலம் விதைகளைத் தூசுதும்பு இல்லாமல் சுத்தப்படுத்தி நூற்றுக்கு நூறு சதவிகிதம் நன்கு முளை வரக்கூடியதாகச் சேமித்து அரசாங்க அத்தாட்சிப் பத்திரத்துடன் விற்பனை செய்யும் ஸ்தாபனங்கள் உள்ளன. ரெக்ஸோரா, பெல்லிபாட்னா, செஞ்சுரி பாட்னா, புளுபான்னட் என்ற நெல் விதைகள் விவசாயிகள் நிம்மதியுடன் வாங்க ஏற்ற விதம் விற்பனை செய்யப்படுகின்றன. திருவாரூரிலும் இம்படிப்பட்ட ஒரு மில் ஏற்பட்டிருப்பது விவசாயிகளுக்குப் பெருமகிழ்ச்சி அளிப்பதாகும். அரசாங்கமும் விவசாயிகளும் ஒத்துழைத்து வளர்ந்து வரும் விஞ்ஞான முறைகளைப் பயன்படுத்திக் கொண்டால் நாட்டில் எப்படிப் பஞ்சம் தலைவிரித்தாடும்? நெல் விளைச்சல் நன்றாக இருந்தால் விலையும் குறையும் அன்றோ? ரூபாய்க்கு மூன்றுபடி அரிசி தாராளமாகக் கொடுக்க முடியும். இதிலே அதிசயோக்தி எதுவும் இல்லை. ரூபாய்க்கு மூன்று படி அரிசி கிடைக்கச் செய்யக்கூடிய திறன் நம்முடைய விவசாய விஞ்ஞானிகளிடம் நிச்சயம் உண்டு. அந்த சுபிட்சகாலம் வந்து விட்டது என்றே நம்புவோமாக!

---

## இப்படியும் நடந்தது!

எடின்பரோ நகரத்திலிருக்கும் ஸாட்டன் சிறையில் சமீபத்தில் ஒரு விசித்திரமான சம்பவம் நடந்தது. ஜெயிலிலிருந்து கைதிகள் திருட்டுத்தனமாகத் தப்பி வருவதைத்தான் நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் நள்ளிரவில் யாருக்கும் தெரியாமல் இந்தச் சிறையின் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே வந்தான் ஒரு மனிதன்! வில்லியம் மாக்டனால்ட் என்ற அந்த 45 வயது மனிதன் பிடிபட்டதும் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டான். ''இந்தச் சிறைக்குள் என் நண்பர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பிடித்தமான சிகரெட்டுகள், பீர், புகையிலை, பிஸ்கட்டுகள் ஆகியவைகளைக் கொடுப்பதற்காகவே நான் வந்தேன்'' என்றான் அவன்!




ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸ். தகவல்: கே. ராமச்சந்திரன்



# இவரல்லவோ காப்டன்

**மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டியின் காப்டனாகவும் தலைசிறந்த 'ஆல்-ரௌண்டராக'வும் திகழ்ந்த பிராங்க் வொரல் காலமானார் என்ற செய்தி கிரிக்கெட் உலகைத் துக்கத்தில் ஆழ்த்தியது.**

மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டியினர் 1950–51ம் ஆண்டில் ஆஸ்திரேலியாவுக்கு விஜயம் செய்திருந்தனர். இந்தப் பந்தயத்தின் போது ஏதேனும் ஒரு சுவையான நிகழ்ச்சி நடக்காதா என்று ஆவலுடன் பத்திரிகை நிருபர்கள் எதிர்பார்த்து டைப்ரைட்டரில் கைவைத்துக் கொண்டு காத்திருந்தனர். ஸோபர்ஸ் ஆடிக் கொண்டிருந்தார். அம்பயர் எல். பி. டபிள்யூ. என்று கூறி 'அவுட்' கொடுத்து விட்டார்.' ஸோபர்ஸ் அந்த 'அவுட்டை' ஏற்காமல் தயங்கியபடியே நின்று கொண்டிருந்தார். பத்திரிகைக் 'கிரிடிக்'குகள் இதைப் பற்றி விளாசித் தள்ள டைப்ரைட்டரில் கையை வைத்துவிட்டனர். அடுத்த பக்கத்தில் நின்று ஆடியவர் மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டியின் காப்டன். உடனே காப்டன் ஒரு முறை ஸோபர்ஸை முறைத்து விட்டுத் திரும்பினார். அடுத்த கணம் ஸோபர்ஸ் மைதானத்தை விட்டு முணு முணுத்தபடி நகர்ந்தார். உடனே காப்டன் தம் கோஷ்டி ஆட்டக்காரர்களை அருகே விளித்து, "அம்பயர் 'அவுட்' கொடுத்து விட்டால் உடனே நீங்கள் அம்பயர் முடிவுக்குத் தலைவணங்கிச் சென்றுவிட வேண்டும். அவுட்டா இல்லையா என்று யோசித்து நின்று கொண்டிருக்கக் கூடாது" என்று கட்டளை யிட்டார். இந்தக் கட்டளையை மேற்கிந்திய ஆட்டக்காரர்கள் மற்ற ஆஸ்திரேலியப் பந்தயங்களில் மறந்து விடவில்லை. அதன் பிறகு அவுட்டான மேற்கிந்திய கிரிக்கெட் பாட்ஸ்மென்கள் அம்பயர் கை தூக்குவதற்கு முன்பே தாங்களாகவே மைதானத்தை விட்டு வெளியேறத் தொடங்கினார்கள். இதனால் இரு கோஷ்டிகளிலுமே நல்லுறவு பெருகியது. இப்படி மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர்களைக் கண்ணியமாக நடந்து கொள்ளச் செய்தவர் வொரல். 'இவரல்லவோ காப்டன்' என்று உலகம் முழுவதும் போற்றிப் புகழும் பிராங்க் வொரல் இவ்வுலகை விட்டு மறைந்து விட்டார். அகில உலகமும் அவரது மறைவுக்காகக் கண்ணீர் வடித்தது.

வொரல் பிறந்தது 1924ம் ஆண்டில். சிறுவன் வொரலின் வீடு எம்பயர் கிரிக்கெட் மைதானத்துக்கு எதிரே இருந்தது. சின்னஞ் சிறு வயதிலேயே அந்த மைதானத்தில் நடக்கும் ஆட்டங்களைக் காணுவதில் அவனுக்கு ஆர்வம் அதிகம். நான்கு வயது மூத்தவரான லிவிங்ஸ்டனுடன் எம்பயர் மைதானத்துக்குக் கிரிக்கெட் பந்தயங்களைக் காணச் செல்லுவான் வொரல். அவனது தந்தை வாணிபத் துறையில் ஈடுபட்டிருந்ததால் அவர் கிரிக்கெட் பந்தயங்களுக்கு வருவது அபூர்வம். 1930ம் ஆண்டில் வொரலுக்கு ஒரு சகோதரி பிறந்தாள். இதன் பிறகு தாயார் நியூயார்க் நகரில் வசிக்கச் சென்றுவிடவே வொரலும் லிவிங்ஸ்டனும் தங்கள் பாட்டியுடன் இருந்தார்கள். வொரலின் இளமைக் கல்வி ரோபக் எலிமெண்டரிப் பள்ளியில் தொடர்ந்தது. சைக்கிளில் செல்லும்போதும் தெருக்களில் ஓடும் போதும் அவன் சட்டை வாலைப் போல் பின்னால் தொங்கும். பாண்டுக்குள் சட்டை அடங்கி யிருந்த நாளே கிடையாது. அவனுக்குப் பொழுதுபோக்கு, தன் பள்ளித்



தோழர்களுடனும் ஒரு கூடை நிறைய ஆரஞ்சுப் பழம், வாழைப் பழம், அன்னாசிப் பழம் ஆகியவற்றுடனும் வீட்டுக் கூரை மீது உட்கார்ந்து கொண்டு பழங்களை ருசித்துச் சாப்பிட்டபடியே எம்பயரில் நடக்கும் கிரிக்கெட் ஆட்டத்தைக் காணுவதுதான்.



ரோபக் பள்ளியிலிருந்து கோம்பர்மெர் பள்ளிக்குச் சென்றபோதுதான் வொரலுக்குக் கிரிக்கெட் ஆடவே வாய்ப்புக் கிட்டியது. அவனது ஆசிரியர் வில்லியம்ஸ், பிராங்கின் பந்து வீச்சுத் திறமையைக் கண்டு அவனுக்கு முதல் கோஷ்டியில் இடம் கொடுத்துவிட்டார். எத்தனையோ வயதான பையன்கள் 'டீமி'ல் இடம் பெறத் தவம் கிடந்தபோது வொரலுக்குக் கிடைத்தது அவன் அதிர்ஷ்டம். முதல் பந்தயத்தில் அவன் அரை நிஜார் அணிந்து ஆடினதை ரஸிகர்கள் வேடிக்கை பார்த்தார்கள். வொரல் படிப்பிலே கெட்டிக்காரனானாலும் கட்டுப்பாடு அவனுக்குக் கட்டோடு பிடிக்காது. கிரிக்கெட் பயிற்சிக்கு அவனை ஆசிரியர்கள் தேடு தேடு என்று தேடி அலைவார்கள். வொரல் எங்கோ ஒரு மூலையில் சலவைக் கல் ஒன்றைப் பந்தாகவும் ஏதோ ஒரு மரக் கட்டையை மட்டையாகவும் வைத்துக் கொண்டு விளையாடிக்கொண்டிருப்பான்.

வொரலும் அவனுடைய தோழர்களும் எம்பயர் மைதான நிர்வாகி ஒருவரைக் 'காக்காய்' பிடித்து வைத்திருந்தார்கள். அவர்களுக்கு மைதானத்தில் ஒரு மூலையில் 'பிச்' அமைத்து ஆட அனுமதி தந்தார் அவர்; ஆனால் ஒரு நிபந்தனையோடு. அருகிலுள்ள வயலில் உழுவதற்கு வொரலும் அவனது தோழர்களும் உதவி புரிய வேண்டும். இப்படியாக எம்பயர் மைதானத்துக்குள் புகுந்த வொரல் டெஸ்ட் ஆட்டக்காரர்களான மார்டின்டேல், வில்லியம்ஸ் ஆகியோர் அங்கு பயிற்சிக்காக வருவதைக் கண்டான். அவர்களுக்கு உதவும் வகையில் பந்து வீசும் வாய்ப்பைப் பெற்றான்.

வொரலுக்குப் பள்ளிக்கூடத்தில் ஒரு சோதனை ஏற்பட்டது. ஒரு நாள் தலைமை ஆசிரியர் அவனைக் கூப்பிட்டு, "நீ இந்தப் பள்ளியின் கிரிக்கட் கோஷ்டியில் இடம் பெற்றிருப்பதால் என்ன வேணுமானாலும் செய்யலாம், கேட்பார் கிடையாது என்று எண்ணிவிட்டாய்! அது நடக்கவே நடக்காது!" என்று பொரிந்து தள்ளினார். வொரல் அப்படி ஒன்றும் தவறு செய்துவிடவில்லை. அவன் மீது வெறுப்புக் கொண்ட ஓர் ஆசிரியர் செய்த துவேஷப் பிரசாரத்தினால் ஏற்பட்டது இந்தச் சோதனை. ஆனாலும் விபரீதம் ஒன்றும் நிகழவில்லை.



ஒரு நாள் பள்ளிக்கூடப் பந்தயத்தில் வொரல் ஆடி இரு சதங்களை எடுத்தான். அவனது ஆசிரியர் பெருமைப் படுவதற்குப் பதிலாக, "நீ ஏன் இன்னும் ஆடிக் கொண்டிருக்கிறாய். 'அவுட்'டாகி மற்றொருவனுக்கு ஆடச் சந்தர்ப்பம் கொடேன்!" என்றார்!

ஒரு கிரிக்கெட் பந்தயம் நடந்து கொண்டிருந்தது. வொரலுடைய பள்ளிக்கூடக் கோஷ்டிதான் வெற்றிபெற்று விடும் என்பது உறுதியாகி விட்டது. இனி தான் ஆட வேண்டியிருக்காது என்பதை அறிந்து கொண்டு வொரல் காப்டனிடம் அனுமதி பெற்று, ஒரு சினிமாப் பார்க்கச் சென்றான். வழியில் அவனிடம் வெறுப்புக் கொண்ட ஆசிரியரைச் சந்திக்கும்படியாகி விட்டது. அவர் மறு நாள் தலைமை ஆசிரியரிடம் கோள் மூட்டி விட்டார். "ஆட்டம் முடியும் வரை எந்தக் காரணத்தை முன்னிட்டும் அவன் மைதானத்தை விட்டு அகன்றிருக்கக்கூடாது!" என்று இரைந்த தலைமை ஆசிரியர் வொரலை 'சஸ்பெண்ட்' பண்ணிவிட்டார். 1940ம் ஆண்டில் அப்பள்ளியின் கிரிக்கெட் கோஷ்டி ஒரு முதல்தரப் போட்டியில் கலந்து கொள்ளவிருந்தது. கடவுளாகப் பார்த்து வொரலுக்கு ஒத்தாசை செய்வது போல இருந்தது:— தலைமை ஆசிரியர் உடல் நோயுற்று ஓர் ஆபரேஷனுக்காக நியூயார்க் நகரத்துக்குச் சென்று விட்டார்! இந்தத் தருணத்தில் வொரலின் மீதிருந்த 'சஸ்பெண்ட்' உத்தரவு நீக்கப்பெற்றது. இல்லாவிட்டால் அகில உலகக் கீர்த்தி பெற்ற ஆட்டக்காரராக வொரல் உயர்வது சாத்தியமா என்பதே சந்தேகம்.



1943ம் ஆண்டில் வொரல் பார்படாஸ் கோஷ்டியில் பௌலராக டிரினிடாட் கோஷ்டிக்கெதிராக ஆடச் சென்றார். ஆட்டத்தின் முடிவில் ஒரு தேர்ந்த பாட்ஸ்மேன் என்ற புகழைப் பெற்றார்.

பிராங்க் வொரல் படிப்பு முடிந்ததும் அந்தப் பள்ளியிலேயே போதிக்கும் பணியை மேற்கொண்டார். இது அவருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. டிரினிடாட் சென்று தம் அதிர்ஷ்டத்தைச் சோதிக்க நினைத்தார் வொரல். ஆனால் பிறந்த இடமே மேலென்று தோன்றி விட்டது. எம்பயர் கிரிக்கெட் கிளப்பில் சேர்ந்து கிரிக்கெட் ஆட்டத்தை வளர்த்தார். வாழ்க்கையை ஓட்ட இன்ஷூரன்ஸ் ஏஜண்டாகப் பணி புரியலாம் என்று கருதினார். கிரிக்கெட் ஆட்டத்தில் சதம் சதமாக எடுத்தாரே தவிர இன்ஷூரன்ஸ் தொழிலில் பூஜ்யராகத் திகழ்ந்தார். கடைசியில் தமக்கும் அந்தத் தொழிலுக்கும் ஒத்து வராது என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

1948ல் எம். ஸி. ஸி. கிரிக்கெட் கோஷ்டிக்கெதிராக வொரல் நன்றாக ஆடியதால், வொரலை இங்கிலாந்துக்கு அழைத்தனர். அவர் 'புரொபஷனல்' கிரிக்கெட் ஆட்டக்காரராகும் வாய்ப்புக் கிட்டியது. மத்திய லங்காஷயர் லீக்கின் புரொபஷனல் ஆட்டக்காரரானார். இங்கிலாந்திலுள்ள 'பிட்ச்', சீதோஷ்ண நிலை எல்லாமே அவருக்குப் புதுசு. ஐந்நூறு பவுன் அவருக்கு முதல் சீஸனுக்குக் கொடுக்க முன்வந்தனர். மேற்கிந்தியத் தீவிலிருந்து வந்து சேரும் செலவு, தங்கும் அறை முதலிய வசதிகளையும் அவருக்குச் செய்து கொடுத்தனர். புரொபஷனல் கிரிக்கெட் ஆட்டக்காரர் வொரல் முதல் லண்டன் கிளப் பந்தயத்தில் எடுத்த ரன்கள் எத்தனை தெரியுமா ? பூஜ்யம்! பாப் பைப் என்கிற பந்து வீச்சு நிபுணர் அவரை 'டக்'கில் அனுப்பி வைத்து விட்டார். ஆட்டமிழந்து வந்த வொரலுக்கு ஸ்டேடியத்தில் மாணவர்கள் இங்கிலாந்து மைதானத்தில் எப்படி கிரிக்கெட் ஆட வேண்டும் என்று கற்றுக் கொடுத்தார்களாம் !

வொரல் புரொபஷனல் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் போதே மான்செஸ்டர் சர்வகலாசாலையில் பொருளாதாரப் படிப்பை மேற்கொண்டார். இதனால் மேற்கிந்திய சர்வகலாசாலையில் வார்டன் பதவியைப் பெற்றார்.

'இவன் தோல் கறுப்பாம், அவன் தோல் வெள்ளையாம்' என்ற நிறப் பிரச்னை மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டியையும் ஆட்டிப் படைத்திருக்கிறது ஒரு காலத்தில். கறுப்பர்களை ஆட்டத்தில் சேர்த்துக் கொள்ளலாம், ஆனால் வெள்ளையனே அவர்களுக்குத் தலைமை தாங்க வேண்டும்' என்ற வர்ண பேதத்தினால் வொரலுக்குக் காப்டன் பதவியா, அலெக்ஸாண்டருக்குக் காப்டன் பதவியா என்ற பிரச்னை எழுந்தது. வொரலின் அபார ஆட்டத் திறமையும், அவரது பண்பும் அவருக்கே காப்டன் பதவியைத் தேடித் தந்தன

''மேற்கிந்தியக் கிரிக்கெட் குழுவின் டெஸ்ட் பந்தயத் தோல்விகள் பலவற்றுக்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்து பார்த்தேன். 1958ம் ஆண்டில் எனக்குத் திடீரென்று ஒரு நாள் காரணம் புரிந்தது. சீட்டு விளையாட்டுதான்! கையில் சீட்டுக்களை ஏந்தி, புகை சூழ்ந்த அறையில் எனது கிரிக்கெட் தோழர்கள் ஆடத் தொடங்கினால் சுகாதாரத்துக்குக் கெடுதி மட்டுமல்ல, அவர்கள் மனத்தில் குழப்பமும் ஏற்படும். மேலும் மற்றவர்கள் கேலி செய்யும் பொழுது அவர்கள் மனம் தளர்ந்துவிடும். ஆகவே, 1961ம் ஆண்டில் காப்டன் பதவியிலிருக்கும் போது ஆட்டக்காரர்கள் யாரும் இந்தச் சீட்டு விளையாட்டில் ஈடுபடக் கூடாது என்று தடை விதித்தேன். ஆஸ்திரேலியாவில் மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டியினரின் திறமையான பீல்டிங்குக்கு இந்தச் சீட்டு ஆட்டத் தொந்தரவு இல்லாததே காரணமாகும்.''

காப்டன் வொரல் தம் அநுபவத்தைப் பனிச் சென்று ஒளிவு மறைவின்றிச் சொல்கிறார்.

மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் ஆட்ட நடுவில் தவறு செய்துவிட்டால், காப்டன் வொரலின் அருகில் வந்து அவரது கையைக் குலுக்குவார்கள். அவர்களது வாய் பேசாது. அவர்களுடைய மௌனமே காப்டனின் மன்னிப்பைக் கோரும். காப்டன் வொரல் சமயம் வரும்போது தம் கோஷ்டியினரின் தவறுகளைச் சுட்டிக்காட்டி அவர்களைத் திருத்தத் தயங்குவதில்லை.

வொரல் ''ஆல்ரௌண்டர்''. டெஸ்ட் பந்தயங்களில் அவர் எடுத்த சதங்கள் அவரது பாட்டிங் திறமைக்குச் சான்று பகருகின்றன.

மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டி இன்று அகில உலக கிரிக்கெட் மன்னர்களாக விளங்குவதற்கு வழி வகுத்தவர்களில் ஸர் பிராங்க் வொரல் முதன்மையானவர். மேற்கிந்திய கிரிக்கெட் சரித்திரத்தில் வால்காட், வீக்ஸ், வொரல் என்ற மூன்று கிரிக்கெட் மன்னர்களும் சிறப்பான இடம் பெற்றிருப்பார்கள். 1963ஆம் ஆண்டில் தம் ஆட்டம் உச்சத்திலிருக்கும் போது ஓய்வுபெற்றுக் கொண்டார். கிடைத்தற்கரிய விஸ்டன் கோப்பை வொரலை வந்தடைந்தது. அதைவிட அகிலஉலக மக்களின் மனத்தினில் ஒரு நிரந்தர இடத்தைப் பெற்றார். கிரிக்கெட் உள்ளவரை வொரலின் பெயர் நிலைத்திருக்கும். — **குண்டுமணி**









சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப் பட்ட திரு சி. பா. ஆதித்தனாரை ஆளுங் கட்சித் தலைவரும், எதிர்க் கட்சித் தலைவரும் இருக்கைக்கு அழைத்துச் சென்று அமர்த்தினார்கள்.

''கோட்டைக்குப் போகணும். பலகாரம் ஆயிடுச்சா...இல்லே வெளியே பார்த்துக்கிடவா?''

''எந்தக் கோட்டையைப் பிடிக்கப் போறீங்களாம், இத்தினி பரபரப்பு...?''

''கோட்டையைப் புடிக்கறதா? இப்போ அது நம்ம கையிலேதானே இருக்குது. தெரியாதா உனக்கு? சரி... சரி... நேரமாயிடுச்சு எனக்கு. அப்புறம் என் இடத்தை நான் கோட்டை விட்டுவிட வேண்டி வரும்... நான் வரேன்.''

தேர்தலுக்குப் பிறகு தமிழகச் சட்ட மன்றத்தின் முதல் கூட்டம் ஆரம்பமாக இருந்ததால் நகர மக்களிடையே பரபரப்பும் சுருசுருப்பும் காணப்பட்டன. தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் ஆளும் கட்சி ஆசனத்திலே அமர்ந்திருப்பதைக் கண்டு ஆனந்திக்கப் பொதுமக்களும் கோட்டையை நோக்கிப் படையெடுத்திருந்தார்கள்.

இருபது வருட காலமாக ஒரே இடத்தில் உட்கார்ந்திருந்தவர்களைப் பார்த்தும், அவர்கள் பேசிய பேச்சுக்களைக் கேட்டும் அலுத்துப் போன மக்கள் இம்முறை சட்ட மன்றம் மாற்றுக் கட்சியினரின் கையிலே எப்படி இயங்கப் போகிறது என்பதைக் காணுவதில் ஆர்வம் கொண்டதில் வியப்பில்லை.

பார்வையாளர்களைத் தாராளமாக அனுமதிக்கும்படி ஆட்சியாளர் ஆணையிட்டிருந்ததால் மக்கள் கூட்டம் அலைமோதிக்கொண்டிருந்தது. அன்று சபாநாயகர் தேர்தல் வேறு. சபாநாயகர் தேர்தலின் முடிவு முன்பே தெரிந்ததுதானென்றாலும் அதைக் காணக் கூட்டத்தினரிடையே ஏற்பட்டிருந்த தவிப்பு சட்டமன்றக் காவலர்களுக்குத் திகைப்பூட்டிக் கொண்டிருந்தது.

நெருக்கியடித்துக் கொண்டு நின்ற அத்தனை பேரிடமும் மன்றத்தினுள் புகுவதற்கான அனுமதிச் சீட்டு இருந்தது. அத்தனை மக்களையும் அனுமதிப்பதானால் மன்றத்திலே இடம் கிடையாது. ஆர்வத்தோடு வந்துள்ள பொதுமக்களை ஏமாற்றத்துடன் திருப்பியனுப்பக் காவலர்களுக்கே விருப்பமில்லை. ஆகவே பகுதி பகுதியாக உள்ளே அனுமதித்துப் பதினைந்து நிமிஷங்கள் அவர்களைப் பார்வையாளர்களாக்கிப் பிறகு வெளியே அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

''சார்! இது லேடீஸ் காலரி. நீங்க அந்தப் பக்கத்து வழியாகப் போகணும்.''

''வரிசையாக நில்லுங்க. சத்தம் போடாதீங்க. எல்லோரையும் உள்ளே விடச்சொல்லி உத்தரவு. ஆனால் பொறுமையாக இருக்கணும்.''

''சபாநாயகர் ஓட்டுப் பதிவு நடந்துடிச்சாப்பா?''

# சட்ட சபையில் ஒரு நாள்

''வோட்டுக்களை எண்ணிக்கிட்டிருக்காங்க. ஏன் சார் இப்படிப் பறக்கிறீங்க?''

தரை முழுதும் பச்சை விரிப்புக்கள், பச்சைக் குஷனு லான இருக்கைகள், பச்சை நிறத்தில் பேப்பர் வெயிட்டுகள் — பசுமையான எண்ணங்களை உண்டாக்க வேண்டுமென்பதற்காகத்தானே! பகலையும்பளிச்சென்று காட்டும் லஸ்தர் விளக்குகள் ஏராளம். ஒவ்வோர் அங்கத்தினரும் தங்கள் இடத்திலிருந்தே பேச வசதி யாக முன்னால் மைக். அதே போலப் பார்வையாளர் பகுதியிலும் அவர்கள் இடத்திலிருந்தபடியே மன்ற நடவடிக்கைகளை ஸ்பஷ்டமாகக் கேட்க ஏராளமான ஒலிபெருக்கிகள் நிரந்தரமாக அமைக்கப்பட் டிருக் கின்றன.

''இதே சுவரிலே மாட்டப்பட்டிருக்கிற படங்கள் யாருடையவை தெரியுமா?''

''இங்கே இருந்து என்ன தெரியுது?''

''ஒரு படம் ராஜாஜியுடையது.''

''மற்றொன்று?''

''வள்ளுவருடையது. அந்தப் படத்துக்குக் கீழே, ''சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க ; சொல்லிற் பயனிலாச் சொல்'' அப்படீன்னு குறளை எழுதி வைச்சிருக்காங்க.''



''தேவலாமே, குறளைச் சொன்னவர் படத்தையும் அந்தக் குறளின்படி நடந்து காட்டியவர் படத்தையும் பக் கத்திலே பக்கத்திலே மாட்டி வைச் சுட்டாங்களே!''

''முன் வரிசையிலே உள்ளவங்க நிக்கப்படாது... பேசப்படாது...''

''அதோ இரண்டாவது வரிசையிலே எட்டாவது சீட்டிலே பார், நம்ம கோவிந்தராஜனண்ணே!'' ஒரு குரல் குசுகுசுக்கிறது.

''நம்ம தொகுதி ஆளு எங்கப்பா கண்ணிலே படலே.''

''எம். ஜி. ஆர். இருக்காரா?''

''ஆஸ்பத்திரியிலேருந்தே இன்னும் வெளியிலே வரல்லேயேப்பா அவரு.''

''எந்த ஊரிலே இருக்கீங்க? மக்கள் திலகம் வீட்டுக்குப் போயாச்சு... ஆனா சட்ட மன்றத்துக்கு வர்றதுக்கான உடல்நலம் இன்னும் வரல்லே.''

''உஸ்....பேசாதீங்க...''

''சி. பா. ஆதித்தன்...

''சி. பா. ஆதித்தன்...

''சி. பா. ஆதித்தன்....

''....ஆதித்தன்....''

''அவரு என்ன செய்யறாரு? அந்தப் பெட்டிலேருந்து ஒவ்வொரு காகிதமா எடுத்து ஏதோ சொல்றாரு. பிறகு அதை வலது கைப்பக்கம் இருக்கிறவரு கிட்டே கொடுக்கறாரு...''

''சபாநாயகர் தேர்தலில் வோட்டு எண்றாங்கப்பா. வலது பக்கம் இருக்கிற வரு அழகுமுத்து. தி. மு. க. சார்பிலே வோட்டு எண்ணுவதை மேற்பார்வை யிடறார். இடது கைப்பக்க மிருப்பவர் ஹாண்டே. சுதந்திரக் கட்சி சார்பிலே அவர் பார்வை யிடறார்.''

''கோதண்டராமையா...

''சி. பா. ஆதித்தன்...

''சி. பா. ஆதித்தன்...

''சி. பா. ஆதித்தன்...



கார்ட்டூன்கள்: பி. கே.

''ஆதித்தனருக்குத்தானே வெற்றி. அவருபேருதானே அதிகமாகவருது...''

''தெரிஞ்ச விஷயம்தானே?''

''அப்போ போட்டியிடுவானேன்?''

''அதுக்குத்தான் சட்டசபை சுதந் ரக் கட்சித் தலைவர் டாக்டர் ஹாண்டே விளக்கமா காரணத்தைச் சொல்லி யிருக்கிறாரே;பேப்பரில் பார்க்கலையா?''

''என்னங்க அப்படிச் சிரிக்கிறீங்க?''

''சபாநாயகர் தேர்தலைப் பார்த்துச் சிரிக்கலேங்க...''

''பின்னே....?''

''அங்கத்தினருங்க ஹாய்யா காலை நீட்டிச் சாய்ந்துகிட்டு உக்காந்திருக் காங்களே அதைப் பார்த்தேன், சிரிப்பு வந்தது !''

''சொகுசான குஷன்...சுகமான காத்து..தூக்கம் கூட வந்துடும்...பாவம்....''

''மூணு மாசமா தேர்தலுக்காக நின்ன இடத் திலே நிக்காமே ஓடியாடிப் பாடுபட்ட சிரமம் அங்கே போய் உக்காந்தப்புறம்தான் தெரியும் சார். உங்களுக்கென்ன?''

"நல்லா நீட்டிச் சரிஞ்சு உக்காந்திருக்கிறவரு கலைஞர் கருணாநிதிதான்."

"வயசுப் புள்ளே இல்லே!" இது ஒரு முதியவர்.

"அண்ணாவைப் பாருங்க. ஆடாம அசையாம உக்காந்திருக்கறதோட ஏதோ எழுதிக்கிட்டே இருக்காரு."

"அவரு வயசானவரு. அப்படித்தான் உக்காருவாரு."

"சுகாதார மந்திரியும், சட்ட மந்திரியும் புது மாட்டுப் பொண்ணுகணக்கா குந்திக்கிட்டிருக்காங்க பாத்திங்களா?"

சபையிலிருந்து கைதட்டும் ஒலி பார்வையாளர்களின் கவனத்தை யெல்லாம் ஒருசேர அங்கு திருப்புகிறது. வெற்றி பெற்ற திரு சி. பா. ஆதித்தன் அவர்களின் வலக்கரத்தை ஆளும் கட்சித் தலைவர் திரு நெடுஞ்செழியனும் இடது கரத்தை எதிர்க் கட்சித் தலைவர் திரு கருத்திருமனும் தாங்கியபடி அவரை அழைத்துப் போய்ச் சபா நாயகர் இருக்கையில் அமர்த்தினார்கள். ஆளும் கட்சியினருக்கும் எதிர்க் கட்சியினருக்கும் பொதுவான நபர் சபாநாயகர். நடுநிலைமையுடன் சட்டமன்ற நடவடிக்கைகளை அவர் நடத்தித் தர வேண்டும்.

சபாநாயகரைப் பாராட்டிக் கட்சித் தலைவர்கள் வரிசையாகப் பேசினார்கள். பாராட்டியவர்களுக்கு ஆதித்தனார் நன்றி தெரிவித்துக் கொண்டார்.

இருபது வருடங்களுக்கு முன்பு, திரு சிவசண்முகம் பிள்ளையைச் சபாநாயகராக்கி, இதேபோல் இருவர் அழைத்துச் சென்ற காட்சியைக் கண்டு வாய்விட்டுச் சிரித்தவர் திரு சி. பா. ஆதித்தனார். "இன்று அதே நிலையும், தகுதியும் எனக்கு வரும் என்று நான் கனவிலும் எண்ணியதில்லை. கற்பனைகூடச் செய்ததில்லை" என்றார் சபாநாயகர்.

சபை ஒத்திவைக்கப்பட்டது. மறுபடி மாலை ஐந்து மணிக்கு கவர்னர் உரை நிகழ்த்துவார் என்றும் அறிவிக்கப்பட்டது.

"மணி என்னப்பா?"

"பன்னிரண்டு நாற்பது..."

"அப்பாடி! இன்னும் நாலு மணி நேரம் இருக்குதே.... இங்கேயே உக்காந்திருக்கலாமா?"

"தேர் திருவிழா மண்டபமா? துண்டை விரிச்சுப் போட்டுப் படுத்துக்க? .... ம்.....ம் ....சீக்கிரம் வெளியே போய்க்கிட்டே பேசுங்க...."

"அதோ... அங்கேதான் நம்ம கொளுந்தியா மருமவனுடைய சீட்... பார்த்துக்க. உருமாலைப் போட்டுக்கிட்டு எப்படி உக்காந்திருந்தான் பாத்தியா....?" நாட்டுப்புறத்தாரின் பெருமை மிக்க குரல். இப்படிப் பேசிக் கொண்டே மக்கள் மண்டபத்தை விட்டு வெளியேறினர்.

மாலை ஐந்து மணிக்குக் கவர்னரின் உரை. கோலாகலமான காட்சி. மறுநாள் கவர்னர் உரை மீது விவாதம். இனி சட்ட மன்றத்தில் பேச்சு, பேச்சு; விவாதம், விவாதம்தான். காரசாரமான பேச்சுகள், கண்டனங்கள், தாக்குதல்கள், சவால்கள் இத்தனைக்கும் இடையே சாதனைகளையும் தமிழ் மக்கள் எதிர்பார்க்கிறார்கள் புதிய ஆளும் கட்சியினரிடமிருந்து.

— கௌசிகன்







## சாதாரண ஆள்!

அமெரிக்காவில் ஜனாதிபதி தேர்தலுக்கு நின்ற திரு அட்லாய் ஸ்டீவன்சன், தேர்தல் சமயத்தில் பல பிரசங்கங்கள் நிகழ்த்தி விட்டு ஒரு டாக்ஸியில் பயணம் செய்துகொண்டிருந்தார். டாக்ஸி டிரைவரிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தார். "நான் இந்தக் கூட்டங்களில் பேசுவதெல்லாம் சாதாரண ஆட்களுக்குப் புரிவதில்லையாமே? மக்கள் அப்படிப் பேசிக் கொள்ளுகிறார்களாமே! நீ என்ன நினைக்கிறாய்?"

டாக்ஸி டிரைவர், சிறிது மௌனத்துக்குப் பின்னர் பதிலளித்தான். "நீங்கள் பேசுவது எனக்கு மிக நன்றாக விளங்குகிறது, கவர்னர்! ஆனால் சாதாரண ஆட்கள் எப்படி நினைக்கிறார்களோ, எனக்குத் தெரியாது!"

ஸ்டீவன்சன் துணுக்குற்றார். டாக்ஸி டிரைவரைத் தாம் ஒரு சாதாரண ஆளாகக் கருதியதை அவன் வரவேற்கவில்லை என்று தெரிந்துகொண்டார்.

ஆதாரம்: ஆர்கனாட். தகவல் அ. சங்கரன்.

உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

*B/P/11/P/1/65 TM*



# முடியாதது முடியும்

"இது ஒரு கலையா?"

"அப்படித்தான் சொல்லிக் கொள்கிறார்கள். ஆயகலைகள் அறுபத்து நான்கினுள் இதற்கும் ஒரு சிறப்பான இடம் உண்டாம்."

"அப்படியா ? இந்தக் கலை தோன்றியது எப்பொழுது ?"

"நந்தமிழரது பண்டைய நாகரிகம் மொஹஞ்சதாரோவின் மண்ணுக்கடியிலே புதைந்து கிடந்ததே, அதற்குப் பல மாமாங்கங்களுக்கு முன்பே இந்தக் கலை மேலோங்கி வளர்ந்திருக்கிறது; அடிவேர் விட்டுச் செழித்திருக்கிறது."

"இந்தக் கலையைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"தலைக்குத் தலை மாறுன அபிப்பிராயம் கொண்டிருந்தாலும் கலைஞனின் கருத்து மாறுபடுவதில்லை."

"கலையின் குறிக்கோள் என்ன?"

"இன்பம் பயப்பது."

"நீங்கள் ஈடுபட்டிருக்கும் கலை....."

"முடியும் கலை."

"அப்படியானல் முடியாத கலை என்றும் ஒன்று உண்டோ ?"

" உண்டு. முடியும் கலையே முடியாத கலையாகவும் திகழும். முடியாத கலையை முடியும் கலையாகவும் ஆக்கிக் காட்ட முடியும்."

"புதிரை அவிழ்ப்பீர்கள் என்று பார்த்தால், மேலும் மேலும் சிக்கலாக்குகிறீர்களே!"

"சிக்கலாக்குகிறேனு? கெட்டது, போங்கள்! சிக்கெடுக்க வேண்டிய கலையைப் போய்ச் சிக்கலாக்குவதாகக் கூறுகிறீர்களே! சிக்கலாக்கினுல் முடிய முடியுமா ?"

"என்ன 'ஜெண்டு' முடிகிறீர்கள்? விளங்கக் கூறுங்கள்."

"நீங்களே விளங்கக் கூறியபின், நான் கூறுவதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் கூறுவது போல் ஜெண்டு முடிகிற வேலைதான். அதாவது கொண்டை அலங்காரக் கலை. சண்டை மூட்டுகிற காரியம் அல்ல."

"என்னவோ முடியும் கலை, முடியாத கலை என்று சொன்னீர்களே !"

"ஆமாம், முடியாத கேசத்தைச் சிக்காற்றிச் சிங்காரமாக முடிந்து விடுவதைத்தான் அப்படிச் சொன்னேன் !"

"உங்கள் பேச்சைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றல், ஒருவனுக்குக் கற்பனைத் திறம் வேண்டும்போல் இருக்கிறதே!"

"கலைக்கும் கற்பனைக்கும் நிறையத் தொடர்பு உண்டு. கலைஞன் மட்டும் கற்பனை உள்ளம் படைத்தவனுயிருந்தால் போதாது. ரசிகனும் கற்பனை புரியும் ஆற்றல் மிக்கவனுயிருக்க வேண்டும். அப்பொழுது தான் கலையின் அழகு எடுப்பாக இருக்கும்."

ஸ்ரீமதி டி. சில்வா இப்படிக் கூறியது தான் தாமதம்; என் கற்பனைக் கண்கள் பாரத நாட்டின் புராதனச் சிற்பங்களின் மீதும் சித்திரங்களின் மீதும் போய் லயித்தன ! எத்தனை சிறப்பான கேசவிந்யாசங்கள் : கொண்டை அலங்காரங்கள் !

இதற்குத் தேவையானது கருகருவென்று வளர்ந்த கூந்தல்! முழங்காலைத் தொடும் அளகபாரம்! எத்தனைதான் நீண்டு அடர்ந்து வளர்ந்தாலும் அது பெண்களுக்குப் பாரமாகவா தோன்றுகிறது? நவீன நாகரிகத்தில் தோய்ந்து, 'பாப்' செய்து கொண்ட ஒரு சில பெண்களைத் தவிர்த்து!

இந்த ஆண்களும்தான் எத்தனை விதமாக 'கிராப்' வைத்துக் கொண்டாலும் எங்கே சொல்கிறுர்கள் தலைமயிர் வேண்டாமென்று! எண்ணி எண்பத்தேழே கேசங்களை உடைய வழுக்கைத் தலையர்கள் கூடக் கவரி மானெனக் கூந்தலைக் காப்பாற்ற முயல்கிறுர்கள். மாதம் தவறினாலும் தவறலாம்; சலூனுக்கு இரண்டு ரூபாய் கொடுக்கத் தவற மாட்டார்கள். கண்ணாடிக்கெதிரே நின்று சீப்பெடுத்து வாரி அலங்காரம் செய்து கொள்ள மறக்க மாட்டார்கள்! தலையில் ஒரு நரையைக் கண்டு விட்டால் கவலையினுல் ஏங்குபவர்கள், கவலையே நரைக்குக் காரணம் என்னும் உண்மையை எத்தனைதான் உணர்ந்திருந்த போதிலும் விட்டொழிக்க மாட்டார்கள்!

இது எதைக் காட்டுகிறது? கூந்தலில் உள்ள பற்றைத் தானே? இதனுல்தானே என்னவோ, அருவப் பொருளுக்கும் உருவம்

கொடுத்து அதற்கும் பலவித முடிகளைக் கற்பனை செய்து புனைந்து மகிழ்கிறார்கள் மக்கள்! சிவபெருமானுக்குச் சடாமுடி, கண்ணனுக்குச் சாயக் கொண்டை, சூடிக் கொடுத்த நாச்சியாருக்குப் பூச்சூடி மகிழ முன் கொண்டை, பின் பின்னல்; வீணையும் புத்தகமுமாக வெண்தாமரைப் பூவில் வாசம் செய்யும் கலைமகளின் கொண்டை, தலை ஈரத்தை உலர்த்திக் கொள்வது போன்ற தோற்றம். இந்தக் கொண்டைகளின் சிருஷ்டிக்கு மனிதக் கற்பனைதான் காரணம் என்றாலும், அந்த அழகிலே சொக்கி நிற்பதும் இந்த மனித மனம்தானே?

நாள் ஏற, ஏற, நாகரிகம் வளர வளர இந்தக் கொண்டை அலங்காரக் கலையும் பலவிதமாக ஓங்கி வளர்ந்து விட்டது !

முழங்கால் வரைக்கும் நீண்டு தொங்கும் பின்னல் அழகுக்கு ஒரு காம்பீரியம் இருக்கவே செய்கிறது! குறைவான கூந்தலை உடையவர்களும் ஒருவிதக் 'கலவடை'யை உபயோகித்துத் தலை கொள்ளாக் கேசத்தைப் பெற்று விட்டவர்கள்போல் மனம் நிறைந்து நிற்கிறார்கள்! கூந்தலையே கூடையாக முடைந்து கொள்பவர்களும் தலையிலே தேனடையைச் சிருஷ்டித்துக் கொள்பவர்களும் கூடத் தங்கள் தோற்றத்துக்கேற்ற களையான முகத்தைப் பெறுகிறார்கள்.

மனத்தில் இப்படியெல்லாம் கற்பனையை எழவைத்த ஸ்ரீமதி டி சில்வா அவர்கள் திருச்சியைச் சேர்ந்தவர். டாக்டர் ஒருவருக்கு மகளாய்ப் பிறந்த இவர் கொண்டை அலங்கார நிபுணர். குட் ஷெப்பர்டு கான்வெண்டில் ஏழாவது வகுப்பு வரை பயின்றவர். பதினைந்தாவது வயதில் இத்துறையில் புகுந்தவர், இன்னும் ஐந்தாண்டுகள் சென்றால், தம் கலைப் பணிக்கு வெள்ளி விழா நடத்தலாம் என்று கூறுகிறார். இவரது கணவர் டி சில்வா அவர்கள் டெலிகிராப் பகுதியில் பணியாற்றுகிறார். திரை உலகில் 'ஜோஸபின்' என்றால்தான் சட்டென எல்லோரும் இவரைப் புரிந்து கொள்வார்கள். கொண்டை அலங்காரத்துக்கு இவரிடம் தலையைக் காட்டாத நடிகைகளை விரல் விட்டு எண்ணிவிடலாம். தலை காட்டிய நடிகர்களை விரல் விட்டு எண்ண முடியாது. ஏனெனில் இவர் ஆண் நடிகர்களுக்குக் கொண்டை அலங்காரம் செய்வது கிடையாது!

''இந்தக் கலையில் உங்களுக்கு ஆர்வம் உண்டானது எப்படி?''

''பெண்ணாய்ப் பிறந்த தோஷம்தான்!'' எத்தனை எளிய நாசூக்கான பதில்!

''இந்தக் கலைக்காகத் தாங்கள் எங்கேயாவது பயிற்சி பெற்றது உண்டா?''

''தவறாக எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் ஒன்று கூறுவேன், எந்தக் கலையுமே சொல்லி வருவதில்லை. உள்ளத்திலே ஓர் ஈடுபாடு இருக்குமானால், அது தானாகவே வந்துவிடும். ஒரு நிபந்தனை: கலையைக் கலையாகக் காணத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''கொண்டை அலங்காரத்துக்கென்று, தாங்கள் முன்கூட்டியே ஏதாவது திட்டம் வகுத்துக் கொள்வீர்களா?''

''திட்டம் போடுகிறபடி எந்தக் காரியம் தான் இந்த உலகத்தில் நடக்கிறது? இந்தக் கலையும் அப்படிக் கைக்குள் வராத கலைதான். நடிகையை நாற்காலியில் உட்கார வைத்து அவர் முகத்தைப் பார்க்கும்போது கற்பனை தோன்றும். கலையுருவம் கண் முன்னே நிற்கும். இப்படி வகிடு எடுத்து வாரினால் நன்றாக இருக்கும், அப்படி முடி போட்டால் அழகாயிருக்கும் என்று முடிவு கட்டுவேன். நடிகையின் முக அமைப்பு, கூந்தல், கதாபாத்திரங்களின் குணாதிசயங்கள்— எல்லாமாகச் சேர்ந்து என் கலைக்குக் கற்பனை கூட்டும். கண் பார்க்கக் கைகள் வேலை செய்யும்.''

''திரையுலகம் உங்களுக்குப் போதுமான ஆதரவு தருகிறதா?''

''கலைதானே அதற்கும் ஆதாரப் பொருள்? எனது கையினால் அலங்காரம் பெற்ற நடிகைகளின் பெயரைக் கூறுவதென்றால், அட்டவணை நீண்டுவிடும். என்னையே பல நடிகைகளும் கொண்டை அலங்காரத்துக்கு விரும்பி வரவழைக்கிறார்கள்.''

''இதனால் தங்களுக்கு நல்ல வருமானம்..''

''நான் இருக்கும் இந்த வீடே என் வருமானம் எத்தகையது என்பதை உங்களுக்கு உணர்த்திவிடும். ஆனாலும் கலை உண்மையான கலைஞனை ஒருநாளும் வஞ்சித்ததில்லை. இல்லையென்று கூறாமல் என் தேவைக்குத் தருகிறது. திரை மறைவில் கலைத் தொழில் புரியும் எனக்குக் கிடைக்கும் ஊதியம் 'ஓகோ' என்றில்லாவிட்டாலும் என் திருப்திக்குப் பங்கம் விளைவிக்கவில்லை. 'நான் உண்டு, என் வேலை உண்டு' என்றிருக்கும் நான் அதிகமாக ஆசையை வளர்த்துக் கொள்ளவில்லை. என் கணவரும் நானும் சேர்ந்து சம்பாதிப்பது எங்கள் பெருகிய குடும்பத்தின் வயிறு காயாமல், பிள்ளைகளைப் படிக்க வைத்து ஆளாக்கி விடுவதற்கும் உகந்த முறையில் போதுமானதாக இருக்கிறது.''

''இந்தத் துறையில் உங்களைப் போல...''

''எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எல்லோருமே கைவண்ணம் நிறைந்த கலைஞர்கள்தான். கலை வளர வேண்டும், வளர்ந்து எல்லோரையும் இன்புறச் செய்ய வேண்டும் என்பதுதான் என் ஆசை. கலை வளரப் போட்டி தேவை; பொறாமை கூடாது. போட்டியினால் கலை பரிமளிக்கும்; பொறாமையினால் பொசுங்கிப் போகும். எனவே கலை வாழ, நல்லுணர்வு வேண்டும்.''

''நன்றாய்ச் சொன்னீர்கள்! பத்திரிகையில் வெளியிட உங்கள் புகைப்படம் ஒன்று...''

''....வேண்டுமா? நான் என்ன அவ்வளவு அழகியா?''

''அதற்கில்லை...''

''பார்த்தீர்களா, உங்கள் வாயாலேயே வந்து விட்டது நான் அழகி இல்லை என்று. அதனால் தர முடியாது. அதோடு இன்னொரு விஷயம். கலையின் அழகைக் காண வேண்டுமென்றால் அதைப் படைத்தவனிடமா போவார்கள்? அவன் படைத்த கலைப் பொருளை அல்லவா நாடுவார்கள்?''

பாருங்கள், புகைப்படம் தரத்தான் எத்தனை கலை அழகாக மறுத்து விட்டார்! — ரா. வீ



# ஜிம்மி

வால்ட் டிஸ்னி




ஓ..ஓ..! அதென்னது?
தும் தும் தும்


நம்ம முயலார்!




தும்
தும்
தும்
தும் தும்
தும் தும்
Distributed by King Features Syndicate


இவன் என் இப்படிக் குதிச் சுக் கொட்டமடிச் சிருன்!


அடடே! மறுபடி யும் இந்தப் பக்கம் வாரான்!
தும்..ம்


தும் தாம்
தும்
6-19


ஏய்...ய்!


ய..ஹா..ய்!
தாம் தாம்


கீச் கீச்
ஹா..ஹா ஹா! நல்ல வேடிக்கை

LINTAS PUB/GCS.3 TAM

# ஜி-11 ஹெக்ஸாக்ளோரோபீன் என்ற அழகுப்பொருளும் புதுமை மணமும் தவிர, விசேஷமாக வேறென்ன இருக்கிறது ஸிந்தாலிலே?



# சிக்கனப் பாங்கு!

அதிக நாள் உழைக்கிறது ஸிந்தால்; மேம்பட்ட உற்பத்திமுறையே அதன் காரணம். அதிலுள்ள சாப் பங்கு மிகச் சொற்பமே யாதலால் சொதசொதப்பு நேரவே இடமில்லை.




வாடையகற்றும் குணத்திலே அதி உன்னதமானது ஸிந்தால். அழுக்கு, வியர்வை ஆகியவற்றால் உண்டாகும் கிருமிகளை அழிக்கிறது அந்த ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்). உங்கள் உடம்பில் நாற்றம் என்பதே எழாமல் பாதுகாக்கிறது.

இருமடங்கு உறுதிபெறுவீர்—நாள்முழுதும் மலர்ச்சி பெறுவதற்கான ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்) அடங்கிய ஸிந்தால் சோப்பும், ஸிந்தால் டாய்லெட் பவுடரையும் உபயோகியுங்கள்.




ஜி-11 என்பது, எல். ஜிவோடான் ஏ. ஸீ., எஸ். ஏ. அவர்களின் ட்ரேட் மார்க்.

### அத்தியாயம் பன்னிரண்டு

## பச்சைக் கல் மோதிரம்

இரவு எட்டு மணி ஆகி விட்டது. வீட்டில் அத்தை, புனுகுப் பூனைமாதிரி குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தாள். அவளுக்குத் துணையாக ஜிம்மியும் அவளோடு நடந்து கொண்டிருந்தது. பக்கத்து அறையில் திரிவேணி, ஒரு நாற்காலியில் அமர்ந்து வெளி வாசலையே பார்த்துக் கொண்டிருந்தாள். குமார், வாசல் நடையில் உட்கார்ந்திருந்தான். அத்தையோ சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்ப்பதும், வாசலைப் பார்ப்பதுமாக இருந்தாள். அவள் வாய், ஏதோ முணு முணுத்துக் கொண்டே யிருந்தது. பாதி சாத்தியிருந்த திரிவேணியின் அறையைத் திறந்து கொண்டு வாசலிலேயே நின்றுகொண்டு பேசினாள்.

''நான் என்ன பேசி விட்டேன், இவன் கோபப்பட...?''

''அச்சாபீஸுக்கு போன் பண்ணிக் கேட்டு விடுவோமே'' என்றாள் திரிவேணி.

''வேண்டாம். அவனாக வரட்டும். எவ்வளவு நேரத்துக்குத்தான் அவன் கோபம் செல்லும். பார்க்கலாமே!'' என்று கூறி விட்டு மீண்டும் தெரு வாசலுக்கு வந்தாள். கூடவே ஜிம்மியும் வாசலுக்கு வந்து நின்று விட்டு வீட்டுக்குள் திரும்பி விட்டது. திரிவேணி அறையை விட்டு வெளியே வந்தாள்.

''அவர் வரும் வரைக்கும் நீயேன் பட்டினி கிடக்கிறாய்? சாப்பிடேன்!'' என்றாள் திரிவேணி.

''அவன் வரட்டும். அவனுக்கு என்ன வீம்பு! அப்படி நான் என்ன பேசிவிட்டேன்.... உனக்குப் பசித்தால் நீ சாப்பிடேன். வா, நான் பரிமாறுகிறேன்'' என்று கூறிக் கொண்டே அடுக்களைப் பக்கம் போகப் புறப்பட்டாள் அத்தை.

''எனக்குப் பசி இல்லை, அத்தை'' என்று கூறிவிட்டுத்




ர. சு. நல்லபெருமாள்



தன் அறைக்குள் நுழைந்து விட்டாள், திரிவேணி. நாய்க்குட்டியோ, ஒன்றும் புரியாமல் அத்தையையும், திரிவேணியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தது. அவர்களின் மனத்தில் சஞ்சலம் புகுந்து குடைகிறது என்பதை ஜிம்மி உணர்ந்து கொண்டது. வாலைக்கூட ஆட்டாமல் அது ஓரத்தில் போய் முடங்கிக் கொண்டது.

வாசலில் யாரோ வருவது தெரிந்ததும் ஜிம்மி இலேசாகக் குரைத்தது. ஆள் அடையாளம் தெரிந்து கொண்டதும் மீண்டும் தலையைக் கீழே போட்டுப் படுத்துக் கொண்டது. அத்தை வேகமாக வாசல் பக்கம் வந்து பார்த்தாள். திரிவேணியும் அறை வாசலில் வந்து நின்றுகொண்டு வாசலைக் கவனித்தாள்.

சர்தார் சொக்கலிங்கம் பின்னே உள்ளே வந்து கொண்டிருந்தார். ''ரங்கமணியை எங்காவது அனுப்பியிருக்கிறீர்களா?''-அத்தைகேட்டாள்.

''இல்லையே... ஏன், சாப்பிட வரவில்லையா?'' — சர்தார் பதிலுக்குக் கேட்டார்.

''மத்தியானத்திலிருந்தே வரவில்லை'' என்றாள் திரிவேணி.

''சாயங்காலம்கூடப் பார்த்தேனே! அச்சாபீஸில்தான் இருந்தான்'' என்றார் சர்தார் சொக்கலிங்கம்.

''திரிவேணி, அச்சாபீசுக்குப் போன் பண்ணிப் பாரேன்'' என்றார் அவர் மகளைப் பார்த்து. திரிவேணி அத்தையைப் பார்த்தாள்.



''வேண்டாம், வேண்டாம்'' என்றாள் அத்தை. சர்தார், தம் அறைக்குள் நுழைந்து விட்டார்.

வெளி வராந்தாவில் கிடந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்தாள் அத்தை. அவள் காலடியில் ஜிம்மி முடங்கிக் கொண்டது. அவளுடைய பார்வை தெருவையே நோக்கி இருந்தது. பக்கத்து அறையிலிருந்து தீக்ஷிதரின் குறட்டை ஒலி தெரு முழுதும் கேட்டுக் கொண்டிருந்தது. மணி ஒன்பது ஆகிவிட்டது. அவ்வளவு நேரத்துக்கு மேல் ரங்கமணி இனி சாப்பிட வர மாட்டான் என்று முடிவு செய்துவிட்டாள். அவளுக்கு மனத்தில் சஞ்சலம்; பசி இல்லை; இந்தத் திரிவேணிக்கு என்ன கேடு வந்தது...? பசி இல்லையாமே! அத்தைக்குத் தெரியாத இரகசியமா? வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளாவிட்டாலும் ஒரு பெண்ணின் அந்தரங்கத்தை அத்தை உணராமலா இருப்பாள்....?

ரங்கமணி வந்து மூன்று மாதங்களுக்குள் அந்தக் குடும்பத்தோடு எவ்வளவு ஒட்டிப் பழகி விட்டான்! ஒரு நாள் அவன் சாப்பிட வரவில்லை என்றால் மனம் எப்படித் தவிக்கிறது! அவனுக்காகத் திரிவேணியுமல்லவா பட்டினி கிடக்கிறாள்!

என்ன நினைத்தாளோ அத்தை, திடீரென்று எழுந்தாள். வாசற்படியில் உட்கார்ந்திருந்த குமாரை வண்டியைத் தயார் செய்யும்படி கூறிவிட்டுத் திரிவேணியின் அறைக்குள் நுழைந்தாள். திரிவேணி, தன் அறைக்குள் ஒரு நாற்காலியில் சாய்ந்தவாறு முகட்டைப் பார்த்து ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

''நான் ஆபீசுக்குப் போய் அவனைப் பார்த்து விட்டு வருகிறேன்'' என்றாள் அத்தை. திரிவேணியின் முகம் மலர்ந்தது. ''நானும் வரட்டுமா?'' என்றாள் ஆவலுடன். ''நீ எதற்கு அலைகிறாய்? துணைக்குக் குமார் வண்டி ஓட்டி வருகிறான். சீக்கிரம் வந்துவிடுவேன். கதவைத் தாழ் போட்டுக் கொள்'' என்று கூறிவிட்டு வாசலுக்கு வந்து வண்டியில் ஏறினாள். ஜிம்மி வராந்தாவிலிருந்து வண்டியை நோக்கிப் பாய்ந்தது. திரிவேணி அதைப் போகவிடாமல் மறித்தாள். ஆனால் அது அவளிடம் தப்பிக் கொண்டு போய்த் தெருவில் குதித்து வண்டியைத் தொடர்ந்து ஓடியது.

அத்தை அச்சாபீசை அடைந்தபோது மணி பத்தாகி விட்டது. கதவைத் தட்டினான் குமார். உள்ளே ரங்கமணியும் சோமுவும் தூங்காமல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கதவு தட்டும் சத்தம் கேட்டதும் இருவரும் திகைத்தனர். சோமு பரபரப்புடன் எழுந்து வாசலுக்கு வந்தான். சன்னல் கதவைத் திறந்து தெருவில் பார்த்தான். வண்டி நிற்பதும், வாசற்படியில் குமார் நின்று கொண்டு கதவைத் தட்டுவதும் தெரிந்தது. சன்னல் கதவை மூடிவிட்டு வாசற் கதவைத் திறந்தான். கதவு திறக்கப்பட்டதும் ஜிம்மி பாய்ந்து உள்ளே நுழைந்தது. ரங்கமணி படுத்திருந்த அறைக்குள் நுழைந்து அவன் பக்கத்தில் நின்றுகொண்டு வாலை ஆட்டியது. ஜிம்மியைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்து வாசலுக்கு ஓடி வந்தான் ரங்கமணி. அத்தை வண்டிக்குள்ளேயே உட்கார்ந்திருந்தாள். வண்டிக்குப் பக்கத்தில் வந்து உள்ளே எட்டிப் பார்த்த ரங்கமணி திடுக்கிட்டான்.

''என்ன விஷயம்?''—என்று பரபரப்புடன் கேட்டான்.

''நீ ஏன் சாப்பிட வரவில்லை?''

''இதற்காகவா இவ்வளவு தூரம் வரு கிறீர்கள்? போன் பண்ணினால் போதுமே.''

''நீ சாப்பிட்டாயா?'' — அத்தை கேட் டாள். ரங்கமணி பதில் சொல்லத் தயங் கினான். பிறகு, ''சாப்பிட்டாச்சே'' என்றான்.

''இல்லை அத்தை, இவன் சாப்பிடவில்லை. மத்தியானத்திலிருந்தே சாப்பிடாமல் இருக் கிறான். பசி இல்லையாம். வயிற்றுக் கோளாறு என்று சொன்னான்'' என்றான் சோமு. அவனைக் கோபத்துடன் திரும்பிப் பார்த்தான் ரங்கமணி. சோமு குறும்பாகச் சிரித்துக் கொண்டிருந்தான்.

''வண்டியில் ஏறு, வீட்டுக்குப் போகலாம்'' என்றாள் அத்தை.

''இப்போது என்னத்துக்கு...?''

''மறுக்காமல் ஏறு, சொல்கிறேன்'' என் றாள் அத்தை கண்டிப்புடன்.

ரங்கமணி தலையைச் சொறிந்து கொண்டே ஏறினான். வண்டியைத் தொடர்ந்து ஜிம்மி ஓடி வந்தது. தெருவில் நகரசபை விளக்குகள் அழுது வடிந்து கொண்டிருந்தன. சிந்துபூந்துறை திருப்பம் வரும்வரை யாரும் பேசவில்லை. அந்தத் தெருவின் திருப் பத்தில் வண்டி திரும்பியபோது ரங்கமணி பேசினான்.

''நீங்கள் எதற்காக இவ்வளவு தூரம் அலைகிறீர்கள்?'' என்று இரக்கத்துடன் கேட்டான்.

''உன்னால் பசியைத் தாங்க முடியும். நீ ஆண்பிள்ளை. ஆனால், திரிவேணியால் பசியைத் தாங்க முடியாதே'' என்றாள் அத்தை.

''ஏன்... அவள் சாப்பிடவில்லையா?''

''நீ வராமல் அவளும் சாப்பிடவில்லை.''

''இதென்ன கூத்து, எனக்குப் பசியில்லை, சாப்பிட வரவில்லை...''

''உன் புளுகு மூட்டையை ஏன் அவிழ்க் கிறாய்? உண்மையிலேயே பசி இல்லையா? சத்தியமாகச் சொல்லு...'' என்றாள் அத்தை சற்றுக் கடுமையாக. ரங்கமணி ஒன்றும் பேசாமல், வண்டிக்குப் பின்னால் ஓடி வந்து கொண்டிருந்த ஜிம்மியைப் பார்த்துக் கொண்டிருந்தான். கையும் களவுமாக அகப்பட்டு விட்டால் திருடன், எவ்வளவு சங்கடப்படுவான்; அந்த நிலையில் இருந்தான் ரங்கமணி.

''என்மேலே உனக்குக் கோபம். அதனால் தான் நீ வீட்டுக்கு வரவில்லை'' என்றாள் அத்தை.

''அப்படி யொன்றுமில்லை'' என்று பதற் றத்துடன் பதில் சொன்னான் ரங்கமணி.

''எனக்குத் தெரியாதா? கள்ளுக்கடை மறியலைப் பற்றி உன்னோடு கொஞ்சம் பட படப்பாகத்தான் காலையில் பேசிவிட்டேன். உன் கொள்கை அது. நான் பொறுமையா யிருந்திருக்க வேண்டும்.''

''நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே. நான் தான் உங்கள் மனத்தைப் புண்படுத்திவிட் டேன். உங்களைச் சந்திக்கப் பயந்துதான்....''

''சரியான அசடு நீ. உனக்கென்ன பயம்? உனக்காக அவள் வேறு பட்டினி கிடக் கிறாள்.''

''இதென்ன வம்பாய்ப் போச்சு. நான் வர வில்லையென்றால் அதற்காக எல்லோரும் பட்டினி கிடப்பதா...? ஒருவேளை, காந்தி யைப் பின்பற்றித் திரிவேணி உபவாசம் இருக்கிறாளோ என்னவோ?'' என்றான் ரங்க மணி கேலியாக.

''மற்றவர்களுக்காகப் பட்டினி கிடப் பதும் உபவாசம்தான்'' என்றாள் அத்தை.

''நீங்கள் சாப்பிட்டீர்களா?'' — மிகுந்த உருக்கத்துடன் கேட்டான் ரங்கமணி.

''உம்...'' என்று தலையை அசைத்தாள் அத்தை.

வண்டி வீட்டு வாசலை நெருங்கியபோது அவர்களை எதிர்பார்த்து நடையில் நின்று கொண்டிருந்தாள் திரிவேணி.

''ஏன் இன்று வரவில்லையாம்?'' அத்தை யைப் பார்த்துக் கேட்டாள் திரிவேணி.

''நீயே அவனிடம் கேளேன்'' என்று கூறிவிட்டு வீட்டுக்குள் நுழைந்தாள் அத்தை. அவர்களை வீடு கொணர்ந்து சேர்த்துவிட்ட கடமை முடிந்தது என்ற மன நிறைவில் ஜிம்மி வராந்தா மூலையில் போய் முடங்கிக் கொண்டது. திரிவேணியும், ரங்கமணியும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். உள் பக்கத்து அறையில் அத்தை இரண்டு இலைகளைப் போட்டிருந்தாள்.

''இரண்டு பேரும் சாப்பிட வாருங்கள்'' என்றாள் அத்தை.

''எனக்குப் பசி இல்லை'' என்றாள் திரிவேணி.

''இப்போது பசி வந்திருக்கும்; சும்மா சாப்பிடு'' என்று கூறிவிட்டுப் பரிமாறத் தொடங்கினாள் அத்தை.

''நீங்களும் உட்காருங்கள், சேர்ந்தே சாப்பிடலாம்'' என்றாள் திரிவேணி.

இதைக் கேட்டு ரங்கமணி திடுக்கிட்டான்.

''அத்தை சாப்பிடவில்லையா இன்னும்?'' என்றான் பதற்றத்துடன்.

''மத்தியானத்திலிருந்தே சாப்பிடவில்லை.''

இதைக் கேட்டதும் ரங்கமணியின் கண் களில் நீர் நிறைந்து விட்டது. அத்தையின் உருவம் கண்ணீருக்கு இடையே மங்கலாகத் தெரிந்தது. ஏதோ ஒரு தெய்வமே அவன் முன்னால் நிற்பது போலிருந்தது.



புதுதில்லிக்கு விஜயம் செய்த மௌண்ட்பாட்டன் பிரபுவும், ராஜாஜியும் ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களை மார்ச் 16ந் தேதி ராஷ்டிரபதி பவனில் சந்தித்தனர். இரு முந்தைய கவர்னர் ஜெனரல்களுடன் ராஷ்டிரபதி அளவளாவுகிறார்.

''எனக்குப் பசியில்லை. நீங்கள் சாப்பிடுங்கள்'' என்றாள் அத்தை, ரங்கமணியைப் பார்க்காமலே.

''அப்படியென்றால் எனக்கும் பசி இல்லை'' என்றான் ரங்கமணி.

''நல்ல பிள்ளை நீ. உனக்காக நானும் சாப்பிடுகிறேன், வா... உட்கார்'' என்றாள் அத்தை. மூவரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

ஒன்றுமே பேசாமல் சாப்பிட்டுவிட்டு எழுந்தான் ரங்கமணி. மனம் நிறைவில்லை என்றால் நாக்குக்கூட ருசியை இழந்து விடுகிறது. கடமைக்குக் கொஞ்சத்தை அள்ளி வாய்க்குள் திணித்து விட்டு எழுந்தான். யாருமே பேசிக் கொள்ளவில்லை. ஏதோ ஒரு கடமையைச் செய்து முடிக்க வேண்டுமே என்ற நிர்ப்பந்தத்தில் சாப்பிடுவது போல் தான் அத்தையும், திரிவேணியும் சாப்பிட்டு முடித்தார்கள்.

இரவு அங்கேயே படுத்துக் கொண்டான். படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். முள் படுக்கையில் கூட நிம்மதியாகத் தூங்கி விடலாம். ஆனால் நினைவுப் படுக்கையில் என்னதான் செய்ய முடியும்?

ரங்கமணிக்குக் கண்ணீர் முட்டிக்கொண்டு வந்தது. தனக்காக அத்தையும் பட்டினி கிடந்திருக்கிறாள் என்ற நினைவுதான் அவன் இதயத்தை அறுத்துக் கொண்டிருந்தது. கடைசியில் தன்னைத் தேடிக் கொண்டு இரவு பத்து மணிக்கு மேல் அத்தை வந்தது தான் அவன் மனத்தை இன்னும் போட்டுப் புரட்டியது. எவ்வளவு பாசம் இருந்தால் அவள் அந்த நேரத்தில் அவனைத் தேடிக் கொண்டு வந்திருக்க வேண்டும்! அன்பின் சக்தியைத் தாள முடியாமல் அவன் கண்களில் நீர் பெருகித் தலையணையை நனைத்தது.

தாத்தாவும் அவன் மீது உயிரைத்தான் வைத்திருக்கிறார். இருந்தாலும் தாயன்பையே அறிந்திராத அவனுக்கு அதன் சக்தியை உணர வைத்து விட்டாள் அத்தை. பிறவித் தரித்திரன், அபூர்வமாகக் கிடைத்த விருந்தை நினைத்து நினைத்து நாக்கைச் சப்புக் கொட்டுவது போல் அத்தையின் வாஞ்சையை நினைத்து நினைத்து இன்பத்தில் மூழ்கிக் கிடந்தான்.

அந்தக் குடும்பத்தோடு தனக்குள்ள உறவு நெருங்கி இறுகி விட்டதாக நினைத்தான். மூன்று மாதங்களுக்குள் என்னவெல்லாம் நடந்து விட்டன! இப்படி ஒரு குடும்பத்தில் வந்து ஒட்டிக் கொள்வாய் என்று மூன்று மாதங்களுக்கு முன் யாராவது கூறியிருந்தால் அவன் நம்பியிருப்பானா?

அந்தக் குடும்பத்தை நினைக்க நினைக்க அவனுக்கு விசித்திரமாகப் பட்டது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரகம். ஆனால் அதில் தான் எவ்வளவு ஐக்கியம்! பல மரம் நிறைந்த தோப்பு மாதிரி அந்தக் குடும்பம். அதில் நிழலுக்கு ஒதுங்க வந்தவனைப் போல் வந்த ரங்கமணியும் அந்தத் தோப்பில் ஒரு மரமாக வேரூன்றி விட்டான்! இனி அவனாக நினைத்தால் கூட அந்தக் குடும்பத்தை விட்டு விலக முடியுமா என்பது சந்தேகம்தான்.

பக்கத்து அறையில் விளக்கு எரிவது தெரிந்தது. ''இன்னும் தூங்காமல் திரிவேணி என்னதான் செய்கிறாளோ...?''

என்று தனக்குள்ளேயே முனகிக் கொண்டான். திரிவேணியின் நினைவு வந்ததும் அவனுள் புரிந்து கொள்ள முடியாத குழப்பம் எழுந்தது.

இவள் எதற்காகப் பட்டினி கிடந்தாள்? எனக்காகவா..... எனக்காகவா?

இதை நினைக்க நினைக்க அவனுக்கு விசித்திரமாக இருந்தது. இந்த நினைவு அவன் மனத்தில் உற்சாகத்தையும் ஊட்டியது; தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

இந்தப் பெண்ணும் கற்பனை லோகத்தில் புகுந்து விட்டாளா? இயற்கை யாரைத்தான் சும்மா விட்டு வைக்கிறது? பருவம் மனிதனின் வாழ்க்கையில் விசித்திரமான கட்டம் தான். அவனைக்கூட அது ஆட்டி வைத்ததே! சட்டக் கல்லூரியில் படித்த காலத்தில் ஒருத்தியை அவனிடம் இழுத்து வந்தது, இந்தப் பருவத்தின் சக்திதானே—

அந்த நினைவெல்லாம் பழங்கதைதானே?

பழங் கதைதானா? -உண்மையிலேயே அது கற்பனையாக, பழங் கதையாக ஆகிவிட்ட விஷயம்தானா...? அப்படியானால் அந்த நினைவு வரும்போதெல்லாம் அவன் உள்ளமும், உடலும் நிலைகொள்ளாமல் தவிப்பானேன்...? தண்ணீருக்குள் எவ்வளவுதான் ரப்பர்ப் பந்தை அமுக்கினாலும் கையை விட்டதும் தண்ணீருக்கு மேலே துள்ளி வந்து விடுகிறதே! பழைய நினைவும் இப்படித்தான் நெஞ்சில் வந்து மிதந்து கொண்டு, அவனை அலைக்கழிக்கிறது. அந்த நினைவு அவனுக்கு வேப்பமரத்துத் தேன் மாதிரிதான், நாக்கில் படும்போது இனிக்கும், விழுங்கும்போது கசக்கும். அதிலும் ஒருவித கற்பனை சுகம் இருப்பதை அவன் உணராமல் இல்லை.

அவனுடைய இதயராணியோடு அவன் வாழ்க்கை பிணைந்திருந்த சம்பவங்களெல்லாம், தூசி படர்ந்த பழைய சித்திரமாகத் தான் இருந்தன. தூசி விலகிவிட்டால், சித்திரம் பளிச்சென்று தெரிந்து விடும். நிகழ்காலத்தின் சூழ்நிலைதான் பழைய நினைவுகளை மங்கச் செய்திருந்தன. ஆனால், தனிமையில் இருக்கும்போது பழைய காதலி ராணியின் உருவம் எவ்வளவு பளிச்சென்று பிரகாசமாக மின்னுகிறது! அவளைப் பற்றிய நினைவு இனிமையானதுதான். ஆனால், கரும்பைச் சுவைத்த பிறகு நாக்கில் புண் உண்டாகி எரிச்சல் தோன்றுவது போலத்தான்.

அவனுடைய இதய ராணியைப் பிரிந்த சம்பவம் அவன் இதயத்தில் எவ்வளவு பெரிய வடுவை உண்டாக்கி விட்டது! பழைய புண்ணின் தழும்பில் வலி இருப்பதில்லை. ஆனால் தழும்பைத் தடவும்போது புண்ணின் நினைவு உண்டாகி விடுகிறதல்லவா? அது மாதிரிதான் கடந்த சம்பவங்கள் அவனுள் மறைந்து கிடந்தன.

''தீவிரவாதி நடுஜாமத்தில் விளக்கேற்றிக் கொண்டு என்ன சதி செய்கிறீர்?'' என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான். வெளி வராந்தாவில் திரிவேணி நின்று கொண்டு சன்னல் வழியாக அவனைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

விளக்கை அணைக்காமலே படுக்கையில் புரண்டு கொண்டு சிந்தனையில் மூழ்கிவிட்டதை உணர்ந்தான் ரங்கமணி. ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்து விட்டு எழுந்து கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டான்.

''அஹிம்ஸாவாதிக்கு இருட்டில்தான் சதி மோக்ஷம் என்றால் விளக்கை அணைத்து விடுகிறேன்'' என்றான்.

''இருட்டு தீவிரவாதிகளுக்கல்லவா வேண்டும்? இருட்டில்தானே உங்கள் சதித் திட்டங்களை நிறைவேற்ற முடியும்'' என்றாள் திரிவேணி.

''இதென்ன நடுஜாமத்தில் இப்படி வம்புக்கு இழுக்கிறாய்? அதுவும் நான்தான் அகப்பட்டேனா?''

''வாசலில் ஜிம்மி உறுமியது. பார்க்க வந்தேன். உங்கள் அறையில் விளக்கு எரிந்தது. தீவிரவாதி சதி செய்கிறாரோ என்று பார்த்தேன்'' என்றாள் திரிவேணி.

''தீக்ஷிதரின் குறட்டை வார்தா வரைக்கும் கேட்கும் போலிருக்கிறதே'' என்றான் ரங்கமணி.

''நான் போகிறேன். நீங்கள் உங்கள் சிந்தனையைத் தொடருங்கள். தீக்ஷிதரின் குறட்டை உங்கள் சிந்தனைக்குப் பக்கமேளமாக இருக்கும்'' என்று கூறிவிட்டுச் சென்றாள், திரிவேணி.

கட்டிலிலிருந்து எழுந்து விளக்கை அணைத்து விட்டு மீண்டும் படுத்தான். தீக்ஷிதரின் குறட்டை தாளம் தவறாமல் வந்துகொண்டிருந்தது.

பக்கத்து அறையில் சுவர்க் கடிகாரம் பன்னிரண்டு மணி அடித்து விட்டு ஓய்ந்தது. திரிவேணியின் அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கும் அணைந்து விட்டது. ரங்கமணி தூங்க முயற்சி செய்தான். தூக்கத்திலும் பல நினைவுகள் மனத்தில் குமைந்து கொண்டிருந்தன. நினைவுகளுக்கு இடையே ஆசை முகத்தின் மயக்கும் விழிகள் தோன்றின. அதையே உற்றுப் பார்த்தான்.

சிறிது நேரத்தில் ராணி அவன் பக்கத்தில் நின்றாள். அவளையே ஆவலோடு பார்த்தான். அவள் சிரித்தாள். அவன் எழுந்து அவள் கைகளைப் பற்றிக் கொண்டான். அந்த ஸ்பரிசத்தில் பிரிவின் வேதனை துடித்தது. ஒன்றும் பேச ஓடாமல் அவள் முகத்தையே பார்த்துச் சொக்கி நின்றான். அவன் வாய், ''ராணி!'' என்று முனகியது. அவள் சிரித்தாள். என்ன ஆச்சரியம்! அவன் பிடித்துக் கொண்டிருந்தது அவனுடைய ராணி அல்ல, திரிவேணிதான்! கண்களைக் கசக்கிக் கொண்டு மீண்டும் உற்றுப் பார்த்தான். சந்தேகமே இல்லை, திரிவேணிதான்! ராணி எப்படித் திரிவேணியாக மாறினாள்...? திகைப்புடன் வெறிக்கப் பார்த்துக் கொண்டு நின்றான். திரிவேணி கலகலவென்று சிரித்தாள். ரங்கமணி திடுக்கிட்டு விழித்தான். அவ்வளவும் கனவுதானா...!

திரிவேணி, வராந்தாவில் அத்தையுடன் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சிரிப்பொலிதான் அவன் தூக்கத்தைக் கலைத்து விட்டது. காலையில் மணி ஏழு இருக்கும். ரங்கமணி படுக்கையில் படுத்த வாறே சன்னல் வழியாகப் பார்த்



''ஏன் ஒருமாதிரியாக இருக்கிறாய்? உடம்பு சரியில்லையா மாலதி?''

''பவுடர்; ஸ்னோ புட்டி எல்லாம் காலி! எந்த முகத்தை வைத்துக்கொண்டு நான் காலேஜ் போவேன்?''

தான். திரிவேணி குளித்து, ஈரத் தலையைக் காற்றில் உலர்த்திக் கொண்டு வராந்தாவில் நின்று கொண்டிருந்தாள். பக்கவாட்டில் தெரிந்த அவள் உருவத்தை ஓரக்கண்ணால் பார்த்தான். பக்கவாட்டிலிருந்து பார்த்தால் திரிவேணியின் உருவம் ராணியைப் போல் தோன்றுவதாக அவனுக்குப் பிரமை தட்டியது. அவளைக் கூர்ந்து பார்த்தான்.

அத்தை வீட்டுக்குள் போய் விட்டாள். வாசலில் நின்றிருந்த திரிவேணி, திரும்பி, சன்னல் வழியாக ரங்கமணியைப் பார்த்தாள். அவன் ஏற்கனவே தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறான் என்பதை உணர்ந்த திரிவேணியின் முகம் குங்குமமாகச் சிவந்தது. கண்கள் தரையை நோக்கின. மீண்டும் அவள் பார்வை சன்னலுக்குள் நுழைந்த போது ரங்கமணியின் பார்வையோடு முட்டி மோதித் திணறியது. தான் அவளையே கண் கொட்டாமல் பார்க்கிறோம் என்ற உணர்வில்லாமல் ரங்கமணி அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் உள்ளத்தில் இரு உருவங்கள் மாறி மாறித் தோன்றிக் குழப்பிக் கொண்டிருந்தன. ராணியின் உருவம் எண்ணத்தில் படர்ந்தது, திரிவேணியின் உருவம் அவன் எதிரே சன்னலுக்கு வெளியே கண்ணில் படர்ந்து கொண்டிருந்தது. அவனுடைய பார்வையின் தீட்சண்யத்தைத் தாங்காத திரிவேணி மெதுவாகச் சன்னலை விட்டுச் சற்று விலகி நின்றாள். அவள் உருவம் மறைந்ததும் ரங்கமணிக்குத் தன்மீதே சந்தேகம் வந்து விட்டது. சன்னலுக்கு அப்பால் தெரிந்த உருவம் திரிவேணிதானா? அல்லது பிரமையா?...

ரங்கமணி, படுக்கையிலிருந்து அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த போது வராந்தாவில் திரிவேணி நின்று கொண்டிருந்தாள்.

''நீதானா?'' — அவன் வாய் முணுமுணுத்தது.

''பின்னே யார் என்று நினைத்தீர்கள்?''— திரிவேணி கேட்டாள்.

''தூங்கி எழுந்ததும் யாரோ அப்ஸரஸ் மாதிரி தெரிந்தது.''

''ஓ....இரவில் தேவலோக யாத்திரை போயிருக்கிறது'' என்றாள் திரிவேணி சிரித்துக் கொண்டே. அந்தச் சிரிப்பு பூமாரி பொழிவது போலிருந்தது. ரங்கமணி ரசித்துக் கொண்டு நின்றான். இந்தச் சமயத்தில் அத்தை வந்து கூப்பிடவே திரிவேணி, வீட்டுக்குள் போய்விட்டாள்.

ரங்கமணி சற்றுத் திகைப்புடன் அறை வாசலிலேயே நின்றான். அவனுக்கு என்ன வந்துவிட்டது இன்று? திரிவேணி அவனுக்கு அப்ஸரஸ் மாதிரி தோன்றுவானேன்? அது, அவளைக் சொன்ன வார்த்தையா...? அவனை அறியாமல் அவன் நாக்கு உளறிய சொல் அது. சே.... இன்று ஏன் மனம் இப்படித் தடுமாறுகிறது...?

துண்டையும் சோப்பையும் எடுத்துக் கொண்டு வீட்டின் பின்பக்கம் சென்றான் ரங்கமணி. கிணற்றடியில் குளிக்கும்போது, காலையில் அவன் திரிவேணியுடன் பேசிய பாணியை நினைத்துச் சிரித்துக் கொண்டான். ஏன் அப்படிப் பேசினான்? திரிவேணி, இன்று திடீரென்று அவனுக்கு அப்ஸரஸாக மாறுவானேன்...?

அவள் ஒன்றும் அப்ஸரஸாக மாறவில்லை. ராணியின் நினைவில் குறுகுறுத்த நெஞ்சம், கண்ணெதிரே தெரிந்த திரிவேணியை அப்ஸரஸாகப் பாவித்து விட்டது.

ராணியின் முகம் ஒரு கணம் அவன் நினைவில் நிறைந்து நின்றது. அதில் அவன் மனமும் நிறைந்து பொங்கிற்று. நீண்ட பெருமூச்சு விட்டான்.

திடீரென்று ஒரு பயம் அவனைச் சூழ்ந்து கொண்டது. அவனையும் அறியாமல் திரிவேணியை அவன் நெஞ்சம் தன்னுள் குடியேற்ற முயலுகிறதோ....?

இந்த நினைவில் அவன் உடல் சிலிர்த்தது. சீக்கிரமாகக் குளித்து விட்டுத் தன் அறைக்குள் நுழைந்து பெட்டியைத் திறந்து அவசரம் அவசரமாகத் துளாவினான். முதலில் அவன் கையில் தந்தச் சிலுவைதான் அகப்பட்டது. அதைப் பெட்டிக்குள் ஓரமாகத் தள்ளிவிட்டு இன்னும் துளாவினான். அடியில் மரகதம் பதித்த ஒரு மோதிரத்தை எடுத்தான். அதைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தான்.

மோதிரத்தைத் தீண்டியதும் அதன் ஸ்பரிசம் அவன் உடலில் சிலிர்ப்பை உண்டாக்கியது. நெஞ்சில் மங்கியிருந்த கடந்த காலம், நினைவில் இனித்தது. ஒரு புது வேகம் அவனுள் குறுகுறுத்தது. மோதிரத்தை விரலில் மாட்டிக் கொண்டு அழகு பார்த்தான். மரகதத்தின் ஒளி அவனைப் பார்த்துச் சிரித்தது.

பழைய சம்பவம் ஒன்று அந்தப் பச்சைக் கல்லில் மின்னியது. (தொடரும்)

## அத்தியாயம் 12

# வீர வாள்

"இரவோடு இரவே உங்கள் துளுநாட்டு அரண்மனையின் அரசப் பள்ளியறையிலே குதித்து, மன்னன் என்று எண்ணி மாருட்டம் ஏற்பட்டு உங்களை எடுத்து வந்தேன் அல்லவா? அப்போது உண்டான இதயத் துடிப்பு வேறு! உங்கள் நாடியைப் பரிசோதித்துப் பார்த்தபோது உண்டான இதயத் துடிப்பு வேறு. இரண்டும் இரு வேறு உலகங்கள்!'' என்ருன் அழலாடி.

''நண்பரே! நீங்கள் சொல்லுவது எனக்குச் சரியாகப் புரியவில்லையே!'' என்ருள் இளவரசி.

''மயக்கப் புகையினுல் நீங்கள் நினைவழிந்து கிடந்த நிலையில், உங்களைத் தொட்டு உங்கள் உடம்பைத் தூக்கி வந்தபோது என் அனுபவம் வேறு. எனக்கு ஏற்பட்ட திகைப்பினுலோ அல்லது உங்கள் உடம்பின் உணர்வற்ற நிலையினுலோ எனக்கு வேறு எத்தகைய துடிப்பும் ஏற்படவில்லை. ஆனுல் நினைவு மீண்டபோது உங்கள் உடம்பைத் தொட்டதும் ஏதோ ஒரு மின்னல், ஏதோ ஒரு புதிய வேகம் என்னைத் தாக்கியது. நாடியைப் பிடித்தவன் அப்படியே உதறி விட்டேன்!''

இவ்வாறு சொன்னபோது அழலாடி தன்னையே நோக்கி ஒரு வித வெட்கத்தினுல் சிரித்துக் கொண்டான்.

''வீரரே! அன்பு என்ற உணர்ச்சி ஏற்படும்போது ஒருவருடைய நாடியை மற்றவர் தொட வேண்டிய அவசியம் கூட இல்லை. பார்க்கும்போதே கூட அத்தகைய துடிப்பு' உண்டாகி விடுகிறது. என் வரையில்



# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு
## வலியை அதி வேகமாக
## வெளியேற்ற

# புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைண்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைண்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருளின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது**
புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் கவனமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல்வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி.

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறுகள் பெரியவையாக இருந்தால், அவை உங்கள் உடலில் கலப்பதற்கு அதிக நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறுவதற்கு அதிக நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைண்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோஃபைண்ட்

**'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிகோலஸ் தயாரிப்பு

அதை நான் கடந்த சில நாட்களாக உணர்ந்து வருகிறேன்'' என்றாள் இளநன்னி.

இருவரும் மௌனமாக நின்றார்கள். வானத்திலே முழு நிலவு எழுந்து வந்து கொண்டிருந்தது. தூய்மையான நீல மேகத் திட்டுக்களிலே ஒளிக் கண்கள் இமைகளைக் கொட்டின. அடர்ந்த மரங்களிலே குளிர் காற்று புகுந்து உலுப்பியது. மலை முகட்டிலே தவழ்ந்து கொண்டிருந்த அருவி 'திண் திண்' என்று நடனமாடிக் குதித்துக் கொண்டே சிற்றோடையாக விழுந்து மலையன்னையின் இதயத் துடிப்புப் போல் சலசலத்துக் கொண்டே ஓடியது.

''இதயம் துடிக்கிறது என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். நானும் சொல்லுகிறேன். ஆனால் இந்தத் துடிப்புக்கும் என் தந்தை என்னைச் சீற்றத்தினால் அச்சமுறுத்தும்போது எனக்கு ஏற்பட்ட துடிப்புக்கும் ஏதோ ஒரு மாறுபாடு இருக்கிறது. அந்தத் துடிப்பிலே அச்சத்தினால் உள்ளத்தோடு சேர்ந்து உடம்பு படபடக்கும். இந்த நிலமும் வானமும் எல்லாம் சேர்ந்து ஆடும். உயிரே துடித்துக்கொண்டு உடற்திட்டிலிருந்து சரிந்து விழுந்து விடுவது போல ஒரு துணுக்கம் ஏற்படும். அது அச்சத் துடிதுடிப்பு. ஆனால்... ஆனால் இந்த இதயத் துடிப்பு அப்படி இல்லை. இந்த இதயத் துடிப்பிலே ஒரு...ஒரு...ஒரு...''

இளவரசி சொற்களை அப்படியே நிறுத்தினாள்.

''ஆமாம். என் அநுபவமும் அது தான். இந்த இதயத் துடிப்பு வேறு வகையாகத்தான் இருக்கிறது. கொம்புகளைப் பிடித்துக் கீழே வளைத்து மடக்குகிற காளை மாடு, சில சமயம் சிலிர்த்துக்கொண்டு எதிர்பாராத வகையிலே திமிறும். அப்போது ஒரு துடிப்பு ஏற்படுவதுண்டு. அந்தத் துடிப்பு முற்றிலும் வேறு வகை! அந்த இதயத் துடிப்பு எனக்குப் பழக்கம். அந்தத் துடிப்பிலிருந்து ஒரு சீற்றம் உண்டாகும். உடனே ஓர் ஆவேசத்தோடு என் கைகள் இரண்டும் திமிர் கொண்டு மாட்டின் மீது வேதாளச் சீற்றத்தோடு பாய்ந்து விடும்! அது அனல் துடிப்பு. ஆனால் இந்த இதயத் துடிப்பு அப்படியில்லை. இந்த இதயத் துடிப்பு இருக்கிறதே, இது... இது... இது. ''

அழலாடி தன்னுடைய சொற்களை அப்படியே நிறுத்தினான்.

அருவிக் கரையிலே சிற்றோடையின் ஓசையும், காற்றின் வேகமும் அருவியின் நடன ஒலியும் மோனத்தின் நடுவிலே ஓடுகிற உயிரின் ஓட்டத்தைப் போன்று குரல் கொடுத்துக் கொண்டு ஓடின.

''அழலாடி!'' என்று அழைத்தாள் இளவரசி.

''நன்னி!'' என்று அழைத்துக் கொண்டே அவளுடைய கரங்களைப் பற்றினான் அழலாடி.

''சில கரங்கள்தான் எத்தனை மென்மையாக இருக்கின்றன!'' என்றான் அழலாடி.

''சில இதயத் துடிப்புக்கள்தான் எத்தனை சுகமாக இருக்கின்றன!'' என்றாள் இளவரசி.

''அன்பை அறியாத இரண்டு உள்ளங்கள், அன்பு என்றால் அது எப்படி இருக்கும் என்று தொட்டுப் பார்த்திராத இரண்டு இணைக் கரங்கள் - அவற்றுக்கு இதெல்லாம் புதிய அநுபவங்கள் அல்லவா!''

இருவரும் மேலே நடந்தார்கள். மலை முகடும், மரங்களும், பூஞ்செடிகளும் குதித்தோடும் அருவியும், வானத்திலே தவழும் முழு நிலவும் எல்லாம் இசையிலே பல்லியங்கள் சேர்ந்து ஒலிப்பது போல இயற்கையின் ஏதோ ஓர் ஆதார ஒலியிலே இதயம் ஒன்றி ஒலித்தன. அருவியின் அருகிலே பாய்ந்தோடிய இளநன்னி, பளிங்குத் தண்ணீரைக் கையிலே எடுத்துப் பன்னீர் தெளித்து விளையாடினாள்! *

ஃ ஃ ஃ



கொங்கு நாட்டு வஞ்சி அரண்மனையிலே இப்போது ஒரு புதிய மெருகு ஏறியதுபோலப் புத்தொளி படர்ந்தது. மணமன்றத்தில் ஒரு கலகலப்பு இணைந்தது. வளர்ப்பதற்கு ஒரு பெண் இல்லாத மன்னனுக்கு இப்போது இளநன்னியின் வரவு ஒரு புதிய களிப்பை நல்கியது. துளு நாட்டு இளவரசியாகப் பிறந்த இளநன்னி, வஞ்சிநாட்டு இளவரசியாக அந்த அரண்மனையிலே நடமாடினாள். மன்னனுடைய உள்ளத்தில் பிறருக்குத் தெரியாமல் ஏதேதோ எதிர்கால எண்ணங்கள் நல்ல முறையிலே உருவாகிக் கொண்டிருந்தன என்று அரசச் சுற்றத்தார்கள் பேசிக்கொண்டார்கள்!

சேரலாத மன்னனுடைய அரசவையிலிருந்து ஒற்றர்கள் அடிக்கடி வந்து போனார்கள். வெள்ளைத் தீவுக் கடம்பர்களை ஒழிப்பது, துளு நாட்டு நன்னர்களை இருந்த இடம் தெரியாமல்

---

* அட்டைப் படம்: விஜு.

## ஒரு நாளைக்கு 13 கோடி !

நான்காம் ஐந்தாண்டுத் திட்டப் படி பொருளாதார முன்னேற்றத் துக்காக ஒரு நாளைக்குச் செலவழிக் கப்படும் பணம் 13 கோடி என்று யோஜனு பத்திரிகை கூறுகிறது. ஆக, முன்னேற்றம் எதில் இருக் கிறதோ இல்லையோ, கோடி கோடி யாகச் செலவழிப்பதில் முன்னேற் றம் நிச்சயம் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும்!

தகவல்: —'எறும்பு'

துடைப்பது ஆகிய இரண்டு பெரும் பணிகளுக்கான அரசியல் ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. கொங்குச் சேர மன்னன் தனது கிளை மன்னனாகிய சேரலாதனுக்குப் படை உதவி செய்யும் நோக்கத்தோடு பல முயற்சிகளில் ஈடுபட்டிருந்தான்.

கொங்கு வஞ்சி நகரத்திலே அர சாண்டு வந்த கிளைச் சேர மன்னர் களுக்கு ஒரு பெரிய சிறப்பு உண்டு. தமிழகத்தில் வேறு எந்த அரசனுக் கும் இல்லாத அளவுக்கு அத்தனை பெரிய வலிமை மிக்க ஆனைப் படை கொங்கு மன்னனிடம் இருந்தது. இப் போது அந்தப் பெரிய ஆனைப் படையை மேலும் விரிவு செய்கிற முயற்சியிலே ஈடுபட்டான் கொங்கு மன்னன். அந்த முயற்சிக்குத் துணையாக ஒரு நாள் அழலாடியையே தனது அரச மன்றத் துக்கு அழைத்தான் மன்னன்.

''வீரனே! உன்னுடைய ஆற்றலையும் வீரத்தையும் பற்றி ஆதனார் கூறி யுள்ள சொற்களை நான் மறக்கவில்லை. இளநன்னியின் உடம்பு தேறுகிறவரை உனக்கு வேறு எத்தகைய பொறுப்பு களும் கொடுக்க வேண்டாம் என்று கருதியே இதுவரை பொறுத்திருந் தேன். இப்போது இளவரசி நன்னி நன்கு தேறி இந்த அரண்மனை வாழ்விலேயே ஒரு புதிய ஒளியைக் கொடுக்கத் தொடங்கி விட்டாள். அந்த ஒப்பற்ற புத்தொளிக்கு நீதான் காரணம். இள வரசி இல்லாத ஓர் அரச இல்லத்திலே இளவரசியைக் கொண்டு சேர்த்ததோடு தமிழகத்தின் அரசியல் வரலாற்றிலேயே ஒரு புதிய திருப்பம் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்திருக்கிறது. இந்த நிகழ்ச்சி. துளு நாட்டிலோ என்றால், இளவரசி காணாமற் போனதிலிருந்து அந்த அரண்மனையே ஆடிப்போய் இருக்கிறதாம். அந்த அரச இல்லத் திலே ஒளி பரப்பிய திருமகள் அங் கிருந்து அகன்று விட்டாள் அல்லவா! இப்போது இந்தக் கொங்கு அரண்மனை யில் அல்லவா அவள் கோலம் கொண்டு வீற்றிருக்கிறாள். எனவே இந்த அரிய செயலைச் செய்த உனக்கு இந்தக் கொங்கு நாட்டு அரசியல் வாழ்வி லேயே ஒரு பெரிய பங்கு உண்டாகி விட்டது. அந்தப் பங்கை நிறை வேற்றுகிற வேளை இது. அதனால் தான் உன்னை அழைத்தேன்.''

உள்ளக் களிப்போடு இவ்வாறு உரையாடினான் மன்னன்.

''அரசர் பெருமானே! இந்த உடம்பு மற்கூடத்திலே ஆதனாரின் கண்காணிப் பிலே பயிற்சி பெற்று உருவாகியது. கடந்த சில நாட்களாக எதிர்பாராத வகையிலே ஊழ்வினை இந்த அரசியல் சூழ்நிலையிலே கொண்டு என்னைச் சேர்த் திருக்கிறது. இந்நிலையில்—''

''அழலாடி! உன்னுடைய பணிவை யும் அடக்கத்தையும் பற்றி ஆதனார் நிறையச் சொல்லியிருக்கிறார். அதெல் லாம் எனக்குத் தெரியும். இப்போது நீ செய்ய வேண்டியது ஒரு பெரி சாதனை. அதை முடிக்கக்கூடிய ஆற்றல் உனக்கு உண்டு என்பதை அறிவேன்!'' என்றான் மன்னன்.

''அரச உத்தரவுக்குக் காத்திருக் கிறேன். என் வரையில் ஆதன் ஆசிரியர் தந்த வாழ்த்து ஒன்றுதான் எனக்குள்ள வலிமை! அந்த வாழ்த்தின் ஆற்றல் எதையும் செய்துமுடித்து விடும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!'' என்று பணிவோடு கூறினான் அழலாடி.

''மல்லனே! ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை நமது கொங்கு நாட்டு அரச ஏற்பாட்டின் கீழ் ஆனை பிடிக்கும் திருவிழா மிகவும் பெரிய அளவிலே நடப்பதுண்டு. சில எதிர்பாராத அர சியல் காரணங்களால் அந்த விழா சென்ற இரண்டு முறையாக நடை பெறவில்லை. இப்போது அதற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி கட்டளை பிறப்பிக்க எண்ணியிருக்கிறேன். நமது கொங்குநாட்டு ஆனைப்படைத் தலைவ ருக்கு முதுமையின் தளர்ச்சியும் வய தின் தள்ளாட்டமும் சேர்ந்து, பெரும் பொறுப்புக்களை நிறை செலுத்த முடி யாத நிலையில் அவர் இருக்கிறார். அவரிடம், உன்னை இணைத்து விடுவ தாக முடிவு செய்திருக்கிறேன்!'' என்றான் மன்னன்.

''அரச கட்டளை எதுவோ அதுவே எனது கடமையாகக் கருதி மேற் கொள்ளுகிறேன். ஆனால் என் உள்ளத் தில் உள்ள ஒரு பெரிய நோக்கத்தை

'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'

Tinopal

# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள். உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.





**டினோபால் இப்பொழுது ஸீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது.** ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது. சிறிதும் வீணாவதில்லை. உபயோகிக்கச் சுலபமானது. தொந்தரவற்றது.




டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ்.ஏ.பாஸில், ஸ்விட்சர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்.
சுஹ்ரித் கெய்கி லிட்., த.பெ. 965, பம்பாய் 1 பிஆர்.

Shilpi SG 223 A Tam

அரசர் முன்னிலையிலே வெளியிடுவதற்கு எனக்கு உத்தரவு தரவேண்டும்!'' என்றான் அழலாடி.

மன்னன் புன்முறுவல் செய்தான். செய்து கொண்டே அழலாடியைப் பார்த்துச் சொல்லுவான்:

''வீரனே! உன்னுடைய நோக்கம் எதுவானாலும் அது நிறைவேறுகிற நாள் வந்துவிட்டது என்று நீ திண்ணமாக நம்பலாம். தமிழகத்தின் எதிர்கால வாழ்வையே நாம் அனைவரும் ஒரு நோக்கமாகக் கொண்டு செயல்புரிகிறோம் என்ற பெருமிதமும், நம்பிக்கையும் உன் உள்ளத்தில் ஏற்பட்டு ஊக்கத்தோடு நீ பணி புரிய வேண்டும் என்பது ஒன்றே என் ஆசை!''

''மன்னர் பெருமானே! என்னை அரண்மனைச் சூழலிலே கொண்டு சேர்த்தது, ஒரு குலப் பணியாகும்! துளு நாட்டு நன்னர்களைத் துடைத்து மெழுக வேண்டும் என்ற உறுதியிலே கோசர் குலம் என்னைத் துளுநாட்டுக்கு அனுப்பியது. ஆனால் — ''

அழலாடியின் சொற்களை இடைமறித்தான் கொங்கு மன்னன்.

''வீரனே! உன்னுடைய வாழ்வின் நிகழ்ச்சிகளை நான் அறிவேன். எத்தகைய வேகத்தோடு, எத்தகைய ஆற்றுமையோடு நீ உள்ளம் கொதித்துக் கொண்டு பொருமுகிறாய் என்பதும் எனக்குத் தெரியும். அதனால்தான் துளு நாட்டின் மீது தாக்குவதற்குச் செல்லும் முக்கூட்டுப் படையிலே உனக்கு ஒரு முக்கிய பொறுப்பைத் தர வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறேன். அதற்கு ஒரு முன்னேற்பாடுதான் இந்த ஆனைப்படையின் அணிவகுப்பு!'' என்றான் சேரன்.

அழலாடி தனது உள்ளத்திலே கொதித்து எழுகிற சீற்றக் கனலைப் பெருமூச்சாக வெளிப்படுத்தினான். சற்று நேரம் மோனமாக இருந்தான். பிறகு சொன்னான்:

''அரசே! இந்த உடம்பிலே கொதிக்கிற நெருப்பு காட்டுத் தீப் போலப் பரவி, துளு நாட்டு அரச குலத்தைப் பற்றிப் பிடித்து எரிய வேண்டும். அதற்குரிய வாய்ப்பு எனக்கு என்றைக்குக் கிடைக்கிறதோ அன்றுதான் என் உள்ளத்தின் நெருப்புத் தணியும். இந்த மாபெரும் செயலைச் செய்து முடிப்பதற்காகவே காத்திருக்கிறேன் நான். இந்தக் கைகள், இந்த ஏழை மல்லனுடைய கைகள், ஒரு செயலை, ஒரு முக்கிய செயலைச் செய்வதற்காகத் துடிக்கின்றன. அந்த ஒரு செயலைச் செய்து முடிக்கும் வாய்ப்பை

# சிந்தனைக்கு

பணம் சம்பாதிக்க முயற்சித்தால் பணத்தாசை பிடித்தவன். பணத்தைச் சேமித்து வைத்தால் முதலாளி. பணத்தைத் தாராளமாகச் செலவழித்தால் ஊதாரி. பணம் சம்பாதிக்கத் தெரியாவிட்டால் பைத்தியக்காரன். பணத்தைச் சிரமமின்றிச் சம்பாதித்தால் அயோக்கியன். கஷ்டப்பட்டுச் சம்பாதித்துச் சேமித்து வைத்தால் முட்டாள். இப்படித்தானே உலகம் முடிவு கட்டுகிறது!

ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா'
தகவல்: சு. ரவிச்சந்திரன்

●

பொறுத்திருப்பதன் மூலம் எந்தக் காரியத்தையும் சாதித்துவிடலாம். தண்ணீரைக் கூட ஒரு சல்லடையில் எடுத்துச் செல்ல முடியும். அது உறையும்வரை பொறுத்திருக்க வேண்டும். அவ்வளவுதான்.

ஆதாரம்: நியூயார்க் டெய்லி மிரர்
அனுப்பியவர்: 'இளம் பாரதி'

●

மனிதனிடமுள்ள கெட்ட எண்ணங்களைப் பிளப்பதைவிட அணுவைப் பிளப்பது மிகவும் சுலபம்.'' - ஆல்பர்ட் ஐன்ஸ்டின்

''நாம் பாலங்களைக் கட்டுவதற்குப் பதில் சுவர்களைக் கட்டிவிட்டுப் பிறகு தனிமையில் வாடுவதை நினைத்து வருந்துகிறோம்'' - யாரோ ஒருவர் கூறியது

அனுப்பியவர்: வி. சம்பத்குமார்

●

கஷ்டத்துக்கு முடிவே இல்லை என்று படுகிறதா? வைரத்தை எண்ணிப் பாருங்கள். நெடுநாட்களுக்கு அழுத்தப் பெற்றதால்தான் நிலக் கரியாக இருந்த அது வைரமாக மாறி ஜொலிக்கிறது! — எம். காந்தா

●

பணத்தைவிட மகிழ்ச்சியில் ஒரு பெரிய வசதி இருக்கிறது. மகிழ்ச்சியை யாரும் கடன் கேட்க மாட்டார்கள்.

சிந்தனை இல்லாமல் பேசுவது, குறி பார்க்காமல் சுடுவதைப் போன்றது. - தொகுப்பு: தி. கு. ரா.

●

இரண்டு வீரர்களில், எதிரியை அதிகம் மதிப்பவனே சிறந்தவன். - பியூமெல்

உன் கடமையை எப்பொழுதும் செய்யத் துணிந்திரு. இதுவே உண்மையான வீரத்தின் உச்சநிலை. — ஸி. ஸிம்மன்ஸ்

தொகுப்பு: ஆ. பாண்டியராஜன்

மட்டும் இந்த ஏழையிடம்தான் நீங்கள் ஒப்படைக்க வேண்டும் என்று பணிவோடு கோருகிறேன்!'' என்றான் அழலாடி.

''அது என்ன? தயங்காமல் கூறலாம் நீ, அழலாடி!'' என்றான் அரசன்.

''அரசர் பெருமானே! நமது வீரம் மிகுந்த படை துளுநாட்டு வீரர்களைத் தாக்கி அவர்களைப் பூண்டோடு அழிக்கப் போகிறது என்பது உறுதி. ஆனால் அந்த முயற்சியின் போது, வீரம் மிகுந்த அந்தத் தாக்குதலின் போது, நன்னன் என்ற அந்த மன்னனைத் தாக்கி அவனுடைய தலையைக் கீழே வீழ்த்த வேண்டிய ஒரு கடமையை மட்டும் இந்த ஏழையின் கைகள் செய்து முடிக்க வேண்டும் என்று துடி துடிக்கின்றன. எந்தப் படையிலே எந்த அணிவகுப்பு வேறு எதைச் செய்தாலும், நன்னன் என்ற அந்தப் பாவியினுடைய தலையை வீழ்த்த வேண்டிய வாள் மட்டும் இந்த அழலாடியின் வாளாகத்தான் இருக்க வேண்டும். கோசர் குலம் எனக்குக் கொடுத்த கட்டளையை, கோசர் குலம் என்னிடம் ஒப்படைத்த ஒரு பொறுப்பை, நான் அப்படி நிறைவேற்றத் தவறினால் என் ஆன்மா என்னை மன்னிக்காது. என் உயிரே என்னை வாதனை செய்யும். ஆகையால் குலப் பழியைத் துடைப்பதற்காகப் புறப்பட்ட இந்த ஏழை, தன்னுடைய உயிர்க் கடமையை நிறைவேற்றுதற்குரிய அந்த வாய்ப்பை என் கைகளுக்கே வழங்க வேண்டும் என்று வேண்டுகிறேன்—''

மன உறுதியோடு உறையிலிருந்து தன் வாளை உருவினான் அழலாடி. அந்த உருவிய வாளை மன்னனுடைய பாதங்களிலே வைத்து வணங்கி நின்றான்.

''வீரமல்லனே! உன்னைப் பற்றி ஆதனார் சொன்ன சொற்களில் எள்ளத்தனையும் பிசகு இல்லை. ஆசிரியருக்கு ஏற்ற மாணவன் என்பதோடு, இந்த அரசப் படைக்கு ஏற்ற ஒரு நல்ல வீரனைத்தான் என்னிடம் கொண்டு சேர்த்திருக்கிறார் ஆசிரியர்! அது பற்றி மிகவும் உவகை அடைகிறேன் நான். அழலாடி, இதோ என்னுடைய மனம் முழுதும் நிரம்பிய வாழ்த்தோடு இந்த வீரவாளை உன்னிடம் மறுபடியும் தருகிறேன்! உன் மன நிலையை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறேன் நான். உன்னுடைய விருப்பம் நீ நினைக்கிற முறையிலேயே நிறைவேறுமாக! நம்முடைய முக்கூட்டுப் படை துளுநாட்டுப் பகைவர்களைத் தாக்கி வெற்றிக் குரல் எழுப்பும் போது, உன்னுடைய இந்த வீர வாள் தனக்குரிய புண்ணியப் பணியைச் செய்து முடித்துக் கோசர் குலப் பழியைத் துடைக்குமாக! கொதித்துக் கொண்டிருக்கிற இந்த நில மகளின் உள்ளக் கொதிப்பு அடங்க வேண்டுமானால், உன்னுடைய வாளிலிருந்து அந்தக் கொடுங்கோலனுடைய குருதித்துளிகள் இந்தத் தமிழ் நாட்டு மண்ணிலே சிந்த வேண்டும். அந்தப் பெரும் பணியைச் செய்யக் கூடிய வாய்ப்பும், அரசப் பெரும் பேறும் உன்னுடைய இந்த வீர வாளுக்குக் கிடைக்குமாக என்று வாழ்த்துகிறேன். நமது அரச குலத்தின் கடவுள், நாம் வழிபடுகிற குலதெய்வம் கொற்றவை, உன்னுடைய வாளின் முனையிலே நின்று விளையாடட்டும்! அவளுடைய திருவருள் அந்தக் கொடிய அரக்கத் தலையை இந்த மண்ணிலே வெட்டி வீழ்த்தட்டும். பாவமும் பழியும் நிறைந்த அந்தக் கொடிய தலை கீழே உருண்டு அதன் குருதித் துளிகளிலே நிலமகளின் சீற்றக் கனல் தணியட்டும்! மன நிறைவோடு உன்னை ஆயிரம் ஆயிரம் முறை வாழ்த்துகிறேன். இந்தா, வீரப் பெருமிதத்தோடு இந்த வாளைக் கையிலே பிடி!''

அரசனுடைய திருவடிகளைத் தொட்டுக் கண்ணிலே ஒற்றிக் கொண்டு அந்த வீர வாளை வாங்கி வஞ்சினத்தோடு உறையிலே செருகினான் அழலாடி.

''வீரனே! கோசர்குலம் தனது நெடிய பழியை நீ துடைத்தாய் என்று மன அமைதி கொள்ளப் போகிறது. கோசர்குலத்து முன்னோர்களின் ஆவி உன்னை மனமார வாழ்த்தப் போகிறது. அப்போது இந்தத் தமிழ் மன்னர்களின் படையணியும் உன்னைக் கொண்டாடி மகிழும்!''

இவ்வாறு களிப்போடு கூறினான் கொங்குச் சேரன். அப்படியே மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டு மன்றத்திலிருந்து வெளியே வந்தான் அழலாடி. அங்கே அவனுடைய வரவுக்காகக் காத்திருந்தது யார்? அவனுடைய ஆசிரியர் ஆதனார்! ஆம்; மாற்றுடையிலே துளு நாடு சென்று பொன்மணியைப் பற்றிய உண்மை நடப்புக்களை ஆராய்ந்து வரப் போவதாக எழுத்து அனுப்பினாரல்லவா, இப்போது அவர் மன்றத்துக்கு வெளியே அழலாடிக்காகக் காத்திருந்தார்!

**(தொடரும்)**

# செய்திப் படங்கள்

ராஷ்டிரபதியிடமிருந்து டாக்டர் வே. ராகவன் தம் சம்ஸ்கிருத நூலான 'போஜரின் ஸ்ருங்கார பிரகாசா'வுக்குப் பரிசைப் பெறுகிறார்.



ராஜ்ய நிதி மந்திரி சச்சீந்திர சௌத்ரியிடமிருந்து புதிய உதவிப் பிரதம மந்திரியும், நிதி மந்திரியுமான திரு மொரார்ஜி தேசாய் பதவிப் பொறுப்பை ஏற்கிறார்.

பனிப் பிரதேசங்களில் தங்கள் உபகரணங்களோடு போர்ப் படைப் பயிற்சியில் ஈடுபட்டுள்ளனர் ராணுவ வீரர்கள். இப்பொழுது ராணுவத்தினருக்கான பனிஉடைகளும், உபகரணங்களும் இந்தியாவிலேயே தயாராகின்றன.





பம்பாயில் உள்ள மாதர் சங்கத்தினர் ரவீந்திர நாட்டிய மந்திரில் தங்கள் நான்காவது ஆண்டு விழாவை ஸ்ரீமதி ரோஷன் ஷ்ராப் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினர். ஸ்ரீமதி லீலாவதி முன்ஷி இவ் விழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டார்.

## இனிமையான வார்த்தைகள்

பிரபல மர்மக் கதை எழுத்தாளர் 'கானன் டாயில்' முடிந்தவரை இனிமையான வார்த்தைகளையே உபயோகிப்பார். பிறர் மனத்தைப் புண்படுத்தவே மாட்டார்.

ஒரு முறை அவர் தம் பதினைந்து வயது மகனுடன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். வழியில் ஒரு ஸ்டேஷனில் வண்டி நின்றது. குரூபியான ஒரு பெண் ரயிலைவிட்டு இறங்கி வெளியே சென்றாள். அவளைப் பார்த்த எழுத்தாளரின் மகன் அவரிடம், "அப்பா! அந்தப் பெண்ணைப் பாருங்கள். எவ்வளவு குரூபியாக இருக்கிறாள்...." என்றான்.

கானன் டாயில் அவன் முதுகில் ஓர் அடி வைத்தார். பிறகு சொன்னார்: "இப்படிப் பேசக்கூடாது. உலகில் யாருமே குரூபி இல்லை. அந்தப் பெண் மற்றவர்களைவிட அழகில் குறைந்தவள்; அவ்வளவுதான்."

ஆதாரம்: மிர்ரர்; தகவல்: கே. ராமச்சந்திரன்

---

பூமி நூல் ஆராய்ச்சியில் பல விஷயங்களைக் கண்டுபிடித்த வாஷிங்டன் கார்பருக்கு அவருடைய நண்பர் ஒருவர் பிறந்த நாள் பரிசாக ஒரு விலை உயர்ந்த வைர மோதிரத்தை அனுப்பி வைத்திருந்தார். அடுத்த தடவை அவரைப் பார்க்க வீட்டுக்கு வந்தபோது "மோதிரம் எங்கே?" என்று ஆவலோடு கேட்டார் நண்பர்.

வாஷிங்டன் அவரைத் தம்முடைய ஆராய்ச்சி அறைக்கு அழைத்துக் கொண்டு போனார். அங்கே கண்ணாடி அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்ட பலவிதமான கற்களுக்கு நடுவே அவர் கொடுத்த வைரமும் இருந்தது! - எஸ். எல். எஸ்.

## நான் அலையவில்லையே, தம்பி!

புகழ் வாய்ந்த பாடல் புனைபவரான மோஸார்டோவைக் கண்ட ஓர் இளைஞன், தமக்கும் பாடல் புனையக் கற்றுக் கொடுக்கும்படி வேண்டினான். அதற்கு மோஸார்டோ "நீ மிகவும் சிறுவனாய் இருக்கிறாய். இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்து வா, பார்க்கலாம்" என்றார். உடனே அந்த இளைஞன் "நீங்கள் மட்டும் ஏழு வயதிலேயே பாடல் புனையக் கற்றுக் கொண்டு விட்டீர்களே!" என்று எதிர்க் கேள்வி போட்டான்.

அதற்கு அந்தச் சங்கீத மேதை சிரித்துக்கொண்டே, "தம்பி! ஏழு வயதில் நான் பாடல் புனைந்தது உண்மைதான். ஆனால் உன்னைப் போல் நான் அதற்காக யாரையும் தேடி அலையவில்லை பார்" என்றார். வெட்கிப் போன அந்த இளைஞன் வேறு ஏதும் கேட்காது வீடு திரும்பினான்.

— தமிழ் நாவரசன்

## விதரணை தெரியாத ரசனை

ஷாவும் அவரது நண்பரும் ரயிலில் சென்றுகொண்டிருந்தனர். அந்த நண்பர் இயற்கைக் காட்சிகளைப் பார்த்து அளவுக்கு மீறிப் புகழ்ந்து கொண்டு வந்தார். ஷாவுக்கு அது எரிச்சலூட்டியது. ஒரு மலைக் குன்றைப் பார்த்து, "ஆகா! என்னே இயற்கையான எழில்! இதை ரசிக்க எவ்வளவு சன்மானம் வேண்டுமானாலும் தரலாமே!" என்றார் அந்த நண்பர். உடனே ஷா எழுந்து ஓடிப்போய் அபாயச் சங்கிலியைப் பற்றி இழுத்தார். ரயில் நின்றது. "நண்பரே! இதற்கு ஐந்து பவுன் தான் தரவேண்டும். ஆனாலும் பரவாயில்லை. நீங்கள் அந்தத் தொகையைத் தந்துவிட்டு உங்கள் இயற்கைக் காட்சியை நன்றாக ரசியுங்கள்" என்றார். எஸ். ராமு, குடந்தை



## செண்ட் பில்




பொருள்களைக் கடனில் வாங்கிவிட்டு அதற்கான பணத்தைத் தராமல் ஏமாற்றுபவர்களிடமிருந்து பணத்தை வசூலிப்பதற்காக மெல்போர்ன், ஆஸ்திரேலியாவில் உள்ள கம்பெனி ஒன்று ஒரு யுக்தியைக் கையாள்கிறது.

அந்தக் கம்பெனியார் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு அனுப்பும் பில் காகிதத்தில் ஒருவித சென்டைத் தெளித்து விடுகிறார்கள். தபால்காரர் கொண்டு போகும்போதே இது 'குப்'பென்று மணக்குமாம். இந்த பில் ஒரு வீட்டில் இருந்தால் வீடு முழுவதும் வாசனை அடிக்குமாம். இதனால் வீட்டுக்கு வருபவர்களுக்கு அந்த வீட்டில் குடியிருப்பவர் பில் பணத்தைத் தராமலிருப்பது தெரிந்து விடும்.

ஆகவே, இந்தப் பில்லை வைத்திருப்பவர்கள் பணத்தை உடனே கொடுத்துவிட்டு பில்லைத் திருப்பி விடுகிறார்களாம்!

தகவல்: வி. சிவசுப்பிரமணியம்

## கேள்விக்கு இடமில்லை!



பின்லாந்திலுள்ள கோர்ட்டில் ஒரு விவாகரத்து வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

கணவருக்கு வயது 87.

மனைவிக்கு வயது 85.

நீதிபதி கேட்ட கேள்வி: "உங்களுக்கு எப்பொழுது கல்யாணம் நடந்தது?"

"செப்டம்பர் 6, 1873."

"உங்களுக்குள் சண்டை எப்பொழுது ஆரம்பமானது?"

"செப்டம்பர் 6, 1873."

வேறு கேள்விகள் ஏதுமில்லை. விவாகரத்து உடனடியாக வழங்கப்பட்டது.

ஆதாரம்: ப்ரீ இந்தியா
தகவல்: எறும்பு

பொதுவாக ஏலம் என்றால் ஒரு குறிப்பிட்ட பண்டத்தை வாங்க விரும்புகிறவர்கள் போட்டி போட்டுக்கொண்டு விலையை உயர்த்திக் கொண்டு செல்வார்கள். அதிகமான விலை யார் கூறுகிறார்களோ, அவர்களுக்கு அப்பொருள் விற்பனை செய்யப்படும். ஆனால் டச்சு நாட்டில் நடக்கும் ஏலம் அதிசயமானது; தலைகீழாக நடக்கிறது.

பண்டத்தின் விலையை முதலில் அதிகமான அளவுக்கு நிர்ணயித்து அறிவிப்பார்கள். வாங்குபவர்களிடமிருந்து பதில் எதுவும் வரவில்லையென்றால் விலையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே போவார்கள். ஏதாவது ஒரு விலை வரும்போது, அந்த விலையில் பண்டத்தை வாங்கிக் கொள்வதாக யாரேனும் கூறியதும், அந்த விலைக்கு விற்பனை செய்யப்பட்டுவிடும்.

தகவல்: சீர்காழி த. ஜெயராமன். ஆதாரம்: 'தி நெதர்லண்ட்ஸ்'



## சேது - ராகவன்

பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்கள் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களுடன் ஒரு சொற்பொழிவை முன்னிட்டு இலங்கை சென்றிருந்தார். அங்கு நடந்த ஒரு கூட்டத்தில் இருவரும் பேசினார்கள். முதன் முதலாகத் திரு சேதுப்பிள்ளை அவர்கள் பேசினார். கேட்ட அத்தனை பேரும் தென்றல் மணத்தையும், செந்தமிழின் ரசத்தையும் அருந்தி, 'என்ன சுகம்! என்ன இனிமை' என்று வியந்து கொண்டிருந்தனர். பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்கள் இதனைப் பார்த்துக் கொண்டிருந்தார். அடுத்தாற்போல் அவர் பேச வேண்டிய தருணம் வந்தது.

"அன்பர்களே! தெள்ளிய தீந்தமிழைக் கொண்டு திருவாளர் பிள்ளை அவர்கள் இலங்கைக்கும் எங்கள் தமிழ் நாட்டுக்கும் சேது அமைத்துவிட்டார்கள். இதோ ராகவன் வந்து நிற்கிறேன்!" என்றார்.

ஆதாரம்: சுவை நானூறு தகவல்: சி. ஜெயராஜ்

அடிக்கடி விவாகரத்து செய்து மறுமணம் செய்துகொள்ளும் ஹாலிவுட் நடிகைக்கும் நடிகர் ஒருவருக்கும் கலியாணம் நிச்சயமாயிற்று. படப்பிடிப்புக்குப் போன நடிகர் விமானம் கிடைக்காததால் குறித்த நேரத்துக்குக் கல்யாணத்துக்கு வந்து சேர முடியவில்லை. "ஒரு மணி நேரம் தாமதமாகும். அதற்குள் வேறு யாரையாவது மணந்துகொண்டு விட வேண்டாம்" என்று அந்த நடிகைக்கு அவசரத் தந்தி கொடுத்தார் அவர்!

- எஸ். எஸ். எஸ்.





# அவர் நினைத்தது

ப. ராதாகிருஷ்ணன்

''கந்தசாமி!.... ஏ, கந்தசாமி!......'' என்று ராஜவேலு கூவியழைத்துக் கொண்டிருந்தார்.

''சாமி!.... எசமான்!'' என்று காட்டின் இன்னொரு மூலையிலிருந்து தொண்டை கிழியக் கத்திக் கொண்டிருந்தான் கந்தசாமி.

அடர்ந்த வனத்தின் அமைதியை ஊடுருவி யெழுந்து மலைச்சாரலில் பயங்கரமாக எதிரொலித்த அம்மனிதக் குரல்கள் கேட்டு விலங்குகள் அஞ்சிப் பதுங்கின. கூடுகளில் உறங்கிய பறவைகள் பதறி விழித்துச் சிறகடித்துக் கொண்டன. ஆனால் ராஜவேலுவின் அழைப்பு கந்தசாமியின் செவியை எட்டவில்லை; அதேபோலக் கந்தசாமியின் ஓலம் ராஜவேலுவின் செவிகளில் விழவில்லை. இருவருக்குமிடையே திக்குத் திசை தெரியாத காட்டுப் பிரதேசம் கடலே போல் பரந்து விரிந்து கிடந்தது.

அவர்கள் இப்படிப் பிரிந்து ஒருவரை யொருவர் தேடித் திரிய வேண்டிய நிலைமை ஏற்பட்டதுதான் எத்தகைய எதிர்பாராத துரதிர்ஷ்டம்!

பொழுது சாயச் சாய, இருள் சூழச் சூழ ராஜவேலுவின் இளம் உள்ளத்தில் அச்சம் அதிகரித்தது. விஷ சர்ப்பங்களும், துஷ்ட மிருகங்களும் மலிந்த இந்த நீலகிரி மலைக் காட்டில் தன்னந் தனியாக இரவில் தங்க நேருமேயானால்....!

ராஜவேலு ஓர் எழுத்தாளன். எழுத்தாளன் என்றால் மீளா வறுமையில் வாடும் பெரும்பான்மை இனத்தைச் சேர்ந்தவனல்ல. நல்ல பொருள் வசதியும் உயர்ந்த கல்வியறிவும் சீரிய குடிப்பிறப்பும் கொண்டு பொழுது போக்கவும் புகழ் சேர்க்கவும் எழுதுபவன். அவனது இலக்கியப் படைப்புக்கள் பல தமிழ், ஆங்கிலச் சஞ்சிகைகளில் பிரசுரமாகியுள்ளன. இந்த நீலகிரிக் காடுகளை நிலைக்களனாக வைத்து ஒரு புதிய நாவல் எழுத விரும்பியவன் நிலைக்களனை நேரில் ஆராய்ந்து கதைக்கான விஷயங்கள் திரட்ட எண்ணித் தன் அபிமான ஊழியன் கந்தசாமியுடன் புறப்பட்டு வந்திருந்தான். இருவரும் கூனூரில் பிரபல ஹோட்டல் ஒன்றில் தங்கியிருந்தனர்.

கந்தசாமி மாஜி ராணுவ வீரன். ஐம்பது வயதைக் கடந்திருந்தபோதிலும் உடலிலோ உள்ளத்திலோ தளர்ச்சி காணாதவன். சக்தி வாய்ந்த இரட்டைக் குழல் துப்பாக்கியைத் தோளிலேந்தி அவன் உடன் வரும் போது தமனுக்கே அஞ்ச வேண்டுவதில்லை. இருவருமாகக் காலையில் கிளம்பிக் காடுகளிலெல்லாம் சுற்றித் திரிந்துவிட்டு மாலையில் ஹோட்டலுக்குத் திரும்பி வந்து சேருவர்.

இன்று நடந்தது என்ன?

மத்தியான வேளையில் பாறை ஒன்றின் மீதமர்ந்து இருவரும் தமது பகலுணவை முடித்துக் கொண்டு இளைப்பாறலாயினர். சற்று ஆழ்ந்து உறங்கி விட்டான் கந்தசாமி. கற்பனையில் தன் புதிய நாவலை உருவாக்கிக் கொண்டிருந்த ராஜவேலு உறங்கவில்லை. தனியேதான் சற்றுத் தூரம் சென்று வருவோமே என்ற அறிவீனமான ஆர்வத்தால் உந்தப்பட்டு எழுந்து நடந்தவனைத் திக்குத் திசை தெரியாத அந்தக் காடு அப்படியே விழுங்கி விட்டது!

தவறு முழுவதும் தன் மீதிருக்கக் கந்தசாமியைக் குறை கூற முடியுமா?

கேவலம் கூலிக்கு உழைப்பவனா கந்தசாமி? அந்த நாளிலிருந்தே அக்குடும்பத்தில் ஒருவனாகிக் குழந்தை ராஜவேலுவைத் தோள் மீது சுமந்து வளர்த்தவனாயிற்றே! இந்தத் திடீர்ப் பிரிவினால் அவன் உள்ளம் தான் எப்படிப் பதைத்துக் கொண்டிருக்கும்!

எங்கிருந்தோ கிளம்பிய ஒரு நரியின் ஊளை ராஜவேலுவை அச்சத்தால் மெய் சிலிர்க்க வைத்தது.

இதோ—கையெழுத்து மறையும் நேரத்தில் வனவிலங்குகளின் ஆதிக்கம் தொடங்கியாயிற்று. இந்த நரியின் ஊளையை அடுத்துப் புலிகளின் உறுமல் கேட்கலாம். கரடிகளின் பயங்கர முனகல்கள், பாம்புகளின் சீறல்கள்—ஏன், பேய்களின் 'ஹா ஹா'வென்ற அட்டகாசச் சிரிப்பைக்கூட ஒருகால்....

தன் கற்பனையில் தானே அதிர்ச்சியுற்றது ராஜவேலுவின் முதிராத இதயம். நீலகிரியின் கடுங்குளிரிலும் கூட அவன் உடல் வியர்த்துவிட்டது. இருள் என்னும் போர்வை முழுமையாகக் கவிந்து காட்டை மூடி அவனையும் உள்ளடக்கிக் கொள்ளுமுன் தங்குவதற்குப் பத்திரமான ஓரிடம் தேட வேண்டியது அவசியம், அவசரம்.

எங்கே இருந்தது அத்தகைய இடம்?

வானுற ஓங்கி வளர்ந்த மரங்கள், பிரம்மாண்டமான பாறைகள், மண்டிக் கிடக்கும் புதர்கள், அதல பாதாளத்தில் ஆளைக் கொண்டு சேர்க்கச் சித்தமாக வாயைப் பிளந்து கொண்டிருக்கும் பள்ளங்கள்—இவை தாம் கண்ணுக்கெட்டிய தூரம் வரை காட்சி தந்தன. நிமிடத்துக்கு நிமிடம் தளர்ந்து வரும் நம்பிக்கையுடன் தள்ளாடி நடந்தான்

ராஜவேலு. மறுநாள் காலை அவனது சடலமாவது தேடி வரும் கந்தசாமிக்கு மிஞ்சினால் அதுவே ஆறுதல் தரக்கூடிய விஷயம்!

'வாளினும் பேனாவே அதிக வன்மை யுடையது' என்று சொல்வது எளிது. ஆனால் இந்தக் கானகத்தில் எதிர்நோக்கி நிற்கும் பேராபத்துக்களினின்று அவனைக் காப்பாற்றுவது அவனது விலை உயர்ந்த பார்க்கர் பேனாவினால் இயலும் காரியமா?

மனம் தளர்ந்து, உடல் சோர்ந்து ராஜவேலு ஒரு மரத்தினடியில் அமரப் போகும் போதுதான் மிக அருகிலிருந்து 'டுமீல்' என்ற பேரொலி எழுந்தது. ஒரு துப்பாக்கி வெடிக்கும் ஓசை அது. மறுகணம் வெடி மருந்தின் நெடியும் காற்றில் கலந்து பரவி அவனது நாசியை எட்டியது. முதலில் அதிர்ச்சியுற்ற ராஜவேலு சமாளித்துக் கொண்டான்.

'யார் சுடுவது இங்கே?..... ஒருகால் கந்தசாமியாக இருக்குமோ?' என்று எண்ணியதுமே அவன் இதயம் மகிழ்ச்சியால் படபடத்தது. ''கந்தசாமி! நீயா அப்பா?'' என்று குரல் கொடுத்தான்.

''யார் அங்கே?'' என்று அவனுக்குப் புதிய கம்பீரமான குரலில் பதில் கேள்வி பிறந்தது. அதைப் பின்தொடர்ந்து காலடியோசை. புதர்களை விலக்கிக் கொண்டு வந்து அடுத்த நிமிடமே அவன் எதிரில் நின்றது ஓர் உருவம்.

ஆறடி உயரமுள்ள ஆஜானுபாகுவான தோற்றம், உயர் தரக் கம்பளி உடையைப் பார்த்த மாத்திரத்திலேயே 'கனவான்' என்பது தெரிந்தது. ராஜவேலுவின் அச்சமும் சற்று விலகியது.

செக்கச் சிவந்த மேனி, சற்றே நரை திரை கண்ட கேசம், நிதானமான பார்வை, ஆண்மையைக் கட்டியம் கூறும் கட்டிமுனை மீசை, கையில் துப்பாக்கி — ராஜவேலுவின் பரிதாப நிலையைப் புரிந்து கொண்டு அவனுக்குத் தைரியமூட்ட முயல்பவர்போல் மென்னகை புரிந்தார் அவர்.

''யார் தம்பி, நீ?'' என்று பரிவுடன் வினவினார் ஆங்கிலத்தில்.

''நான் ஓர் எழுத்தாளன் ஐயா!'' என ராஜவேலு ஆங்கிலத்திலேயே விடை பகர்ந்தான்.

''காட்டில் வழி தவறி விட்டதா உனக்கு?''

''ஆம், ஐயா! நானும் என் பணியாளுமாக இன்று காட்டுக்கு வந்தோம். துரதிர்ஷ்டவசமாக அவனைப் பிரிந்து வழியும் தெரியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். எங்கு செல்வது, இரவை எப்படிக் கழிப்பது என்று புரியாமல் திகைக்கும் வேளையில்தான் உங்கள் துப்பாக்கி வெடிக்கும் ஒலி கேட்டது.''

''நல்லது. நான் இங்கு வேட்டையாட வந்தேன். மிக அருகில்தான் இருக்கிறது என்னுடைய வாசஸ்தலம். அங்கு என்னுடன் நீ தங்கலாம். வா.....!''

தம் கோட்டுப் பையிலிருந்து பிரகாசமான டார்ச் விளக்கை எடுத்த அவர் அப்போதுதான் தாம் சுட்டுக் கொன்றிருந்த முயலின் உடலைப் புதருக்கு அப்பாலிருந்து எடுத்து வந்தார். விளக்கின் ஒளியில் அநாயாசமாக வழி கண்டு அவர் முன்னே நடக்க ஆறுதலுடன் பின் தொடர்ந்தான் ராஜவேலு.

'கோர மரணம் நம்மைத் தழுவக் காத்திருக்கிறது. இன்றோடு நம் கதை முடிந்தது' என்று முடிவு கட்டியிருந்தவனுக்கு ஆண்டவனாக உளங்கனிந்து அனுப்பிய உதவி அது!



கானகத்தின் நடுவே மனித சந்தடியிலிருந்து விலகிய ஒரு தனி இடத்தில் அமைந்திருந்த சிறிய பழைய பங்களா ஒன்றை அவர்கள் நெருங்கினர். அதன் தாழ்வாரத்தில் தொங்க விடப்பட்டிருந்த பெட்ரோமாக்ஸ் விளக்கு கலங்கரை விளக்கம் போல் ஒளி வீசிக்கொண்டிருந்தது.

அந்த ஒளியில்தான் முதன் முறையாக அவளது எழில் உருவைக் கண்டான் ராஜவேலு.

ரோஜா வண்ண மேனியைத் தழுவிய வெள்ளை நிறச் சேலை, முழு மதியை நிகர்த்த பொலிவுள்ள முகம், பவளச் செவ்விதழ்களினூடே பளிச்சிடும் முத்துப் பல் வரிசை, முழங்கால்களைத் தொடும் அடர்ந்த கருங் கூந்தல், ஆளை விழுங்கும் பெரிய கண்கள் – செயற்கையின் கலப்பற்ற எளிய அவ்வெழில் ராஜவேலுவைப் பிரமிக்க வைத்தது. எத்தனையோ நங்கையரைத் தன் கதைகளில் வர்ணித்து எழுதியிருந்த அவனது வளமான கற்பனைக்கே இதுவரை எட்டியிராத தெய்விகச் சோபையுடன் அவள் தோன்றினாள்.

''இவள்தான் என் ஒரே மகள் பத்மினி!'' என்று அறிவித்தவாறு பங்களாவின் வெளிப்புற 'கேட்' கதவுகளைத் தள்ளித் திறந்தார் கனவான்.

பத்மினி! அந்தப் பெயரிலுந் தான் எத்தகைய இனிமை சொட்டுகிறது?

''வாருங்கள், அப்பா! ஏது இன்று இவ்வளவு சீக்கிரம் திரும்பி விட்டீர்கள்?'' என்று கொஞ்சுதலாக வினவியதே அவள் குரல்; அதைக் குழல் என்பதா, யாழ் என்பதா ?

''எதிர்பாராத விதமாக நமக்கு ஓர் அதிதி கிடைத்திருக்கிறார், குழந்தாய்! அதனால் தான் விரைவாகத் திரும்பிவிட்டேன். ஏன் திகைக்கிறாய்?''

''...இவர் முகம் எனக்குச் சற்றுப் பரிச்சயம் ஆனது போல் தோன்றுகிறது, அப்பா. சற்றுப் பொறுங்கள். இவர் ஓர் எழுத்தாளரா? ராஜவேலு என்பதுதானே இவரது பெயர் ?''

வியப்புடன் 'ஆம்' என்று தலையசைத்தான் அவன்.

''தற்சமயம் 'நிலா' என்னும் ஆங்கில வாரப் பத்திரிகையில் 'மனிதனும் தெய்வமும்' என்ற தலைப்புள்ள தொடர் நாவலை எழுதி வருவது நீங்கள்தானே?''

ராஜவேலு மீண்டும் தலையை ஆட்டினான்.

''உங்களது படைப்புக்களை மிகவும் விரும்பிப் படிப்பவள் நான். மேற்படி சஞ்சிகையில் பிரசுரமாகியிருந்த உங்கள் புகைப்படத்தைக் கொண்டுதான்



சட்டென்று அடையாளம் தெரிந்து கொண்டேன்....'' என்றாள் பத்மினி மகிழ்ச்சியுடன். ராஜவேலு பெருமிதமுற்றான். அவனது எழுத்துத் திறன் கானகத்தையும் ஊடுருவியிருக்கிறதென்றால்!

''வெரி பேஷ், வெரி பேஷ்! மிஸ்டர் ராஜவேலு. என் புதல்வியின் மகிழ்ச்சிதான் எனக்கும் மகிழ்ச்சி. உங்களை அதிதியாகப் பெற்றது எங்கள் அதிர்ஷ்டம். உட்காருங்கள்!'' என்று உற்சாகத்துடன் உபசரிக்கலானார் கனவான்.

சற்று முன்பு உயிருக்கு அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்த ராஜவேலு இப்பொழுது பெருமை என்னும் இன்பவெளியில் மிதக்கலானான்.

ஃ ஃ ஃ

இமாலயக் கரடிகள், வங்காளப் புலிகள், ராஜபுதனத்துச் சிங்கங்கள் — ஒவ்வொன்றிலும் அரை டஜனுக்குக் குறைவில்லை — சுவரில் வரிசையாக மாட்டி வைக்கப்பட்டிருந்த அவற்றின் தலைகளை நிமிர்ந்து நோக்கவே ராஜவேலுவுக்கு அச்சமாக இருந்தது.

அத்தனையும் மேஜர் பீம்சிங்கின் வெற்றி விருதுகள்!

''....வீரத்துக்குப் பெயர் பெற்றது ராஜபுதனம். அதனை ஆண்ட ராணா பிரதாப் போன்ற ராஜபுத்திர மன்னர்களைப் பற்றி இந்திய சரித்திரத்தில் நீங்கள் படித்ததுண்டல்லவா?'' என்று வினவினார் மேஜர்.

''நிறையப் படித்திருக்கிறேன். இறுதி வரை மொகலாயச் சக்கரவர்த்திகளுக்கு அஞ்சி அடிபணியாது சவால் விடுத்து நின்ற வீர புருஷர்களாயிற்றே அவர்கள்!'' என்றான் ராஜவேலு.

''அந்த வீர புருஷர்களின் பரம்பரையில் தோன்றியவன் நான். என் உடலில் ஓடுவது அவர்களது இரத்தம்.''

அவர் குரலில் பெருமை தொனித்தது.

''....காலம் மிகவும் மாறிவிட்டது, மிஸ்டர் ராஜவேலு. இன்று ராஜபுதனத்து ராணாக்கள் இல்லை, அவர்களது ஜன்ம விரோதிகளான மொகலாயர்களும் இல்லை. அதனால் என்ன? பரம்பரை வீரம் என்பது அறவே அழிந்து மறைந்து விடுவதல்லவே. எரிமலை நெருப்பை உள்ளடக்கி விருப்பது போல் எங்கள் வம்சத்தினரிடையே இன்றும் அந்தப் பழைய அஞ்சா நெஞ்சமும் ஆண்மையும் குன்றாது நிற்கின்றன. தக்க தருணம் வரும்போது சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றன. போர் எங்களது குலத் தொழில். அதைப் புரியவைக்க வேறு வாய்ப்பின்மையால் இந்தியாவை ஆளவந்த ஆங்கில அரசாங்கத்து ராணுவத்தில் நான் சேர்ந்தேன். தொடர்ந்து முப்பதாண்டுகள் நற்பணியாற்றி மூன்று வருடங்களுக்கு முன்புதான் ஓய்வு பெற்றேன். இரண்டாவது மகாயுத்தத்தில் நான் புரிந்த சாகஸச் செயல்களைப் பாராட்டி அரசினர் எனக்கு வழங்கிய பதக்கங்களை இதோ பாருங்கள்..... போர்த்தொழில் செய்யாத காலத்தில் வேட்டையாடி வருகிறேன். இவை நான் கொன்ற கொடிய விலங்குகளின் தலைகள்....''

நெடிதுயர்ந்த அத் தோற்றம், ஆண்மைச் சுடர் வீசும் கண்கள், ஈட்டி முனைகள் போன்ற மீசை, முகத்தின் தேஜஸ்—ஆம்; மேஜர் பீம்சிங் வீரம் செறிந்த ராஜபுதன மன்னர்களின் வழித் தோன்றல் என்று அவை பறைசாற்றின. அவற்றிலும் அதிக ஓசை எழும் வகையில் பறை கொட்டியது அவர் நாவு.

வீரம் என்பது வியக்கத் தக்க ஒன்றுதான். ஆனால் இந்த அளவுகடந்த தற்பெருமையோ?

''தங்களுடன் பழக வாய்ப்புக் கிட்டியது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சி கொள்கிறேன், மேஜர்... எனக்கு ஓர் ஐயம். மனித உறவின்று விலகி நீங்கள் இப்படித் தனியே காட்டில் வாழக் காரணமென்ன?''

''தனிப்பட்ட காரணம் ஒன்றுமில்லை. நானும் தாயற்ற என் மகள் பத்மினியும் ஏகாந்தத்தை விரும்புகிறோம். அதில் இன்பம் காண்கிறோம். மேலும் வேட்டைப் பிரியனான எனக்கு இக் கானகச் சூழ்நிலை வசதியாக உள்ளது. முன்பு காட்டிலாக்கா அதிகாரிகளின் வாசஸ்தலமாக இருந்துவந்த இப் பங்களாவைக் குறைந்த விலைக்கு வாங்கிப் பழுது பார்த்து நாங்கள் குடியேறி இரண்டு வருட காலமாகிறது. ஒரு சமையற்காரனும் வேலையாள் ஒருவனும்தான் இங்கே எங்களுக்குத் துணை....''

அறையின் கதவுகள் மெல்லத் திறந்தன. ''உணவு தயாராகி விட்டது, அப்பா. சாப்பிட வருகிறீர்களா?'' என்ற அழைப்புடன் உள்ளே வந்தாள் பத்மினி.

''வருகிறோம், குழந்தாய். 'காட்டில் ஏன் ஒதுங்கி வாழ்கிறீர்கள்?' என்ற நியாயமான கேள்வியை எழுப்புகிறார் நமது எழுத்தாள நண்பர். இந்தத் தனி வாழ்வுதான் எனக்கும் உனக்கும் பிடித்திருக்கிறது' என்று நான் பதில் கூறினேன். அது உண்மைதானே?'' என்று மகளது ஒப்புதலை வேண்டினார் மேஜர்.

''......உண்மைதான்.....''

அந்தத் தயக்கம், அவளது இதழ்களில் கணப் பொழுதுக்குத் தோன்றி மறைந்த வறண்ட புன்னகை, இதயத்தின் ஆழத்தில் தோன்றி, விழிகளில் பிரதிபலித்த வேதனையின் குறி ஆகியவற்றை ராஜவேலு கவனிக்கத் தவறவில்லை. மேஜர் பீம்சிங் தம்மிடம் சொல்ல விரும்பாத ஓர் இரகசியம் இருக்கக் கூடுமென்று ஊகித்தது அவனது நுட்ப மதி.

''கூச்சப்படாமல், வயிறாரச் சாப்பிடுங்கள், மிஸ்டர் ராஜவேலு'' என்ற மேஜரின் ஊக்குதலுடன் பத்மினி பரிமாறிய இனிய உணவை அவன் உண்டான். மேஜர் கவனிக்காத ஒரு சிறு இடை நேரத்தில் அவர்களது கண்கள் சந்தித்தன.

அந்தப் பார்வை! அதில் ததும்புவது என்ன உணர்ச்சி? காதலின் பிறப்பு பற்றிப் பல கதைகளில் படித்தும், தானே எழுதியுமிருந்த ராஜவேலுவுக்குக் குழப்பம் தோன்

றியது. அன்றிரவு அந்தப் பங்களாவிலே தனக்கென ஒதுக்கப்பட்ட அறையில், கனத்த கம்பளிகளுக்கு அடியில் அவன் கிடந்தபோது அக் குழப்பம் அதிகரித்தது.

அழகுத் தெய்வமாகக் காட்சி தரும் பத்மினியின் காதலை மட்டும் அவன் பெற முடிந்தால்....!

பொழுது விடிந்தது. காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு தன் வேலையாளனின் துணையுடன் ராஜவேலுவைக் கூனூரில் அவன் தங்கியிருந்த ஹோட்டலுக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்திருந்தார் மேஜர் பீம்சிங். புறப்படும் சமயத்தில் "இன்னும் எத்தனை நாட்கள் நீலகிரியில் தங்குவதாகத் திட்டம்?" என்று கேட்டார்.

"நிச்சயமாகச் சொல்வதற்கில்லை ஐயா! ஓரிரு மாதங்களாகலாம். என் புதிய நாவலை இங்கேயே எழுதி முடித்துவிட எண்ணியிருக்கிறேன்" என்றான் அவன்.

"நல்லது. இயன்றபோதெல்லாம் எனது இல்லத்துக்கு வந்து செல்ல வேணும். காட்டுப் பாதை வழியே சென்றால் இங்கிருந்து ஒன்றரை மைல் தொலைவில்தான் இருக்கிறது கூனூர்."

"அவசியம் வருகிறேன், ஐயா. உங்களது அன்புக்கு என் மனமார்ந்த நன்றி" எனக் கரம் கூப்பித் தந்தைக்கும் மகளுக்கும் வணக்கம் செலுத்திவிட்டு நடந்தான் ராஜவேலு. சற்றுத் தூரம் சென்று அவன் திரும்பி நோக்கியபோது பங்களா வாயிலில் மேஜர் காணப்படவில்லை. ஆனால் சாளரக் கம்பிகளினூடே பத்மினியின் எழில் முகம் தெரிந்தது. அந்த வட்டக் கருவிழிகளிலே ஆர்வமிக்க, சோகத்தின் நிழல் படிந்த பார்வை. அதற்கு ஒரே அர்த்தம்தான் இருக்க முடியும்!

குழப்பம் நீங்கிக்; குதூகலிக்கும் உள்ளத்தினனாய், மேஜரின் வேலையாளைப் பின் தொடர்ந்து கூனூரரை நோக்கி நடக்கலானான் ராஜவேலு. அந்தக் காட்டுப் பாதையின் வளைவுகளையும், திருப்பங்களையும் அடையாளச் சின்னங்களையும் மனத்தில் பதித்துக் கொள்ள அவன் தவறவில்லை.

இரவெல்லாம் காட்டில் எஜமானனைத் தேடி அலைந்து விட்டுச் சொல்லொணாக் கவலையுடன் திரும்பியிருந்த கந்தசாமி ராஜவேலுவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கதறியே விட்டான். "அசடு போல அழாதே, கந்தசாமி. நடந்ததெல்லாம் நன்மைக்குத் தான். இனியும் நாம் இப்படிப் பிரிய வேண்டிய சந்தர்ப்பங்கள் பல ஏற்படவிருக்கின்றன. நான் விரும்பினாலன்றி நீ என்னை நிழல்போல் தொடர்ந்து வர வேண்டியதில்லை" என்ற ராஜவேலுவின் வார்த்தைகள் கந்தசாமிக்கும் பொருள் விளங்காப் புதிராக அமைந்தன.

சிதாரின் ஒலியுடன் பத்மினியின் குரலும் கலந்து ராஜவேலுவின் செவியை நிறைத்தது. தந்திகளின் மேல் அவளது தளிர் விரல்கள் சஞ்சரிக்கும் அநாயாசமான அற்புதமான வேகத்தை அவன் கவனித்தான். அழகு, அறிவு, கலைத் திறன் அனைத்தும் ஒருங்கு கூடிய இவள் கேவலம் மானிடப் பெண்தானா அல்லது ஸ்தூல உருவேற்றுள்ளவும் ஒரு வனதேவதையா என்ற ஐயம், ஏற்கெனவே அவன் இதயத்தில் பன்முறை தோன்றிய ஐயம் -- மீண்டும் எழுந்தது.

அந்தி மயங்கும் வேளை. மேஜரின் இல்லத்தினின்று கூப்பிடு தூரத்தில் அவரைப் போலவே கம்பீரமாகத் தனித்து நின்ற ஒரு பாறை மீது பத்மினியும் ராஜவேலுவும் அமர்ந்திருந்தனர். மாலை நேரத்தில் சில நிமிடங்கள் கழிக்கலாமென்று கந்தசாமியை எப்படியோ ஏய்த்துவிட்டுத் தனியே கிளம்பி விடுவான் ராஜவேலு. இப்போதெல்லாம் தான் தங்கியிருந்த ஹோட்டலுடன் மேஜரின் பங்களாவை இணைக்கும் காட்டுப் பாதை அவனுக்கு அங்குலம் அங்குலமாகத் தெரிந்த வழி!

மால்கோஷ் ராகத்தின் கம்பீரம் அந்த மலைச்சாரலில் ஒலித்து ஓய்ந்ததும் ஹிந்துஸ்தான் தோடியின் உருக்கமான ஸ்வரங்கள் மெல்ல எழுந்து காற்றில் மிதக்கலாயின.

உருக்கமென்றால் அத்தனை உருக்கம். அதன் சோகத்திலேயே ஆழ்ந்து விட்ட பத்மினியின் கண்டத்வனி மேற்கிளம்பாது நின்றுவிட விரல்கள் மட்டும் சிதாரை மீட்டின.

அவளது விழிகளினின்றும் பொங்கும் கண்ணீரை ராஜவேலு கண்டான்.

இது கேவலம் இசையின் லயிப்பால் ஏற்பட்ட உணர்ச்சிப் பெருக்கா? இல்லை; இருக்க முடியாது. ஆறாத ஒரு பழைய புண்ணைக் கிளறினால் கொட்டும் குருதியைப் போல் இசை அவள் நெஞ்சில் ஆழப் புதைந்துள்ள துயரத்தைக் கிளறுவதன் பிரதிக்கிரியை இது! ராஜவேலுவால் பொறுக்க இயலவில்லை.

''பத்மினி!'' என்று அவன் அலறிய ஒலி அவளைச் சுய உணர்வுக்குக் கொண்டு வந்தது. பத்மினி கண் திறந்தாள். தன்னையும் மீறி நடந்து விட்டனவற்றைப் புரிந்து கொண்டு நாணமுற்றவள் போல் அவள் சிரம் தாழ்ந்தது.

''ஏன் அழுதாய், பத்மினி?'' என்ற ராஜவேலுவின் கேள்வி சில கண நேரமாக அங்கு நிலவிய நிசப்தத்தைக் கலைத்தது. அவள் மௌனம் சாதித்தாள்.

''முதலிலிருந்தே நான் கவனித்து வருகிறேன். உன் அந்தரங்கத்தில் ஏதோ ஒரு துயரத்தின் பளு அழுத்திக் கொண்டிருக்கிறது. என் ஊகம் சரியா?''

''சரியானதே'' என்னும் பாவனையாக, அவள் தலை மெல்ல அசைந்தது.

''அந்த வேதனையின் தன்மை என்னவென்று எனக்கு உணர்த்த மாட்டாயா?''

பத்மினி தொடர்ந்து மௌனம் சாதித்தாள்.

''நீ உன் இதயத்தை எனக்குத் திறந்து காட்டினாலும் காட்டாவிட்டாலும் நான் என் உள்ள நிலையை உனக்கு உணர்த்துகிறேன். உன் துயரம் என் உள்ளத்தை அழுத்துகிறது. உன் கண்களினின்று வழியும் கண்ணீர் என் நெஞ்சிலிருந்து உதிரத்தையே கொட்ட வைக்கிறது. ஏன் தெரியுமா, பத்மினி? உன்னை நான்..... காதலிக்கிறேன். என் உயிரினும் மேலாக நேசிக்கிறேன்.''

திடீரென்று எப்படித்தான் அந்தத் துணிவு பிறந்ததோ ராஜவேலுவுக்கு! அவளுடன் பழகிய ஒரு மாத காலமாகக் கண்களாலன்றி, நாவினால் அவன் உணர்த்தத் தயங்கிய உண்மையை ஐயத்துக்கு இடமின்றி இன்று வெளியிட்டு விட்டான்.

''....என் காதலை நீ ஏற்பாயா, பத்மினி?''

''என்னை மன்னித்துக்கொள்ளுங்கள் ராஜ். ஏற்கும் நிலையில் நான் இல்லை — அதாவது ஏற்கும் தகுதியை நான் பெற்றிருக்கவில்லை'' என்ற வார்த்தைகள் கம்மிய குரலில் அவளிடமிருந்து வந்தன.

''நீ என்ன சொன்னாய்? நானல்லவா உன்னை நினைத்துப் பார்க்கவும் தகுதியற்றவன்!....''

அவள் இடைமறித்தாள். ''அப்படியல்ல ராஜ். சற்று முன் என் துயரத்தின் காரணத்தைக் கேட்டீர்களே. அந்தக் காரணம் இதுவேதான். இருள் சூழ்ந்து விட்ட என் வாழ்வில் இனி ஒளி வீச இடமில்லை. நான்.... ஓர் விதவை.''

சற்றே திடுக்கிட்ட ராஜவேலு உடனே சமாளித்துக் கொண்டு கேட்டான்.

''அது எப்படி நேர்ந்தது?''

''நான் உலகமறியாச் சிறுமியாக இருக்கும்போதே நடந்து விட்ட விபரீதம் அது. எனக்கு ஐந்து வயதாகவும் என் மாமன் மகனுக்கு எட்டு வயதாகவும் இருக்கும் போது எங்கள் திருமணம் குல வழக்கப்படி நிறைவேறியது. பதினாறு வயதில் கடற்படையில் சேர்ந்து அயல்நாடுகளில் பணியாற்றச் சென்ற என் கணவர் திரும்பவேயில்லை. கப்பல் விபத்தொன்றில் சிக்கிய அவர் உடலையும் கடல் விழுங்கி விட்டது. வாழ்க்கையை நுகர்ந்து ஓய்வு பெற்ற என் தந்தையும் அதன் சுவையை உணராமலே புறக்கணிக்கப்பட்டு விட்ட நானும் ஒருவருக்கொருவர் துணையாக இந்தக் காட்டில் தனி வாழ்வு நடத்தி வருகிறோம்.''

''நீ புறக்கணிக்கப்பட்டவளல்ல, பத்மினி. உன் சோகக் கதை கேட்டு என் மனம் மாறவில்லை. முன்னிலும் அதிகமாகவே நான் உன்னை நேசிக்கத் தொடங்கியிருக்கிறேன். இப்போது சொல். என்னுடைய காதலை நீ ஏற்பாயா?''

அவளது பூங்கரங்களிரண்டையும் ஆர்வத்துடன் பற்றினான் ராஜவேலு. அவள் திமிறிக்கொள்ள முயலவில்லை.

ஆயினும் அவ்விணைந்த கரங்களின் மீது அவளது இரு கண்ணீர்த் திவலைகளின் ஸ்பரிசத்தை ராஜவேலு உணர்ந்தான். அவன் உள்ளத்தில் அசைக்க முடியாத ஓர் உறுதி பிறந்தது.

* * *

மேஜர் பிம்சிங்கின் கனல் கக்கும் பார்வையை அஞ்சாது சந்தித்தான்—ராஜவேலு. இது அவன் எதிர்பாராததல்லவே.

''ராஜவேலு! என்னை நேரில் அணுகி இத்தனை மென்மையான ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச உனக்கு எத்தனை துணிச்சல் இருக்கவேண்டும்!'' என்று அவர் அதிர்ந்தார்.

''மன்னியுங்கள், மேஜர். என மன நிலையை உள்ளவாறு உங்களுக்கு உணர்த்தியாக வேண்டிய நிர்ப்பந்த நிலையில் இத் துணிவை நான் மேற்கொள்ளத்தான் வேண்டியிருந்தது'' என்றான் ராஜவேலு நிதானமாக.

''அத்தகைய துணிவு அசட்டுத்தனமானது. தற்கொலைக்கு ஒப்பானது. இப்போது என் மன நிலையை நான் உனக்குத் தெரியப்படுத்தலாமல்லவா?... நீ ஓர் அயோக்கியன். ஓரிரவுக்கு ஒதுங்க இடம் வேண்டி வந்த நீ இப்படி எங்கள் வாழ்வின் அமைதியைக் குலைப்பாய் என நான் எண்ணவில்லை...''

''மேஜர் அவர்களே! நான் திட்டமிட்டுச் சதி செய்யவில்லை. ஒதுங்க வந்த இடத்தில் உங்கள் புதல்வியைச் சந்தித்ததும் என் இதயம் அவளுக்கு அடிமையாகி விட்டது. எங்கள் சந்திப்பு ஆண்டவனாக ஏற்படுத்திய ஒரு நிகழ்ச்சி....''

''எழுத்தாளனாகிய நீ கதையளப்பதில் ஆச்சரியமில்லை, ராஜவேலு. ஆனால் ஒன்று. நீ அறிவுடன் செயலாற்றாவிடில் அதன் விளைவுகளிலிருந்து அந்த ஆண்டவனாலேயே உன்னைக் காப்பாற்ற முடியாது. வீரம் செறிந்த எங்கள் ராஜ பரம்பரை எங்கே,

'வீரம்' என்ற சொல்லின் பொருளையே உணராத தமிழ் நாட்டவனுகிய நீ எங்கே? முயல் சிங்கத்தின் உறவை நாடும் விந்தையைப் போலத்தான் இதுவும் இருக்கிறது. எனக்கும் என் மகளுக்கும் எது நன்மை என்பதை உன்னிலும் நன்ருக நான் அறிவேன். என் சினத்தை வளர்க்காமல் உடனே இங்கிருந்து போய்விடு.''

ராஜவேலு தயங்கி நிற்பதைக் கண்டு குமுறி வெடித்தது மேஜரின் சினம். மறு கணம் அவரது இரும்புக் கரங்கள் அவன் கழுத்தைப் பற்றின. நெட்டித் தள்ளப்பட்ட அவன் தலை சுவரில் மோதுவதற்கும் அறையினுள் பத்மினி பிரவேசிப்பதற்கும் சரியாக இருந்தது.

''உன்னை யார் இங்கே அழைத்தது பத்மினி?'' என்று கூச்சலிட்டார் மேஜர்.

''அழைத்தால் மட்டுமே நான் வந்து நிற்க வேண்டிய நிலைமை கடந்துவிட்டது, அப்பா. இவரைத் தொட்டுத் தாக்க உங்களுக்கு என்ன உரிமை?''

பத்மினியின் அகன்ற விழிகளிலும்தான் நெருப்புச் சுடர் தெறித்தது. அதை என்றும் கண்டிராத மேஜர் திகைத்துத் திணறிப் போனுர்.

''முன் பின் தெரியாத இவனுக்கு நீ பரிந்து பேசக் காரணம்?''

''இவர் எனக்கு முன் பின் தெரியாதவர் அல்ல.''

''ஓஹோ! உன் காதலனு இவன்?''

''ஆம். அதை நானே ஊர்ஜிதம் செய்கிறேன். இன்னுமொன்று. என்னை மனமார நேசிக்கும் இவரை மணந்து கொண்டு இல்லறம் நடத்துவதும் என் உத்தேசம்.''

ஆணித்தரமான அவ் வார்த்தைகள், மேஜரை மேலும் குழப்பத்துக்குள்ளாக்கின. அன்பும் பணிவுமே உருவான அவர் புதல்வி பத்மினிதானு பேசுகிருள்?

''வெரி பேஷ்! ராஜபுத்திர குல மங்கையைப் போலத்தான் நீ பேசுகிருய். இத் திருமணத்துக்கு நான் அனுமதி தராவிட்டால்?''

''அந்த அனுமதி எங்கள் நல்வாழ்வுக்கு இன்றியமையாத ஒன்றல்ல.''

''நல்லது. உன் உறவும் என் வாழ்வுக்கு இன்றியமையாததல்ல. இனி என் முகத்தில் விழிக்காதே.''

இக்பிரமை கொண்டவர் போல் தலையை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு சோபாவில் விழ்ந்தார் பீம்சிங். சில நிமிடங்களுக்குப் பின் அவர் நிமிர்ந்து நோக்கிய போது ராஜவேலுவோ, பத்மினியோ அங்கில்லை. நடுக்கத்துடன் ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்த வேலையாளை நோக்கி உறுமினர்.

''எங்கே அவர்கள்?''

''இருவரும் போய்விட்டார்கள், பாபு!'' என்று பதில் வந்தது.

ஆம்; அவர் மகள் பத்மினி போய்விட்டாள்! அவள் மட்டும்தானு சென்ருள்? உயிரினும் மேலானதாக அவர் கருதிக் காக்கும் குலப் பெருமையை, சுய கௌரவத்தைத் தன்னுடன் எடுத்துச் சென்று விட்டாள்!

மேஜரின் உதிரம் கொதித்தெழுந்தது. உள்ளத்தில் கொலை வெறி தோன்றியது. பாய்ந்து சென்று தமது வேட்டைத் துப்பாக்கியைக் கையில் எடுத்தார். தலைவிரி கோலமாக வெளியே ஓடினர். மங்கலான நிலவொளியில் சற்றுத் தூரத்துக்கப்பால்'

---

## வ. ரா.வைத் திகைக்கவைத்த வேலையாள்!

வ. ரா. அவர்கள் காரைக்குடி ''ஊழியன்'' பத்திரிகையில் துணை ஆசிரியராகப் பணியாற்றிய சமயம்.

அன்று நடுப்பகல் நேரம். விறுவிறுப்பாக எழுதிக் கொண்டிருந்த வ. ரா. அவர்கள் வேலையாளைக் கூப்பிட்டு, ''மணி என்ன?'' என்று கேட்டார். அவன், ''அரை மணி ஆகிறது ஐயா'' என்ருன். வ. ரா. வுக்கு வியப்பு ஏற்படவே, ''என்னப்பா சொல்கிருய்? அரை மணி என்று நான் கேள்விப் பட்டதில்லையே'' என்று விழித்தார்.

பிறகு அந்த வேலையாள் விளக்கினுன்: ''ஐயா, 12 மணிக்குப் பிறகு 13 மணி என்று சொல்லாமல் நாம் ஒரு மணி என்றே சொல்கிறோம். 12 மணியோடு ஒரு கால அளவு முடிந்து மறு கால அளவு தொடங்குவதால் இங்கு செட்டி நாட்டுப் பழக்கத்தில் 12—30 மணியை 'அரை மணி' என்றே சொல்லுவோம்!''

வ. ரா. அவர்கள் திகைப்பும் வியப்பும் கலந்தவராய்க் காட்சியளித்தார்.

தகவல்:
தங்க - கலைக்கோவன்

ஆதாரம் :
'செட்டிநாடும் தமிழும்'

கைகோத்து நடந்து கொண்டிருந்த இரு உருவங்கள் அவரது கூரிய வேட்டைப் பார்வையில் சிக்க வெகுநேரமாக வில்லை.

அதே சமயத்தில் காடு அதிரும்படியாக எழுந்தது ஒரு சிறுத்தைப் புலியின் பயங்கர உறுமல் சத்தம்.

வலப்புறமிருந்த பெரும் பாறையின் மறைவிலிருந்து வெளிப்பட்டு அந்த உருவங்களை நோக்கிப் பாய்ந்து செல்லும் சிறுத்தையின் உருவத்தை மேஜர் பார்த்தார். ஆனால் தம் துப்பாக்கியைத் தோளுக்கு உயர்த்தவில்லை. ஏன் உயர்த்த வேண்டும்? அவரது வேலையைச் சுலபமாக்கவன்றோ வந்துகொண்டிருக்கிறது அந்தக் கொடிய மிருகம்!

ஃ ஃ ஃ

சீவருடன் மோதித் தலையில் காயம்பட்ட இடத்திலிருந்து உதிரம் ஒழுக, பத்மினியின் கரத்தைப் பற்றியவாறு தள்ளாடி நடந்து கொண்டிருந்தான் ராஜவேலு. அவனது உடலில் தளர்ச்சி இருந்திருக்கலாம். ஆனால் உள்ளத்திலோ!

இனி பத்மினி அவனுடையவள்; முழுவதும் அவனுக்கே உரியவள். அவளது அன்பில் பங்குபெற அவள் தந்தையாலேயே முடியாது.

பசுவாக இருந்த அவனைப் புலியாகச் சீறி எழச் செய்தது எது? அதுவும் ரஜபுத்திர வம்சத்து மாதரின் உதிரத்தில் ஊறிய துணிவுதான். மேஜர் பீம்சிங் அவனைத் தாக்க முற்பட்டதன் மூலம் பசுவைப் புலியாக்கி விட்டார்.

''ராஜ்! காயம் வலிக்கிறதா?'' என்று அன்பொழுக அவள் கேட்கிறாள்.

''அது எப்படி வலிக்கும், நீ என் அருகில் இருக்கும்போது?'' என்று பதிலுக்குக் கேள்வி போட்டவன் அவளை மார்புடன் சேர்த்து அணைத்துக் கொள்கிறான். அந்த இன்பத்தில் இருவரும் தங்களை மறந்து நிற்கும் போதுதான் ஊடுருவி அவர்களை உலக நினைவு பெறச் செய்கிறது ஓர் ஓசை.

பசியுள்ள, மனித ரத்தத்தின் மோப்பம் கண்ட ஓர் சிறுத்தைப் புலியின் பயங்கர உறுமல் அது! தங்களை நோக்கிப் பாய்ந்து வரும் மிருகத்தை அவர்கள் கண்டனர். ''ஐயோ!'' என்றலறினாள் பத்மினி.

ராஜவேலு அலறவில்லை, பதறவில்லை. ''பத்மினி! நீ ஓடிவிடு'' என்று கட்டளையிட்டான்.

''நீங்கள்?''

''இதனுடன் போராடி மடிவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை, கண்ணே. நீ உயிர் பிழைத்தால் எனக்குப் போதும்.''

''நான் போக மாட்டேன். உங்களை விட என் உயிர் எனக்குப் பெரிதல்ல. இதே சிறுத்தைக்கு இரையாகி நானும் மடிவேன்.''

எதிரே வந்து நின்ற சிறுத்தை தரையில் பதுங்கியது; பாயச் சித்தமாகியது. தன் தோள்களைப் பற்றிய காதலியின் பிடியை உதறிவிட்டு முன்னே ''கான் ராஜவேலு.

கணமும் தாமதியாமல் எங்கிருந்தோ 'டுமீல்' என அதிர்ந்தது ஒரு துப்பாக்கி. பதுங்கிய சிறுத்தை பாயுமுன் துள்ளி விழுந்து பிணமாயிற்று.

ராஜவேலு திகைத்தான், பத்மினி திகைத்தாள், எட்டி நின்ற மேஜர் பீம்சிங்கும்தான் திகைத்தார். சுட்டது யார்?

''மேஜர் பீம்சிங் அவர்களே!'' என்று சற்று எகத்தாளமாக அழைத்தது ஒரு குரல். திடுக்கிட்டுத் திரும்பிய மேஜர் இன்னும் புகைந்து கொண்டிருக்கும் துப்பாக்கியுடன் நின்ற ஓர் கரிய உருவத்தைக் கண்டார்.

''....நீங்கள் நினைத்தது நடக்கவில்லை.. அதற்குக் குறுக்கே நின்றவன் நானேதான். என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்.''

மேஜர் விழித்தார். அந்த மனிதன் தொடர்ந்து பேசினான். ''நீங்கள் செய்யத் திட்டமிட்டது கொலை. அதை நாருக்காக அந்தச் சிறுத்தைப் புலியே செய்துவிடுமென்று நம்பி ஏமாந்தீர்கள், அல்லவா?....இந்தத் துப்பாக்கியில் இன்னும் ஐந்து குண்டுகள் இருக்கின்றன. கொலை வெறி கொண்ட உமது மார்பில் இவற்றில் ஒன்றை நான் ஏன் செலுத்தக் கூடாது?''

தமது மார்புக்கெதிரே நீட்டப்பட்ட துப்பாக்கியை மேஜர் கண்டார். அச்சத்தால் அவர் விழிகள் பிதுங்கின. கையில் பிடித்திருந்த அவரது சொந்தத் துப்பாக்கி பயனற்றதொரு பொருளாகத் தரையில் உருண்டது.

''நீங்கள் மரணத்துக்கு அஞ்சுகிறீர்கள் இல்லையா? நிராயுதபாணியாக இருந்தும் கூட வ்வாலிபன் அச்சமின்றிச் சிறுத்தைப் புலியுடன் போராட முற்பட்டதைக் கண்டிருந்த உங்களுக்கு மட்டும் ஏன் துணிவில்லை? வீரம் என்ற சொல்லின் பொருளையே உணராத தமிழ் நாட்டவன் இந்த இளைஞன். நீங்களோ வீரம் செறிந்த ரஜபுத்திர அரச பரம்பரையில் உதித்தவர்.... ஹஹஹா!''

நா வறண்டு, உடல் வியர்த்து, முகம் வெளுத்துச் சிலையாக நின்றார் மேஜர் பீம்சிங். ''கந்தசாமி! நீயா?'' என்று வியப்புடன் கேட்டவாறு நெருங்கிய ராஜவேலுவைப் பின்தொடர்ந்து அவர் மகள் வந்தாள்.

''ஆச்சரியப்படாதீர்கள் எஜமான். என்னை ஏமாற்றி விட்டதாக நீங்கள் நினைத்திருக்கலாம். ஆனால் உங்களது விவகாரம் முழுதும் எனக்குத் தெரியும். எதையும் எதிர்பார்த்து நான் சித்தமாகத்தான் இருந்து வந்திருக்கிறேன். இல்லாவிட்டால் சற்று முன்பு இந்த மேஜரின் பங்களாவில் நடந்தவற்றை மறைந்திருந்து கவனித்து உங்களைப் பின் தொடர்ந்து வந்திருக்க முடியுமா?'' என்றான் கந்தசாமி.

வீரம் எங்கே விளைகிறது? ராஜபுதனத்தில் மட்டுந்தானா?

அதே வீரம், தர்மம், நியாயம் இவற்றின் பக்க பலம் இல்லாதபோது அடியோடு சரிந்து கோழைத்தனமாகிறதே, அது எப்படி?

அந்தக் கேள்விக்கு விடை காண முயன்ற மேஜர் பீம்சிங்கின் குனிந்த தலை நிமிரவேயில்லை.



# சிவனருட் செல்வர்

## திருமுருக கிருபானந்த வாரியார்

திருஞான சம்பந்தர் எழுந்தார். அப்பர் பெருமானுடன் திருக்கோயில் சென்று வேதவனப் பெருமானைப் பணிந்தார். பின் பெரிய திருக்கோபுரத்துள் இருந்து, ''அப்பரே! பாண்டி நாடு சைவ நெறியினின்றும் நீங்கிச் சமண இருட்டறையில் இடர்ப்படுகின்றதாம். தங்கள் இடரை மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் இவர்கள் மூலம் கூறியனுப்பியிருக்கிறார்கள். ஆதலால் பாண்டி நாட்டுக்குச் செல்லுவேன்'' என்று கூறியருளினார்.

அதனைக் கேட்ட திருநாவுக்கரசர், ''பிள்ளாய்! சமணர்கள் வஞ்சனை மிக்கவர்கள். ஆதலால், தாங்கள் பாண்டி நாடு போவது நன்றன்று. கோளும் நாளும் தீயனவாக நிற்கின்றன. ஆதலின் நீர் அங்கு போக அடியேன் உடன்பட மாட்டேன்'' என்று அருளிச் செய்தார்.

''அப்பரே! அரனார் அடிமலர் போற்றும் அடியவர்க்குப் பழுது நேராது. கோளும் நாளும் நலமே புரியும்'' என்று கூறிய ஞானசம்பந்தர் கோளறு பதிகம் பாடியருளினார்.

''வேயுறுதோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறுதிங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமேபுகுந்த அதனால்
ஞாயிறுதிங்கள் செவ்வாய்புதன் வியாழன்வெள்ளி
சனிபாம்பிரண்டு முடனே
ஆசறுநல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே''

திருஞான சம்பந்தர் பாடியருளிய இப்பதிகத்தைக் கேட்டவுடன் அப்பர் அடிகள் உடன்பட்டுத் தாமும் அவருடன் புறப்பட்டுப் போகத் துணிந்தார். சம்பந்தர் அவரை வணங்கி, ''தேவரீர், இங்கேயே எழுந்தருளியிருங்கள்'' என்று வேண்டிக் கொண்டார். அவ்வேண்டுகோளுக்கு அப்பர் பெருமான் இசைந்தார்.

வைதிக சைவத்தை விளங்கச் செய்யும் பொருட்டு வேதவனப் பெருமானை மீண்டும் வணங்கி அருள் பெற்றுச் சம்பந்தப் பிள்ளையார் ஐந்தெழுத்தோதி முத்துச் சிவிகையின்மீது ஏறியருளினார்.

திருஞானசம்பந்தர் வருகிறபோது பாண்டி நாட்டில் எண்பெரும் குன்றுகளில் வாழும் சமணர்களுக்குப் பல துன்னிமித்தங்கள் உண்டாயின. தீக்கனாக் கண்டார்கள். அவர்கள்



வாழும் பாழிகளின் மீதும், பள்ளிகளின் மீதும், அசோக மரங்களின் மீதும் கூகைகள் முதலிய தீய பறவைகள் பயங்கரமாக ஒலித்து ஒன்றோடொன்று எதிர்த்துப் போர் செய்தன. பீலியும், தடுக்கும், பாயும் அவர்கள் கரங்களினின்றும் வழுவி விழுந்தன. கால்கள் தடுமாறின; இடக் கண்கள் துடித்தன.

‘இந்த அபசகுனங்களால் என்ன நேருமோ?'' என்று அமணர்கள் அல்லலுற்றார்கள். தாங்கள் வாயளவில் கூறிக் கொண்டிருந்த பொறை முதலிய குணங்களை விடுத்துத் தமக்குள் தாமே கலகம் புரிந்து கொண்டார்கள். இவ்வாறு கிராமங்கள்தோறும் வாழும் சமணர்கள் எல்லோரும் பலவாறு தீய கனாக் கண்டு, ஒருவரிடம் ஒருவர் கூறி, மயங்கிய மதியுடன் எல்லோரும் புரண்டு திரண்டு மதுரைமாநகரம் வந்து சேர்ந்தார்கள்.

மதுரையில் வாழ்ந்தவர்களும் வெளியிலிருந்து வந்தவர்களும் கூடி, கூன் பாண்டியனைக் கண்டு, தமக்கு ஏற்பட்ட அபசகுனங்களைக் கூறினார்கள். ''அசோக மரம் வேரோடு அசைந்து அருக தேவர் மீது வீழ்ந்ததாகக் கனவு கண்டோம்; அருக தேவர், முக்குடையும் தாழுமாக எழுந்து கையைத் தொங்க விட்டுக் கொண்டு ஓடினார். ஊரார் அவர் பின் ஓடுவது போல் கனவு கண்டோம். குருபத்தினி ஓடவும், குருமார்கள் கழுதை மேல் ஊர்ந்து செல்லவும், பலர் ஊளையிடவும் கனவு கண்டோம். பலர் சுடுகாட்டில் ஆடும் கடவுளின் தொண்டர்கள் யாவரும் மதுரை வந்து சேருவதாகக் கனவு கண்டோம். மன்னன் வெம்மையான நெருப்பில் முழுகவும், பின் அது தணிந்து உய்யவும் கண்டோம். இளமையான விடைக் கன்று ஒன்று வந்து நமது கழகங்களை அழிக்கவும், அதைத் தடுக்க அஞ்சிய நாம் பட்ட மரங்களில் ஏறிப் புகலிடமின்றிப் புலம்பவும் கண்டோம். நமது குருமார்களுக்குப் ‘பெருந் தீங்கு விளைவது உறுதியே'' என்று பலவாறு சொல்லி வருந்தினார்கள். உணவும் கொள்ளாது உள்ளம் உலைந்தார்கள்.

சைவ நன் மரபில் வந்த பாண்டிமாதேவியாருக்கும், அமைச்சர் பெருமானுக்கும் நன்னிமித்தங்கள் தோன்



றின. அவர்கள் அளவில்லாத மகிழ்ச்சியுற்றபோது, திருஞானசம்பந்தரின் வருகையைக் கேள்வியுற்றார்கள். ''ஞானசம்பந்தர் வந்தார்'' என்ற செய்தியைக் கூறியவர்களுக்கு வேண்டுவன அனைத்தும் வழங்கினார்கள்.

குலச்சிறையார் வணங்கி நின்றார். அவரை நோக்கிய மங்கையர்க்கரசியார், ''ஞான போனகர் இங்கு எழுந்தருளியதனால் நாம் உய்வு பெற்றோம்; சென்று எதிர்கொள்ளும்'' என்று கூறினார். ஆலவாய் அண்ணலை வணங்க வேண்டும் என்று கணவரிடம் விடை பெற்ற அம்மையார் திருக்கோயிலுள் சென்று, சொக்கலிங்கப் பெருமானை வணங்கினார். ஞானசம்பந்தரை வரவேற்கும் பொருட்டு எதிர்பார்த்து நின்றார்.

திருஞானசம்பந்தர் ஒளி மிகுந்த முத்துச் சிவிகை மேல் வரும்பொழுது முழு மதிபோல முத்துக் குடை நிழற்றினார்கள். திருநீற்றின் ஒளி சிறந்த தொண்டர்கள் அவரைச் சூழ்ந்து துதித்தார்கள். துந்துபி முதலிய வாத்தியங்கள் கடல் போல் ஆர்த்தன. மறையவர்கள் வேதங்களை ஓதினார்கள். செந்தமிழ்க் காற்று முன்னே வந்து எதிர் கொண்டது. மண்ணும் விண்ணும் பண்ணுள் புரிந்த புண்ணியத்தின் படையெழுச்சி போல் அக்காட்சியிருந்தது. இருளை மாய்க்க ஞான மணி விளக்கு எழுந்தருளியது போல் இருந்தது அக்காட்சி.

அடியவர் முழக்கும் அரன்நாமம் குலச்சிறையார் செவியில் அமுதம்போல் தங்கியது. அப்பொழுதே மண்மிசை வணங்கினார்.

அஞ்சலி குவித்த கரங்களும் தலைமேல்
அணைந்திடக் கடிது சென்றணைவார்
நஞ்சணி கண்டர் தந்திரு மகனார்
உடன்வரு நற்றவக் கடலை
நெஞ்சினில் நிறைந்த ஆர்வமுன் செல்லக்
கண்டுநீள் நிலத்திடைத் தாழ்ந்து
பஞ்சவர் பெருமான் மந்திரித் தலைவர்
பாங்குற அணைந்துமுன் பணிந்தார்

கருணை பூத்த சம்பந்தர் தமது தாமரைக் கரங்களால் குலச்சிறையாரை எடுத்தார். வணங்கிய உடம்பும் மறைத்த வாயும் நிறைந்த அன்பும் உடையவராய் நின்றார் குலச்சிறையார். அவரை நோக்கிய சம்பந்தர், ''அன்பரே! சோழர் பெருமான் குலமக

ளார்க்கும் உமக்கும் சிவபெருமான் திருவருள் பெருகும் நன்மை சிறப்பாக இருக்கின்றதோ?'' என்று கேட்டருளினர்.

குலச்சிறையார் கூறுவார்:

''சென்ற காலத்தின் குற்றமில்லாத தன்மையும், இனி வரும் காலத்தின் சிறப்பும் காரணமாக இன்று தேவரீர் எழுந்தருளப் பெற்றதனுல் என்றும் நாங்கள் திருவருளுக்கு உரியவரானேம். நன்றியில் வழியில் ஆழ்ந்த நாடும், நல்ல தமிழ் மன்னனும் உய்வு பெற்றுத் திருநீற்றின் ஒளியினில் விளங்கும் மேன்மையும் படைத்தனம்; தேவரீருடைய நல்வரவைக் கேட்ட மங்கையர்க்கரசியார் பெரிதும் மகிழ்ந்து பெறுதற்கரிய பெரும் பேறு பெற்றதாக எண்ணி அடியேனை வரவேற்கும் பொருட்டு அனுப்பினுர்கள்.''

இவ்வாறு கூறிய குலச்சிறையார் மீண்டும் பார்மிசை விழ்ந்து பணிந்தார்.

திருஞானசம்பந்தர் திரு ஆலவாயாகிய மதுரையம்பதி அடைந்ததில் எல்லையில்லா ஆனந்தம் அடைந்தார்.

மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவ
பொங்கழலுருவன் பூதநாயகனல் வேதமும்
பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னெடும் அமர்ந்த
ஆலவாயாவதும் இதுவே''

என்று பாடினர்.

திருஞானசம்பந்தர் திருக் கோபுரத்தைக் கண்டு தொழுது, குலச்சிறையாருடன் திருக்கோயிலுக்குள் சென்றார்.

அங்கம் எட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கிப்
பொங்குகாதலின் மெய்ம்மயிர்ப் புளகமும்பொழியுஞ்
செங்கணீர்தரும் அருவியுந் நிகழ்தரு மேனி
எங்குமாகிநின் றேத்தினர் புகலியர் இறைவர்

கண்கள் நீர் பொழிய, உரோமம் பொடிப்ப, காதல் வெள்ளம் கரை புரள நின்று போற்றி செய்தார்.

''அதோ கருங்குழல் மீது கரமலர் கூப்பிய வண்ணமாக நிற்பவர் கோன் மகளார்'' என்று மந்திரியார் ஞானசம்பந்தருக்கு மங்கையர்க்கரசியைக் காட்டினர். திருஞானசம்பந்தர் பெருமகிழ்ச்சியுடன் அம்மையார் அருகில் சென்றார். மங்மையர்க்கரசியார் கண்கள் நீர் பொழியக் காழி வேந்தர் கழலில் வீழ்ந்தார். ''யானும் என் பதியும் செய்த தவம் என்னே?'' என்று கூறினர். ''அம்மே! பரசமயத்துக்கு இடையில் இனிய திருத்தொண்டு புரியும் உம்மைக் காண வந்தோம்'' என்றார் சம்பந்தர்.

அமைச்சர்பிரான் காட்டிய ஒரு திருமடத்தில் எழுந்தருளி யிருந்தார் திருஞானசம்பந்தர்.

இருட் கூட்டம் திரண்டது போல் அன்றிரவு சமணர்கள் ஓரிடத்தில் கூடினர்கள். சிவனடியார்கள் மதுரை மாநகருக்கு வந்ததையும் அவர்கள் ஓதும் பதிக ஓசையையும் கண்டும் கேட்டும் மனம் புழுங்கினர்கள். சிவனடியார்களுக்கு இடர் புரிய வேண்டும் என்று எண்ணினர்கள். அரசனிடம் சென்று, ''மன்னர் பெருமானே! மதுரையில் இன்று சைவர்கள் வர, நாங்கள் கண்டுமுட்டு'' என்று சமணர்கள் கூறினர்கள். சைவரைக் காண்பதே தீட்டு எனக் கருதி விரதம் இருப்பதே 'கண்டு முட்டு'. ''நான் கேட்டு முட்டு'' என்று கூறி உள்ளம் சிதைந்தான் பாண்டியன். ''அவர்கள் யார்? எதன் பொருட்டு இங்கு வந்தார்கள்?'' என்று கேட்டான் மன்னன். ''வேந்தே! சோழ நாட்டிலே சீகாழியிலே ஈசனிடத்தில் ஞானம் பெற்றதாகக் கூறிக் கொண்டு ஒரு வேதியச் சிறுவன் பலரை அழைத்துக் கொண்டு முத்துச் சிவிகை மீது எங்களை வாதில் வெல்லுவதற்காக வந்திருக்கிறுன்'' என்று சமணர்கள் கூறினர்கள்.

அமணர்கள் கூறியதைக் கேட்ட மன்னனின் மனம் கொதித்தது. ''அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

அஹிம்சை பேசும் அமணர்கள் ''அரசே! அப்பாலன் தங்கியுள்ள மடத்தில் தீப்பிடிக்குமாறு மந்திரம் செபிக்க விரும்புகிறேம்'' என்றார்கள்.

''அப்படியே செய்யுங்கள்'' என்று கூறி அவர்களை அனுப்பி விட்டுக் கவலையுடன் மலரணையில் படுத்திருந்தான் மன்னன். அப்போது மங்கையர்க்கரசியார் அங்கு வந்தார். மன்னர் பெருமான் பேசாது கவலையுடன் இருப்பதைக் கண்ட அவர், ''இறைவரே! தாங்கள் உவகையின்றி உள்ளம் வருந்தியிருக்கும் காரணம் யாது?'' என்று கேட்டார்.

''பெண்ணமுதே! காவிரி நாட்டிலிருந்து சங்கரன் அருள் பெற்ற ஒருவன் அடிகள்மாரை வாதில் வெல்லும் பொருட்டு இங்கு வந்திருக்கிறுன். அவனுடன் வெண் பொடி பூசும் தொண்டர்கள் வந்திருக்கின்றனர். அவர்களை அடிகள்மார் கண்டு



# விநோத அ(ன)ர்த்தம்!



கடமை: எல்லோரும் மற்றவர்களிடமிருந்து எதிர்பார்ப்பது....

'ஆஸ்கார் வயில்டு'

★

அழகு: இயற்கை பெண்களுக்கு முதலில் அளிக்கும் பரிசு. இயற்கை முதலில் திரும்ப எடுத்துக் கொள்வதும் இதைத் தான். —பெர்னாட்ஷா









ஆதாரம்: ''மிர்ரர்''
தகவல்: வி. சம்பத்குமார்

காதல்: முட்டாளின் புத்திசாலித்தனம்; புத்திசாலியின் முட்டாள்தனம்!

–சாமுவேல் ஜான்ஸன்

★

மிருகக் காட்சிச் சாலை: மனிதர்களின் பழக்க வழக்கங்களைக் கவனித்தறிய மிருகங்களுக்காகக் கட்டப்பட்ட இடம்.

ஆலிவர் ஹெர்போர்டு

---

முட்டு; நானும் கேட்டு முட்டு; இது தான் என் கவலைக்குக் காரணம்'' என்றான்.

''மன்னர் பெரும! மனம் கலங்க வேண்டாம். தெய்வத் தன்மை கொண்டு வாதில் வென்றவர் பக்கம் நாம் சேருவோம்'' என்று மங்கையர்க் கரசியார் கூறினர்.

ஞானசம்பந்தரிடம் ஈனர்கள் செய்யும் ஊனம் ஒன்று உண்டாகில் தானும் உயிர் துறந்து ஒழிதல் வேண்டும் என்று பாண்டிமா தேவியார் உறுதி கொண்டார்.

தவமென்னும் போர்வையைப் போர்த்துக் கொண்டு அவமே புரிந்த அமணர்கள் மந்திரத்தைச் செபித்துச் சிவநெறி வளர்க்க வந்தவர் திரு மடத்தின் மீது தியை ஏவினார்கள்.

ஆதிமந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமே!
பூதிசாதனர் மடத்தில்தாம் புனைந்த சாதனைகள்
சாதியாவகை கண்டமண் குண்டர்கள் தளர்ந்தார்!

ஆதி மந்திரமாகிய பஞ்சாக்கரத்தை ஓதுவார் நோக்கும் திசையினும் ஏனைய மந்திரங்களின் செயல் செல்லுமோ? தாங்கள் செய்த செயல்கள் பலிக்காமற் போனதைக் கண்ட அமணர்கள் அலக்கணுற்றார்கள். 'இதனை மன்னன் அறிந்தால் நம்மை மதிக்க மாட்டான். மதிக்காததோடு நமது வருவாய்களையும் தவிர்ப்பான்' என்று எண்ணிப் பல்லாயிரம் அடியவர்கள் துயில் புரியும் திருமடத்துக்கு நெருப்புடன் நடு இரவில் சென்று தீ வைத்தார்கள். அப்பாதகர் புரிந்த செயல் வெளிப்படக் கண்ட பரிசனங்கள், அத்தியை அவித்து, சம்பந்தரைத் தொழுது நிகழ்ந்ததை அறிவித்தனர்.

திருஞானசம்பந்தர், ''ஆ! மாதவர் துயிலும் திருமடத்துக்குப் பாவிகள் பழுது செய்வதோ? மன்னவன் ஆட்சி முறையின் தவறே இதற்குக் காரணம். குடிகள் செய்த குற்றம் கொற்றவனைச் சேர்தல் என்பது அரசியல் முறையாதலால், செய்யனே! திரு ஆலவாய் மேவிய ஐயனே! பொய்யராம் அமணர்கள் இட்ட தீ பையவே சென்று பாண்டியற்காக'' என்று பணித்துப் பைந்தமிழ்ப் பதிகம் பாடினார்.

செவ்வனேதிரு ஆலவாய் மேவிய
ஐயனே அஞ்சலென்றருள் செய்யெனைப்
பொய்ய ராம்அமணர் கொளுவுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே

மன்னனிடம் தீயின் வெம்மை சேர வேண்டும் என்று ஞானசம்பந்தர் பணித்தது அருள் நெறிக்கு ஒவ்வுமோ

எனச் சாலா கருதுவர். இவர்கள் மன்னனிடம் வெம்மை 'பையச்' செல்ல வேண்டும் என ஞானபோனகர் கூறியதைக் கவனிக்க வேண்டும். வெம்மை வேந்தனிடம் 'மெல்லச் செல்லட்டும்' என்கிறார் சம்பந்தர் பெருமான். ஒருவன் வேகமாக நடக்கும்போது நாம் 'மெல்லப் போ' என்று சொல்வது போல் ஆளுடைய பிள்ளையாரும் சொல்கிறார். அவர் தங்கியிருந்த திருமடத்துக்குத் தீயிட மன்னன் ஒப்பியதால், அவ்வாறு தீவைத்தவுடன் அதற்கு இறைவனின் தண்டனையாக— அல்லது இயற்கையின் விதி போலவே வெம்மையானது வெகு வேகமாகப் பாண்டியனை நோக்கிச் சென்றது. அச்சமயத்தில் தாம் அருளாளராகச் சம்பந்தப் பெருமான், 'வேகமாக— அவனை வதைக்காதே. மெல்லச் செல்' என்று கட்டுப்படுத்தினார். இறைவன் தரும் தண்டனையை யாரும் முற்றிலும் மாற்ற முடியாதாகையால் அதன் உக்கிரத்தை ஓரளவு தணிக்க முன்வந்தார் தயாநிதி சம்பந்தர்.

பாண்டிமா தேவியாரது மங்கல நாணைப் பாதுகாக்கும் பொருட்டும் குலச்சிறையாரின் அன்பினை மதித்தும், அபராதம் செய்த அரசன் நல்லறிவு பெற்றுச் சிவநெறியை அடைய வேண்டியிருந்ததாலும் தீப்பிணியை 'பையவே செல்க' என்று பணித்தருளினார். அந்த வெந்தழல் வெப்பு நோயாகச் சென்று மன்னனைப் பற்றி வெதுப்பியது.

சமணருக்குத் துணை செய்த இருள் தொலையக் கீழ்க் கடலில் எழுந்தான் இரவி. பாதகர் செய்த தீமையைக் குலச்சிறையாரிடம் கேட்ட மாதேவியார் உள்ளம் குலைந்தார். ''தூயவரைத் தீயவர் நாட்டுக்கு வரவழைத்த நாம் மாய்வதே நலம்'' என்று துணிந்தார். பின்னர் அத்தீமை திருமடத்துக்கு அணுகவில்லை என்பதைக் கேள்வியுற்று மனம் தேறினார்.

வேந்தனுக்கு வெப்பு நோய் வந்ததைக் கேட்டுத் துணுக்கமுற்ற தேவியார், அரசனிடம் விரைந்து சென்றார். குலச்சிறையாரும் கொற்றவனிடம் குறுகினார்.

வெப்பு நோயால் வேந்தன் உடல் நடுக்குற்றான். அந்த வெம்மையால் அருகில் நின்றவரது உடம்பு காந்தியது; அனல் பெருகிறது. ஆவி கருகியது. உணர்வு பொன்றியது. ஒருவரும் நெருங்க முடியாது விலகினார்கள்.. இளம் வாழை இலைக் குருத்துக்களையும், இளந் தளிர்களையும் அருகில் வைத்தனர். அவைகளும் வெந்து கரித் துகளாயின. மருத்துவர்கள் திரண்டு வந்து தாம் கற்ற கலைகளின் சிகிச்சை யனைத்தும் செய்தும் பயனில்லை. மன்னன் மதி மயங்கினான்.

சமணர்கள் ''இது நாம் இரவில் செய்த செயலின் விளைவு போலும்'' என்று மருண்டு அரசனிடம் அணுகினார்கள். நோயின் மூலம் தெரியாத சமணர்கள் மயிர்ப் பீலியைக் கொண்டு தாம் கற்ற மந்திரத்தை உச்சரித்து மன்னவன் உடம்பைத் தடவினார்கள். பீலியும் அதைச் சேர்ந்த பிரம்பும் சாம்பலாயின. அதனைக் கண்டு அதிசயித்த அமணர்கள், தமது கமண்டலங்களில் உள்ள நீரை அள்ளி மன்னன் மீது தெளித்தார்கள். நெருப்பில் நெய் விட்டது போல் அது வெப்பத்தை மேலும் அதிகரிக்கச் செய்தது. அனற் கொழுந்துகள் பரந்தன. மன்னன் முன்னையினும் பன்மடங்கு துன்பமுற்றான். ''ஒருவரும் இங்கு நில்லாமல் விலகிப் போங்கள்'' என்று அமணர்களை நோக்கிக் கூவினான்.

பாண்டிமா தேவியார் பயந்து மந்திரியாரை நோக்கி, ''நம்மை உய்விக்க எழுந்தருளிய முத்தமிழ் விரகர்பால் இரவு சமணர்கள் செய்த தீங்கு இவ்வாறு மூண்டது போலும்'' என்றார்.

''அன்னையே! புரமெரித்த புனிதருடைய அடியவர்க்கு அறிவிலிகள் செய்த அபராதமே இதற்குக் காரணம். தீமை செய்த இவர்கள் இதனைத் தீர்க்க முற்பட்டால் நோய் கூடுமேயன்றிக் குறையாது'' என்று அமைச்சர் கூறினார். மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் அரசனை வணங்கி, ''அண்ணலே! சீகாழிப் பிள்ளையார் மதுரைமாநகருக்கு வந்துள்ளார். அவருக்கு அருகர் செய்த அநுசிதமே இவ்வெப்பு நோய்க்குக் காரணமாகும். அவர் அருளினாலே இது அகலும். தீய இப்பிணியேயன்றி பவப் பிணியும் தீரும்'' என்று கூறினார்கள். மெய்யுணர்வளிக்கும் அவ்விருவரும் கூற திருஞானசம்பந்தர் என்ற திருமந்திரம் பாண்டியன் செவியில் சென்ற மாத்திரத்தில் சிறிது அயர்ச்சி தீர்ந்தது. மானமிலா அமணர் செயலே நோய்க்குக் காரணம் என்றெண்ணிய மன்னன், ''சைவ நீதி மறையவச் சிறுவர் வந்து அருள்செய்து இந்நோய் அகலுமேல் உண்மையை நான் அறிவேன்; அன்றியும் எனது வெப்பு நோயை நீக்கி வென்றவர் பக்கம் சேர்வேன்; அவரை இங்கு அழைத்து வாருங்கள்'' என்றான்.

(தொடரும்)

தேவலோகத்தில் பெரிய சாமி, ஒரு சின்னச் சாமியைக் கூப்பிட்டது.

''அந்தப் பிரும்மாவுக்குச் சொன்னாலும் தெரியவில்லை. திருத்தாமல் பெற்றுக் கொண்டேயிருக்கிறார்'' என்று அலுத்துக் கொண்ட பெரிய சாமி முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டது.

வாயில் போட்டுக் கொண்டிருந்த நாவல் பழத்தின் விதையை என்ன செய்வதென்று சின்னச் சாமி யோசித்துக் கொண்டிருந்தது. ''பூலோகத்தில் இரயில் வண்டிகளிலெல்லாம் மிகவும் கூட்டமாமே! நீ உடனே போய் ஒரு இரயில் வண்டியைக் கவிழ்த்து ஜனத்தொகையைக் கொஞ்சம் குறை'' என்றது பெரிய சாமி.

அந்தக்கணமே சின்னச் சாமி காற்று வடிவத்தில் பூலோகத்தை நோக்கிக் கிளம்பிற்று.

ஃ ஃ ஃ

அடுத்த இருபத்திநாலு மணி நேரத்துக்குள்ளோ, நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குள்ளோ பலமான மழையோ, காற்றுடன்கூடிய கடுமையான மழையோ, பலமான புயலோ வரக்கூடும். வங்காளவிரிகுடாவில் மையம் கொண்டுள்ள காற்றழுத்த மண்டலம் மணிக்கு 15 கிலோமீட்டர் வேகத்திலோ, 75 கிலோ மீட்டர் வேகத்திலோ வடமேற்குத் திசையை நோக்கியோ, தென்மேற்குத் திசையிலோ நகரலாம்'' என்று ரேடியோவில் விசேஷ எச்சரிக்கை செய்தார்கள். இதற்குள்ளேயே மழையும் காற்றும் தொடங்கிவிட்டிருந்தன.

முகலூரிலிருந்து பத்தூர் செல்லும் இரயில் பாதையைச் சேதப்படுத்தி இரயிலைக் கவிழ்த்துவிடுவதென முடிவுசெய்து சின்னச் சாமி அந்தப் பக்கமாகப் புறப்பட்டது.

தன் விளையாட்டைத் தொடங்கலாமெனச் சின்னச்சாமி எண்ணிய போது வந்துகொண்டிருந்த இரயிலினுள்ளிருந்து ஒரு குரல் அதன் காதில் விழுந்தது.

''சாமி, என்னப்பனே! மூன்றூர் போகிற வரையிலுமாவது ஓர் ஆபத்தும் வேண்டாம்டா பெருமானே!''

# கருணைப் புயல்

ம. ராஜாராம்





என்று அந்தக் குரல் கடவுளை வேண்டிக் கொண்டிருந்தது.

ஒரு வயதான அம்மாள் அருகிலிருந்த பெண்மணியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''ஒன் வயசுதாம்மா இருக்கும், என் நாட்டுப் பொண்ணு. மொதப் பிரசவம் கஷ்டமாயிருந்தப்பவே டாக்டரம்மா சொல்லிட்டா — இனிமே கொழந்தை வேண்டாம்னு. பையனுக்குத்தான் புத்தி இல்லேன்னு இவளுக்காவது ஜாக்கிரதை வேணும்? இப்ப கஷ்டப்படறு எட்டுமாசம் தூக்கிண்டு!''

''எந்த ஊர்லே இருக்காங்க?'' என்றாள் மற்றவள்.

''இங்கே மூன்றூரிலே. பையனுக்குப் பெருமாள் கோவில் மடப்பள்ளியிலே வேலே. 'ஒடனே வா, ஆபத்து' அப்படின்னு கம்பி கொடுத்தான். போஸ்டுமாஸ்டரே வாசிச்சுக் காட்டி, 'நீங்க ஒடனே கௌம்புங்கோ வேதாந்தம்மா'ன்னு ரயில் டிக்கெட்டுக்குப் பணமும் கொடுத்தார். நல்ல மனுஷன்.''

மழையும் காற்றும் வலுக்கவே, பாட்டியம்மாள், ''அப்பனே, ஏழுமலையாண்டவா! ஓலகளந்த பெருமாளே! இப்படி மழை வர்றதே! பொயல்

இயல் வந்துராம இருக்கணுமே! என்னை மூன்றூரிலே கொண்டு சேர்த்துராப்பா. வேங்கடரமணா!'' என்று மனமுருகப் பிரார்த்தித்தவாறே தாடையில் போட்டுக் கொண்டாள்.

சின்னச்சாமி கீழே உட்கார்ந்து விட்டது. பாவம், அந்தப் பாட்டியின் நாட்டுப் பெண் மூன்றூரிலே என்ன கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாளோ! பாட்டியை அழைத்துப் போய் அவளிடம் சேர்த்து விடலாம். மூன்றூரில் அவள் இறங்கினதும் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணியது. இரயில் இரண்டூரில் வந்து நின்றது. வண்டியில் ஏற ஏகக் கூட்டம். இறங்கினவர்களைவிட ஏறியவர்கள் அதிகம் இருந்ததில் சின்னச் சாமிக்கு ரொம்ப சந்தோஷம்.

''இப்படி மேலே வந்து விழறேளே! பொம்மனாட்டி ஒருத்தி இங்கே ஒக்காந்திருக்கறது தெரியலியா?'' என்று பாட்டியம்மாள் இரைந்தாள்.

பெரிய பெரிய கட்டங்கள் போட்ட சட்டையை அணிந்திருந்த அந்த வாலிபன் ஒன்றும் பதில் சொல்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவனை ஒட்டி நின்று கொண்டிருந்த பெண் பெஞ்சில் உட்கார இடம் கிடைக்குமா என்று ஆராய்ந்து கொண்டிருந்தாள். பாட்டியம்மாள் தன் அருகே பெஞ்சில் ஒரு பெரிய டின்னை வைத்திருந்தாள். அதை எடுத்தால் உட்காரலாம். ஆனால் கூட்டத்தில் இப்படி இலேசாக மேலே இடித்து விட்டதற்கே இந்த ஆர்ப்பாட்டம் செய்யும் பாட்டியம்மா இடம் கேட்டால் கொடுப்பாளா?

ஆனால் இரயில் புறப்பட்டுச் சிறிது







தூரம் செல்வதற்குள் பாட்டியம்மாள் சகஜ பாவத்துக்கு இறங்கியதோடு, தன் டின்னை எடுத்துப் பெஞ்சியில் வைத்துவிட்டு, ''இந் தாடியம்மா! இப்பிடி வந்து ஒக்காரு. எவ் வளவு நேரந்தான் கால் கடுக்க நிப்பே?'' என்று அந்தப் பெண்ணை அழைத்தாள்.

தன்னருகில் வந்தமர்ந்த அப்பெண்ணிடம் ''நன்னு உக்காந்துக்கோடி பெண்ணே! எம்மேலே இடிச்சுட்டா என்ன? அதெல் லாம் அந்தக் காலம்! நன்னு உக்காந்துக்கோ. எது வரையிலும் பயணம்? ஒங்களைப் பார்த்தா நேத்துத்தான் கல்யாணமாகி வரவா போலிருக்கே!'' என்றாள்.

நிமிர்ந்த அந்தப் பெண்ணின் பார்வை ஒரு கணத்தில் கட்டைச் சட்டைக்காரனிட மும் பாட்டியம்மாளிடமும் மாறித் தாவித் தாழ்ந்தது.

''எது வரையிலும் பயணம்?'' மறுபடி யும் கேட்டாள் பாட்டி.

''அஞ்சூருக்கு'' என்று மெல்லிய குரலில் பதிலளித்தாள் அந்தப் பெண். பாட்டியம் மாளின் பார்வை போகும் திசையைப் பார்த்து ஒருவிதமான அவசர ஜாக்கிரதை யோடு தன் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

சின்னச் சாமி சோம்பல் முறித்துக் கொண் டது. அடுத்த ஸ்டேஷன் மூன்றூர்தான். பாட்டியம்மாள் இறங்கிப் போனவுடன் மூன்றூர் தாண்டி ரயில் போகும் போது சீக்கிரமாகத் தன் வேலையை முடித்துக் கொண்டு மீதியிருக்கும் நாவல் பழங்களையும் தின்னப் போக வேண்டும்.

பாட்டியம்மாளின் எதிரே உட்கார்ந் திருந்த அம்மாள் அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். ''ஒங்களைப் போலப் பார்க்கறது அபுரூபம்தாம்மா! யாரு இப்பிடி மருமவ மேலே பாசம் வைச்சிருக்காவ? எங்க ஊர்லே ஒரு ராட்சசி; அவ மருமவ மேலே தெனசரி ஒரு கொடம் தண்ணி 'ஊத் துவா! அப்பத்தான் அந்த மூதி படி யுங்கரு.''

''அதுல என்னடிம்மா கஷ்டம்! ஒரு கொடம் தண்ணி [கொட்டினு குளிச் சிட்டுப் போறது! எங்க மாமியார் மக ராஜி. அவ என்னப்போல இல்லாம மஞ்ச ளும் குங்குமமுமாப் போய்ச் சேர்ந்தா! தெனம் ஒரு படி அரிசியும் அரைக்காப்படி உளுந்தும் போட்டு என்னை அரைக்கச் சொல்லுவா. ஆனல் எனக்குத் தோசை கெடையாது; பழையதுதான். அப்பல் லாம் தோசை என்னமா இருக்குங்கறே! ஒரு தோசைக்கு மோள காப் பொடி. ஒரு தோசைக்குச் சாம்பார்; ஒரு தோசைக்குச் சட்னி, அடுத்ததுக்குத் தயிர்னு எங்க மாமனாரும் அவ புள்ளாண்டானும் தின் னுண்டேயிருப்பா. நான் வாத்து வாத்துப் போட் டுண்டே யிருக்கணும். நான் நடுவிலே தின்னுடப் படாதுன்னு என் பக்கத் துலே ஒக்காந்துண்டு தின்னுண்டிருப்பாள் என் மாமியார்.''

இதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களால் சிரிப்பை அடக்க முடிய வில்லை. கூட்டத்தின் அந்தப்புறமாக நின்று கொண்டிருந்தவர்களும் தலையை நீட்டிப் பாட்டி யம்மாளின் பேச்சைக் கவனிக்க ஆரம்பித் தார்கள்.

''ஒங்களுக் கெல்லாம் சிரிப்பா இருக்கு! நானும் இப்போ ஒங்களோட சேர்ந்து சிரிச்சுட்டுப் போறேன். ஆனுஅப்பஒரு நாளைக்காவது தோசை வாத்துத் தின்னுட னும்னு மாமியாருக்குத் தெரியாமெ கொஞ் சம் மாவை எடுத்து ஒளிச்சு வைச்சு ராத்திரி எல்லாரும் தூங்கினப்புறம் மெள்ள அடுக் களைக்குப் போய் அடுப்பைப் பத்த வைச்சு, கல்லைக் காயப்போட்டு 'மாவ வார்க்கறபோது 'சொய்'னு சத்தம் கேக்கப்படாதே, கேக்கப்



படாதே'ன்னு பெருமாளை வேண்டிண்டு மொதத் தோசையை வாத்துத் திருப்பி, சூட்டக்கூடப் பார்க்காம எடுத்து ஒரு துண்டு வாயிலே போட்டேன். தோசைத் துண்டு வாயிலே இருக்கு. மாமியார் பின்னாடி வந்து நின்னுண்டு கொரவளையப் புடிக்கறா. அப்பிடியே தள்ளிண்டு போய் மூத்தத்துலே, வாயிலெ இருக்கறதைத் துப்ப வைச்சு, கொஞ்சம் நஞ்சம் உள்ளே போயிருக்குமோன்னு பேதிக்கும் கொடுத்துட்டா!''

பெட்டியில் 'பட்'டென்று சிரிப்பு.

எதிரே இருந்த அம்மாள், ''நீங்க இத்தினி யெல்லாம் கஷ்டப்பட்டிருக்கிய. ஆனாலும் மருமவ மேலே இத்தினி பாசம் வெச்சிருக்கியளே!'' என்று வியந்தாள்.

''அவ வேறே யாருமில்லேடி! என் பேத்திதான்! என் பெண்ணோட பொண்ணைத்தான் புள்ளைக்குச் சேஞ்சிண்டிருக்கேன்!'' என்றாள் பாட்டியம்மாள்.

மூன்றாரில் அவள் இறங்கினாள். சின்னச்சாமி கையை உதறிக் கொண்டது.

பாட்டியம்மாளின் இடத்தில் கட்டச் சட்டை வாலிபன் உட்கார்ந்து கொண்டான்.

அந்தப் பெண் மற்றவர்களின் காதில் விழாத மெல்லிய குரலில் அந்த இளைஞனிடம், ''எனக்கென்னவோ பயமாவே இருக்குங்க..... எல்லாரையும் இப்பிடி எதித்துக்கிட்டு...'' என்று இழுத்தாள்.

அவன் ஆதரவாய், 'பயந்தா ஒண்ணும் நடக்காது கண்ணம்மா! நான் ஒளுங்காக் கேட்டிருந்தா ஒங்கப்பா சம்மதிச்சிருப்பாரா? கௌரவமா வந்து கேட்டப்ப அவரு என்ன பேச்சுப் பேசினாரு? ஊருலே கெதியில்லாம இருக்கிற பொம்பளெங்களை யெல்லாம் ஒரு கை பார்க்கற அவரு, நம்ம நியாயமான ஆசையை மதிச்சாரா?'' என்று வெறுப்புக் கலந்த குரலில் கொண்டு வந்து நிறுத்தினான்.

சின்னச்சாமி தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டு ஓர் அடி எடுத்து வைத்தது.

அந்தப் பெண், ''என்னங்க இது? இப்படிக் காத்து சீறுது? கடவுளுக்கே நாம இப்படிக் கள்ளத்தனமா ஓடி வர்றது புடிக்கலியோ?'' என்று கலவரமடைந்தாள்.

அவன் சிரித்தவாறே, ''இது கள்ளத்தனமில்லே. அன்போட சக்தி. கடவுளுக்கு எப்படி இது பிடிக்காமப் போகும்? அன்பே கடவுள்; கடவுளே அன்பு!'' என்றான்.

''எனக்கென்னவோ பயமாயிருக்குதுங்க! பொசல் கிசல் வந்து வண்டி கவுந்துப்புடுமா?'' என்றாள் அவள் பீதியுடன்.

''அதெல்லாம் ஒண்ணும் வராது கண்ணம்மா ! நீவேணா பாரேன். நாம பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்து சந்தோசமா வாழ்க்கையை ஆரம்பிக்கப் போறோம்!''

சின்னச்சாமி திடுக்கிட்டு நின்றது.

அந்தப் பெண், ''கடவுளே! நீத்தாரப்பா! நாங்க அஞ்சூர் போய்ச் சேர்ற வரையிலும் எந்தவித எடஞ்சலும் வராம நீதான் காப்பாத்தணும். சாமி!'' என்று மனமுருக வேண்டிக் கொண்டாள்.

சின்னச் சாமி தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டது. 'அன்பே கடவுள்' என்று நம்பியிருக்கிற இவர்களுடைய வேண்டுதலை எப்படிப் புறக்கணிப்பது?

கொஞ்ச நேரம் குழம்பிய பிறகு, ''சரி, பரவாயில்லே. 'ஆப்டர் ஆல்' இன்னும் ரெண்டே ரெண்டு ஸ்டேஷன்கள்! ரயில் அஞ்சூர் தாண்டி 'ஸ்பீட்' எடுத்ததும் ஒரு நிமிடம்கூடத் தாமதிக்கக் கூடாது'' என்று தீர்மானித்துக் கொண்டது சின்னச் சாமி.

நாஞூர் சின்ன ஸ்டேஷன்தான். இருந்தாலும் அங்கும் நிறையக் கூட்டம்தான் ஏறியது.

ஒரு பையனை ஏற்றிவிட்டு அவன் தகப்பனார், வண்டி நிற்கிற இரண்டு நிமிடங்களில் அவனிடம் இரண்டாயிரம் விஷயங்களைச் சொல்லிவிட முயன்று கொண்டிருந்தார்.

''நன்னா ஜாக்கிரதையாப் படிக்கணும்டா, கொழந்தே! நீ படிச்சு முன்னுக்கு வந்துதான் குடும்பத்துக்கு வெளக்கேத்தணும்!'' என்று கூறியபோது அவர் கண்களில் நீர் துளித்தது.

வண்டி புறப்பட்டதும் அவனருகே உட்கார்ந்திருந்த பெரியவர் அவனிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தார்.

''ஒம்பேரு என்னப்பா, தம்பி?''

''முரளி, ஸார் !''

''ரயிலேத்தி விட்டவர் தகப்பனாரோ?''

''ஆமாம், ஸார் !''

''எதுவரையிலும் போறே ?''

''ஏழூருக்குப் போறேன் சார்!''

''அங்கே யாரு இருக்காங்க?''

''ஏழூர்க் காலேஜிலே சேரப் போறேன், ஸார்!''

''ஓஹோ! அட்மிஷன் கெடைச்சுடுத்தா?''

''ம்......''

''என்ன மார்க் வாங்கியிருக்கே, எஸ். எஸ். எல்.சி.யிலே?''

''நானூத்தி ஐம்பத்தேழு சார் — அறுநூறுக்கு!'' — அவன் சற்றுப் பெருமையோடு கூறிக் கொண்டான்.

''ரொம்பக் கெட்டிக்காரப் பையன் ! ஒன்ன மாதிரிப் பையன்களைத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.... ம்.... ம்... அப்புறம் ? ஒனக்கு அக்கா, தங்கை, அண்ணன் தம்பி எல்லாமே இருக்காங்களா?''

''எனக்கு ஒரு அக்கா இருக்கா. ரெண்டு தங்கையும் ஒரு தம்பியும் இருக்காங்க. அக்காவுக்குக் கல்யாணம் பண்ணணும். பெரிய தங்கைக்குக்கூடப் பதினைஞ்சு வயசு. என்னைவிட ஒரு வயசுதான் சின்னவ.''

''ம்.... பெரிய குடும்பம்தான்! அப்பாவுக்கு என்ன வேலே?''

''அப்பாவுக்கு வேலே ஒண்ணுமில்லே. கொஞ்சம் நெலம் இருக்கு. அதை வச்சுத்தான் இப்பச் சாப்பாடு, என் படிப்பு எல்லாம்!''

''எவ்வளவு நெலம் இருக்கும்?''

''எம் படிப்பு முடியறபோது நெலமும் தீர்ந்திருக்கும்'' என்றான் முரளி தலையைக் குனிந்தவாறே.

''அப்புறம்தான் நல்லா சம்பாதிப்பியே! ஒனக்கொண்ணும் கொறவு இருக்காதுப்பா!'' என்றார் அவர் ஆறுதலாக.

வண்டி அஞ்சூரில் நின்று கட்டச் சட்டை வாலிபனும் அவளும் இறங்கி ஒரு நிமிடத்துக்குப்பின் புறப்பட்டது. சின்னச் சாமி அவசர அவசரமாக எழுந்து நின்றது.

முரளி சொல்லிக் கொண்டிருந்தான். ''எங்கப்பா என்னைத்தான் ஸார் மலைபோல

நம்பியிருக்கார்! நான் பி. யூ. ஸி. முடிச்சுட்டு டாக்டருக்குப் படிக்கலாம்னு இருக்கேன். நாம் சம்பாதிக்க ஆரம்பிச்சப்புறம் தான் அக்காவுக்குக்கூடக் கல்யாணம் செய்யணும். அவளுக்குப் பதினெட்டு வயசு!''

அந்தப் பெரியவர் சொன்னார். ''ம்.... பெரிய மனுஷன் மாதிரித்தான் பேசறே!... இப்பல்லாம் பொண்களுக்கு இருபத்தஞ்சு, இருபத்தாறு வயசிலேதானே கல்யாணம் பண்றாங்க !''

''நான் படிச்சு முடிச்ச உடனேயே சம்பாதிக்க ஆரம்பிப்பேன்னு என்ன நிச்சயம்?''

''கடவுள் மேலே பாரத்தைப் போடு. நீ ராஜாவாட்டமா இருப்பே! ஒங்கப்பா சொன்ன மாதிரி நீதான் ஒங்க குடும்பத்துக்கு வெளக்கேத்தி வைக்கப் போறே!''

''கடவுள் என்னை ஒரு நாளும் கைவிட்டதில்லே ஸார். எங்கப்பாகூட அடிக்கடி சொல்லுவார், கடவுள் மேலே பாரத்தைப் போட்டுட்டுக் கண்ணை மூடிண்டிருன்னு '' என்றான் முரளி இருப்பியுடன்.

சின்னச் சாமி கால்கள் தள்ளாட, தன் தலையில் ஏதோ பாரம் அழுத்தியதைப் போலக் கீழே உட்கார்ந்தது. சின்னச் சாமிக்குத் தன் மேலேயே எரிச்சலாக வந்தது. ஏழூரில் இந்தப் பையன் கீழே இறங்கும் வரை ஒன்றும் செய்ய முடியாது. எந்த நேரத்தில் பெரியசாமி இன்றைக்கு இந்த வேலையைக் கொடுத்ததோ, நாவல் பழமும் தின்ன முடியவில்லை!

சின்னச் சாமி திடுக்கிட்டுக் கண் விழித்த போது ரயில் ஏழூரிலிருந்து கிளம்பிக் கொண்டிருந்தது. அந்தப் பையன் இறங்கியிருப்பானே, இனி நாம் தாராளமாய் நம் வேலையைக் காட்டலாம் என்று எழுந்து இரண்டடிகள் வைத்த போது ஒரு பெட்டியிலிருந்து ஒரு கிழவியின் குரல் காதில் விழுந்தது

''என்னமோ, ஒம்பதூர் வரையிலும் நல்லபடியாய்ப் போய்ச் சேர்ந்துறணும். இந்தப் பச்சப் புள்ளையை அது அம்மாகிட்டே சேர்க்கிறதுக்கு அந்தக் கந்தப்பன்தான் கருணை வெக்கணும்.''

''ஒனக்கு இந்தப் புள்ளெ என்ன வேணும்?'' என்று அவளைக் கேட்டான் ஒரு கிழவன்.

''எனக்கு என்னய்யா, வேணும்? ஒண்ணுமில்லே. நான் பக்கத்து வீட்டுக்காரி. அந்தப் பாவிங்க படுத்தறபாடு பார்க்கச் சகிக்கல்லே. நான் ஊர்க்காரி, எனக்கே பொறுக்கலே !''

''தாயார்க்காரி பின்னே ஏன் இங்கே உட்டுருந்தா ?''

''அவ இன்னய்யா பண்ணுவா, பாவம்! சீக்குக்காரி! ஒட்டுவாரொட்டி நோயி. புருசனும் சரியில்லே. நம்ம சொந்த மாமனும், மாமியுந்தானே கொளந்தைய இங்கே விட்டு வைப்பமேன்னு வைச்சிருக்கா, இந்த ராட்சச ஜென்மங்ககிட்டே......!''

''தலையெழுத்துப் பாரேன்.... என்ன வயசிருக்கும், இந்தப் புள்ளைக்கு?''

''நீதான் சொல்லேன். நாலு இருக்குமா ? மிஞ்சி மிஞ்சிப் போனா அஞ்சு இருக்குமா ? தப்பித் தவறி இது அந்த ராட்சசியை அம்மான்னு கூப்புட்டுப்புட்டா !— அதுக்கு இன்னு அடி தெரியுமா?

''அவளுக்குப் புள்ளையே இல்லியா ?''

''ச்சை! சொன்னா வெக்கக்கேடு! மூணு வாட்டியாக் குளிக்காம இருக்கறதும் கலையிறதுமாவே இருக்கு.

''ம்.... அப்ப இந்தக் கொளந்தயத் தாய்கிட்டே சேர்த்துடறது அப்படின்னு நீ கௌம்பிட்டே.... நல்ல காரியம்! கடவுளு ஒனக்கு ஒரு கொறவும் வெக்கமாட்டாரு!''

''எங்களைக் கடவுளு ஒழுங்கா ஒம்பதூருக்குக் கொண்டு சேத்துட்டா சரிதான்! ஒரே காத்தும், மழையுமா சீறுது. கருப்பண்ணைச் சாமிதான் காப்பாத்தணும்!''

சின்னச்சாமி தளர்ந்து போய் உட்கார்ந்தது. 'தாயிடம் போகப் போகிற சின்னக் குழந்தையை எப்படிப் பிரிப்பது? ஒன்பதூர் தாண்டட்டும், என் வேலையை முடித்துக் காட்டுகிறேன்' என்று வெறிபிடித்ததுபோலக் கறுவிக் கொண்டது, சின்னச் சாமி!

ஒன்பதூர் தாண்டிய உடனே அது துள்ளிக் குதித்தவாறே முன்னேறிய போது எஞ்சினிலிருந்து, ''பிள்ளையாரப்பா, கணேசா, பிள்ளையாரப்பா !'' என்று மனமுருக வேண்டும் குரலெழுந்தது.

அந்த இளம் இஞ்சின் டிரைவர், ''கடவுளே, என் ட்ரிப்புல ஒண்ணும் ஆக வேண்டாம்! விநாயகா, நீதான் காப்பாத்தணும்! நான் நல்லபடியாப் போய்ச் சேர்ந்து ரிலீவ் பண்ணிக்கிட்டு, லீவெடுத்துக்கிட்டு ஓடணும் வீட்டுக்கு! மீனாட்சிக்குப் பத்து மாசம் ஆகுதே ! இப்பவே வீட்ல இருக்காளோ, ஆஸ்பத்திரியிலே இருக்காளோ! மொதல் கொழந்தைடா, எங்கப்பா! ஒன்னைத்தான் நம்பியிருக்கேன்!'' என்று மனமுருக வேண்டிக் கொண்டிருந்தான்.

சின்னச் சாமி திக்பிரமை பிடித்து நின்றது. ரயில் பத்தூரை நெருங்கியது.

சின்னச் சாமி சோர்வுடன் தேவலோகத்துக்குத் திரும்பியது. பெரிய சாமிக்கு என்ன பதில் சொல்வது?

பெரிய சாமி சின்னச்சாமியைக் கண்டவுடனேயே விசாரித்தது.

சின்னச் சாமி நடந்ததைக் கூறியது.

பெரிய சாமி முகத்தில் கடுங் கோபம். ''நீ கடவுளாயிருக்க லாயக்கில்லே! போ, ரயில்வே மந்திரியாகப் போ! அப்போதுதான் உன்னுடைய கடமையைச் சரியாகச் செய்ய முடியும்!'' என்று சாபம் கொடுத்தது.

அதிகரித்த வெப்பத்தால்
ஏற்படும் விரிசல், பிளவு, அரிப்பு
முதலியவைகளை எதிர்த்து நிற்கும்

# ஏஸிஸி
# ஹை அலுமினு
# ஃபயர்பிரிக்குகள்

**உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்ப தயாரிக்கப்படுகின்றன!**





எங்கள் ஃபயர்பிரிக்குகளை உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்றபடி தயாரித்துத் தருகிறோம். உங்களுடைய பிரத்தியேகத் தேவை என்ன என்பதை எங்களுக்குத் தெரிவியுங்கள். மீடியம், ஹை மற்றும் ஸுபர் அளவில் அலுமினு உள்ள ஏஸிஸி ஃபயர்பிரிக்குகள் கிடைக்கின்றன. மிகவும் அதிகரித்த வெப்பத்தில், கடினமான சூழ்நிலையில், நீடித்து உழைப்பதற்கேற்ற உரம் பெற்றவை இந்த ஹை அலுமினு ஃபயர்பிரிக்குகள்.

இதர விவரங்களுக்கு எழுதுங்கள்:
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்
பம்பாய் . அஹமதாபாத்
பெங்களூர் . கல்கத்தா
கோயம்பத்தூர் . புது டில்லி
இந்தூர் . கான்பூர் . மதராஸ்
பாட்னு . ஸெகந்திராபாத்




**தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**
**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

IWT-CHI-2470




வி.எஸ். ஸெக்டண்கர்

**1755**-ஆம் ஆண்டு—ஒரு பயங்கர பூகம்பம் அழகிய லிஸ்பன் நகரைச் சின்னாபின்னப் படுத்தி விட்டது. வீடிழந்த ஆயிரக்கணக்கானவர் தெருக்களில் திரிந்தனர்; ஏராளமான மக்கள் இடிபாடுகளுக்கிடையில் அகப்பட்டு உயிர் துறந்தனர். கையோ காலோ இழந்து காயமுற்றோரும் நோய்நொடியினால் பிடிக்கப்பட்டோரும் மிகப் பலர்.

இத்தருணத்தில் பொம்பால் என்ற பெயர் கொண்ட ஒரு பிரபு சோர்ந்து நிலைகுலைந்த மக்களுக்குப் புத்துணர்ச்சியும் புதுத் தெம்பும் ஊட்ட முன்வந்தார். அவர் தலைமையில் ஒரு தொண்டர் படை திரண்டது. ''மாண்டு போனவர்களைப் புதையுங்கள்; ஏழையருக்கு உணவளியுங்கள்'' என்ற இரு கொள்கைகளையும் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டு தமது பணியைத் தொடங்கினார் பொம்பால்.

வெகு சீக்கிரம் அவர் அளித்த ஊக்கம் காரணமாக மக்களின் துன்பம் குறையத் தொடங்கியது. அந்த ஆரம்பப் பணியைத் தொடர்ந்து பொம்பால் பகீரதப் பிரயத்தனங்கள் செய்து போர்ச்சுகலின் தலைநகரைக் குட்டிச்சுவர்களிலிருந்து குபேரப் பட்டணமாக மீண்டும் எழுப்பினார்.

அப்போது பிரதம மந்திரியாக விளங்கியவர் பொம்பால். அவரது பதவிக் காலம் ஆரம்பமான உடனேயே மேற்சொன்ன பெரிய விபரீதம் நிகழ்ந்து விட்டது. லிஸ்பனில். எடுத்த எடுப்பிலேயே இத்துணை பெரிய பிரச்னையைச் சமாளிக்க நேர்ந்த போதிலும் அவர் மனம் தளராமல் தாம் ஒரு சிறந்த தலைவர் என்பதை நிரூபித்தார். மக்களிடையே அவரிடம் மதிப்பு மிகுந்தது. அத்துடன் அன்றையப் போர்ச்சுகலிய மன்னர் ஜோஸப்பின் பேரன்புக்கும் மரியாதைக்குமே பாத்திரரானார்.

பொம்பாலுக்கு முன்பு பிரதம மந்திரியாக இருந்த பலருள் யாருமே அனுபவித்து அறியாத அளவுக்கு அத்துணை அதிகாரங்களை இவருக்கு வழங்கினார் மன்னர். அவற்றை வினயத்துடன் ஏற்று விவேகத்துடன் செயலாற்றினார் பொம்பால். கல்வி, பொருளாதாரம், பாதுகாப்பு போன்ற பல துறைகளிலும் நல்ல சீர்திருத்தங்களைச் செய்து போர்ச்சுகலில் அரசாட்சி திறம்பட நடக்கத் துணை புரிந்தார்.

இவை எல்லாவற்றிலும் சிறந்த சீர்திருத்தம் ஏற்றத்தாழ்வுகளை இவர் போர்ச்சுகலிய சாம்ராஜ்யத்திலிருந்து அடித்து விரட்டியதேயாகும். எல்லோரும் சமம்; அனைவரும் சகோதரர்களே; அவர்களுக்குச் சம உரிமைகள் உண்டு என்ற கொள்கையைக் கடைப்பிடித்துச் சட்டங்கள் இயற்றினார்.

இதற்கு முதற்படியாக ஜெஸூட் என்ற கிறிஸ்துவ மதப் பிரிவினரைத் தேசப் பிரஷ்டமே செய்து விட்டார். போர்ச்சுகலிய சாம்ராஜ்யத்தில் எந்த மூலை முடுக்கிலும் அவர்கள் காணப்படக் கூடாது என்று உத்தரவு போட்டார். ரோமன் கத்தோலிக்கர்களில் ஒரு பிரிவினர் இந்த ஜெஸூட். கிறிஸ்துவ மதத்தில் உள்ள பல பிரிவினரும் கோவாவிலும் சரி, உலகின் வேறு பல பாகங்களிலும் சரி மதப் பிரசாரம் செய்துதான் வந்தனர்; ஆனால் இந்த ஜெஸூட் பிரிவினர் மட்டும் கட்டாயப்படுத்தியேனும் மதமாற்றம் செய்வதை ஓர் அதிதீவிரக் கொள்கையாகக் கொண்டிருந்தனர். இதற்காகப் பயங்கரமான காரியங்களில் இறங்கினர்.

**ப**தினாறாம் நூற்றாண்டில் இன்குவிஸிஷன் என்ற அமைப்பு வேறு பல நாடுகளில் போல் கோவாவிலும் புகுந்திருந்தது. போப்பாண்டவர் மூன்றாவது இன்னொஸெண்டினால் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தொடங்கப்பட்ட இந்த அமைப்பு கிறிஸ்துவ மதத்துக்கு மாறுபட்ட கருத்துக்களை அழிக்கவும் அம்மாறுபட்ட கருத்துடையவர்களைத் தண்டித்து ஒடுக்கவுமே ஏற்படுத்தப்பட்டது. இந்த அமைப்பில் பதவி வகித்தோர் செய்த அக்கிரமங்கள் கணக்கிலடங்கா. முக்கியமாக, பதினாறாம் நூற்றாண்டில் ஸ்பெயின் நாட்டில் பல கொடுமைகள் நிகழ்ந்தன. இந்த இன்குவிஸிஷன் அமைப்பு காரணமாக, அவர்களின் கொடுமை தாங்காததன் விளைவாகக் கோவாவை விட்டு ஓடிப் போன ஹிந்துக்களும் பிற மதத்தவரும் ஏராளம். இதனால் கோவாவின் ஜனத்தொகையே விபரீதமான நிலைக்குக் குறைந்து கொண்டு வந்தது. இது போதாதென்று கிறிஸ்தவ மதத்தினருக்கிடையிலேயே இன பேதம் நிற பேதம் கற்பித்து ஏற்றத்தாழ்வுகள் பல உண்டாக்கி இருந்தனர்.

இந்த இன்குவிஸிஷன் அமைப்பு கோவாவிலும் புகக் காரணமாக இருந்தவர்கள் ஜெஸூட் பிரிவினரே.

ஆகவே போர்ச்சுகலிய சாம்ராஜ்யத்தின் எப்பகுதியிலும் ஜெஸூட்கள் இருக்கக் கூடாது என்று உத்தரவு போட்டதும் கோவானிய மக்கள் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை.

போர்ச்சுகலிய இந்தியாவில் வைஸ்ராயாக விளங்கிய கோண்டி டி இகா, பொம்பாலிடமிருந்து உத்தரவுகள் கிடைத்ததும் கோவாவி

விருந்த ஜெஸுட்களை யெல்லாம் ராணுவத்தினரின் உதவியுடன் சுற்றி வளைத்துப் பிடித்துக் கைதிகளாகப் போர்ச்சுகலுக்குக் கப்பலேற்றி அனுப்பி விட்டார். இதைத் தொடர்ந்து ஒரு சில ஆண்டுகளுக்குள் இன்குவிஸிஷன் அமைப்பும் கோவாவில் இயங்காது மடிந்து விட்டது.

கோவாவில் இருந்த வைஸ்ராய்க்கு அனுப்பிய கடிதங்களுள் ஒன்றில் பொம்பால் பின்வருமாறு எழுதினார்: "மேன்மைதங்கிய பிரபுவே! நிலத்தில் பாடுபடுவதானாலும் சரி, உத்தியோகங்களை ஏற்பதானாலும் சரி, ராணுவத்தில் பதவிகள் வகிப்பதானாலும் சரி, அல்லது மதம் சம்பந்தப்பட்ட உயர் அந்தஸ்துக்களை நிர்வகிப்பதானாலும் சரி, இவற்றிலும் வேறு பல துறைகளிலும் கோவாவில் கோவானியருக்கு உரிய இடம் தரப்பட வேண்டும். இவ்விதமாக நீங்கள் காரியங்களைச் செய்து கொண்டு போக வேண்டும். ஏனெனில், கோவானிய சுதேசிகளும் அரசரின் பார்வையில் சம அந்தஸ்து பெற்ற பிரஜைகளே. அதோடு அவர்களுக்கு உரிய இடம் தரப்பட வேண்டியதுதான் இயற்கை நியதியுங்கூட. சுதேசிகளை அவர்கள் பிறந்த மண்ணிலிருந்து ஒதுக்கி அயலார் வந்து ஆள்வது என்பது வெறுப்பை வளர்க்கும். பழிக்குப் பழி வாங்குமாறு ஆண்டவனிடம் அவர்கள் முறையிட வழி வகுக்கும்."

இப்படிப்பட்ட உயரிய நோக்கங்கள், கொள்கைகளைக் கொண்டிருந்த பொம்பாலைக் கோவானிய சரித்திரம் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியமென்ன?

# நிருபர்களுக்கு 'முகமூடி'

பாட்டப்பத்து ராமச்சந்திரன்.



எவ்வளவோ அரசியல் மேதைகள், எத்தனையோ சமயங்களில் நிருபர்களின் பிடிப் பிடியில் அகப்பட்டுத் திண்டாடுவதுண்டு. தர்ம சங்கடமான கேள்விகளைக் கேட்டு, இக்கட்டான பிரச்னைகளை எழுப்பி, வெளிவராத விஷயங்களைச் சூசகமாகவாவது வெளிவரச் செய்து விடுவார்கள்.

அப்படிப்பட்டவர்கள் ஒரு சமயம் பெண்களிடம் மாட்டிக் கொண்டு திணறினார்கள் என்றால் ஆச்சரியமாயில்லையா?

நடுப்பகல் நேரம். பெரிய காம்பவுண்டு மத்தியில் அழகான கட்டடத்தில் ஜகஜ்ஜோதியாய் விளக்குகள் 'ஜ்வலித்தன'. பகலில் வெளிச்சம் போட வேண்டிய அவசியம் ஏற்பட்ட காரணம் கட்டடத்தின் கதவுகள், ஜன்னல்கள் எல்லாம் நன்றாக மூடப்பட்டிருந்ததுதான்.

முகமூடி அணிந்த பெண்மணிகள் கட்டடத்துக்குள் நுழைந்ததும், காம்பவுண்டுக் கதவு மூடப்பட்டது.

"கதவைத் திறவுங்கள்!"

"நீங்கள் யார்? இங்கே ஆண்கள் வரக் கூடாது!"

"அழையா வீட்டுச் சம்பந்திகளென நாங்கள் வரவில்லை. இதோ பாருங்கள், அழைப்பிதழ்!"

"அப்படியா? ஒரு நிமிஷம் அதைக் கொடுங்கள்" என்று அழைப்பிதழை வாங்கிக் கொண்டு ஒரு பெண்மணி கட்டடத்துள் சென்றார். மற்றொருவர் 'பாரா' கொடுத்தார்.

சில நிமிடங்களில் "மன்னிக்க வேண்டும்" என்று கூறிக் கொண்டே, 'நாகரிக' மங்கை ஒருத்தி வாசலண்டை வந்தார்.

"ஏனம்மா, எங்களை அழைத்தீர்கள்? இவ்வளவு சங்கடங்கள் இருக்கும் என்றால் நாங்கள் வந்திருக்கவே மாட்டோமே!" என்றோம்.

"உங்களை வரவேற்க நான் இங்கில்லாதது தவறுதான்" என்றவர், "தயவு செய்து அக்கம்பக்கம் பார்க்காமல் என் பின்னாலேயே வாருங்கள்" என்று கூறினார்.

பாவையவளின் பேச்சைக் கேட்டு ஆண் சிங்கங்களான நாங்கள் பார்வையை இந்தண்டை அந்தண்டை ஓட்டாமல் பின் சென்றோம்.

நகரத்திலேயே முதல் தடவையாக நடைபெறும் 'கோஷா' ஸ்திரீகள் மகாநாடு அது.

நிருபர்கள் (யாவரும் ஆண்கள்) தங்கள் ஆசனத்தில் போய் அமர்ந்ததும் ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

ஒரு பெரிய திரை நிருபர்களைச் சுற்றி வந்து சிறைப்படுத்தி விட்டது. காரணம், எங்கும் முகமூடியகற்றிய பெண்கள் உட்கார்ந்திருந்ததுதான்.

"யார் யார் பேசுகிறார்கள் என்று நான் சொல்லுகிறேன். பேச்சுக்களை ரிப்போர்ட் பண்ணுங்கள்" என்றார் எங்களை வரவேற்ற மங்கை.

"ஆமாம். இது கோஷா ஸ்திரீகள் மகாநாடா? அல்லது கோஷா நிருபர்கள் மகாநாடா? கூடியிருக்கிற எல்லாப் பெண்மணிகளும் முகத்திரை அகற்றி உட்கார்ந்திருக்கிறார்கள்! எங்களைத் திரைக்குள் திணித்து விட்டீர்களே! நாங்கள் இப்பொழுது பேசா மடந்தைகளா, அல்லது பேசா மடையர்களா?" என்று வயதில் பெரியவரான ஒரு பத்திரிகையாளர் கேட்டார்.

அப்பெண்மணி சிரித்து, "உங்களுக்கு நன்றாய் வேண்டும், நீங்கள் எல்லோரையும் படுத்துகிற பாட்டுக்கு!" என்றார் நையாண்டியாக.



## அத்தியாயம் 35

அத்திமர மேட்டில் தன்னந்தனியே உட்கார்ந்திருந்தான் மாயாண்டி. உடும்புக் கொட்டகையில் அமைதி நிலவியிருந்தது. வழக்கமான நாலைந்து 'டிரிப்பு'களுக்குப் பிறகு டிராலி ஒரு மணி நேரமாக நிலையிலேயேதான் நின்று கொண்டிருந்தது.

இரண்டு நாட்களாக மாயாண்டிக்கு அங்கேதான் ''டூட்டி''. காளியண்ணன் லீவு எடுத்திருந்தான். லீவு எடுப்பதற்கு முன்னால் அவன் மாயாண்டியிடம் சொன்னான்: ''மாயாண்டி, இன்னும் ரெண்டு மூணு நாளைக்கு உடும்புக் கொட்டகை வேலையெல்லாம் நீதான் கவனிச்சிக்கிடணும். வள்ளிக்குட்டி ஒரேயடியா என்னைப் பிரிஞ்சு போயிடப் போகுதே. என்னோட அருமைத் தங்கச்சிக்கு என்னோட கடமையெல்லாம் செய்ய வேண்டாமா? புருஷனோடு அதை அனுப்பி வைக்கிற விதமா அனுப்பி வைக்க

வேண்டாமா? இந்த அண்ணன் எப்படிப்பட்டவன்னு வள்ளிக்குட்டி தெரிஞ்சுக்கணும் பாரு.'',

காளியண்ணன் உண்மையிலேயே, அன்பு மிஞ்சிப் போய்த்தான் அவ்விதம் கூறினானா, அல்லது ஆத்திரம் தாங்காது கூறினானா? மாயாண்டிக்கு ஒன்றுமே புரியவில்லை.

இன்னொரு விஷயமும் மாயாண்டிக்குப் புரியாத புதிராகத்தான் இருந்தது. உண்மையில் வள்ளியின் செயலை அவ்வளவு சுலபமாகக் காளியண்ணன் மன்னித்துவிட்டு எப்போதும்போல் சந்தோஷமாயிருக்க ஆரம்பித்து விட்டானே, எப்படி? அன்று அவன் கௌரியம்மன் கோயிலுக்கு எவ்வளவு ஆவேசத்துடன் சென்றான் என்பதை மாயாண்டி நேரில் பார்த்தவன்தானே! ''என்னோடை பேச்சை மீறி ஏதாவது நடந்திருந்தால் ரெண்டு பேரையும் அந்த எடத்திலேயே சமாதி வச்சிடுவேன்'' என்று காளியண்ணன் கூறிச் சென்றபோது அவன் தோற்றம் எவ்வளவு பயங்கரமாயிருந்தது! ஆனால் அங்கிருந்து அவர்களுடன் அவ்வளவு குதூகலமாகத் திரும்பி வந்தானே, எப்படி? எல்லாம் அந்தக் குமரய்யாவின் நல்ல குணத்தைக் கண்டுதான் அவன் மனம் ஒரேயடியாக அப்படி மாறிப் போய்விட்டதா? வேறு என்ன காரணம் இருக்க முடியும்?



முதல் பரிசு நாவல்

கௌரியம்மன் கோயிலில் நடந்தவற்றையெல்லாம் மாயாண்டி மங்காவிடம் கேட்டுக் கொண்டிருந்தான். ''மாயாண்டியண்ணே! கௌரியம்மன் சாட்சியா புருசன் மனைவியாயிட்ட அவங்க ரெண்டு பேரையும் எந்தச் சக்தியாலேயும் பிரிச்சு வைக்க முடியாதுன்னு சொல்லிப் பூசாரி ஐயா ஆசீர்வாதம் செய்துவாய் மூடலே, மணிச் சத்தத்தோட கடகடன்னு சிரிப்புச் சத்தத்தையும் கேட்டு நாங்க திகைச்சுப்போய்த் திரும்பிப் பார்த்தோம். மணிக் கம்பத்துங்கிட்டே வள்ளியண்ணன் நின்னுக்கிட்டிருந்ததைப் பார்த்ததும் எனக்கு மூச்சே நின்னுடும்போலே ஆயிடுச்சு. வள்ளியக்காவையும் அந்த ஐயாவையும் அது என்ன செய்யப் போகுதோன்னு நடுங்கிக்கிட்டுத்தான் நான் நின்னுக்கிட்டிருந்தேன்'' என்று மங்கா விவரித்துக் கொண்டு வந்தாள்.

''அப்புறம் என்ன நடந்தது மங்கா? என்று ஆவலுடன் கேட்டான், மாயாண்டி.

''வள்ளியண்ணன் முகத்திலே சிரிப்பு மாறலே. என் பக்கம் அது திரும்பிக்கூடப் பார்க்கலே. சிரிச்சுக்கிட்டே அவங்க ரெண்டு பேர் கிட்டேயும் வந்து நின்னுச்சு. ஆனால் வள்ளியக்கா பயப்

படலே. அதும் முகத்திலே கொஞ்சம் கூடக் கலவரம் தோணலே. ''அண்ணு! நீயும் என்னே ஆசீர்வாதம் செய் அண்ணு' அப்படின்னு அண்ணன் கால்லே விழுந்து கும்பிட்டிச்சு.''

''வள்ளியைப் பத்தி நினேக்க நினேக்க எனக்கு எவ்வளவு பெருமையாயிருக்கு தெரியுமா?'' என்றான் மாயாண்டி, தழுதழுப்புடன்.

மங்கா தொடர்ந்து கூறினள்: ''வள்ளியண்ணன் வாயிலே யிருந்து கோவமா ஒரு வார்த்தைகூட வரல்லே. 'எழுந்திரு வள்ளிக்குட்டி, பூசாரி அய்யா செய்த ஆசீர்வாதத்தைவிடவா நான் செய்திடப் போறேன்? நீயே உன் தலேவிதியைத் தீர்மானிச்சுக் கிட்டே. அதுக்குக் குறுக்கே நான் யாரு?' — அவ்வளவுதான் சொல்லிச்சு. அப்புறம் குமரய்யாவைப் பார்த்துச் சிரிச்சுது''

''சிரிச்சுதா? எதுக்கு?''

''இதே கேள்வியைக் குமரய்யா கேட்டதும் வள்ளியண்ணன் என்ன பதில் சொல்லிச்சு தெரியுமா? 'ஐயா! நீங்க படிச்சவங்க பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவங்க. ஆனு இப்போ கௌரியம்மன் சாட்சியா எனக்கு மாப்பிள்ளேயாயிட்டீங்க. ஆனல் நான் ஒரு சாதாரண ஆளு. ஒத்தக் கையை இழந்த மொடம். உங்களே நான் மாப்பிள்ளேன்னு மொறை வைச்சுக் கூப்பிட்டா ஊரிலே இருக்கிறவங்க சிரிக்க மாட்டாங்களா? அதை நினேச்சுத்தான் எனக்குச் சிரிப்புத் தாங்கலே' அப்படீன்னு சொன்னதும் குமரய்யாவும் சிரிச்சாங்க. 'பரவாயில்லே காளி, நீ எப்படிக் கூப்பிட்டாலும் எனக்குச் சம்மதம்.' — அப்படின்னு அவங்க சொன்னதும் வள்ளியண்ணனுக்கு உச்சி குளிர்ந்து போயிருக்கணும். ஆனு மேலுக்குச் சொல்லிச்சு. 'நீங்க அப்படிச் சொன்னுலும் என் மனசு கேக்க வேண்டாமா? இன்னமும் நீங்க எனக்கு 'சார்' தான்! அந்த மொறை வைச்சுத்தான் இனி மேலும் நான் உங்களேக் கூப்பிட முடியும். உடும்புக் கொட்டகையிலே உங்களே மொகத்திலே அடிச்சாப்பலே பேசியனுப்பினேனே, எதுக்குத் தெரியுமா சார்? இந்த வள்ளிக் குட்டி உங்களேயே நினேச்சு மாஞ்சு போறுளே, உங்க ரெண்டு பேர் மனசிலேயும் எவ்வளவு உறுதி இருக்குதுன்னு பார்க்கத்தான். இவ்வளவு உறுதியாயிருக்கிறவங்களேப் பிரிச்சு வைக்க நான் யாரு? கௌரியம்மன் ரொம்பச் சக்தியுள்ள தெய்வம்னு சொல்லுவாங்க. எனக்கு அதிலே எல்லாம் அவ்வளவா நம்பிக்கை இல்லாமலே இருந்திச்சு. ஆனு இப்பப் புரிஞ்சுக்கிட்டேன். கௌரியம்மன் உண்மையிலேயே சக்தியுள்ள தெய்வம்தான். அந்தச் சக்திதான் நம்மை இப்படியெல்லாம் ஆட்டி வைக்குது. அதுக்குத் தலே வணங்கித் தானே தீரணும்?' மெய்யாவே சொல்றேன் மாயாண்டியண்ணே, — வள்ளியண்ணன் வெறைப்போ, மொறைப்போ இல்லாம அவ்வளவு படிமானமா, அடக்கமாப் பேசி, நான் என்னிக்குமே கேட்டதில்லே'' என்றாள் மங்கா.

மாயாண்டி பெருமூச்செறிந்தான். ''மங்கா! ஒவ்வொரு சமயம் அங்கி எனக்குச் செய்துட்டுப் போன துரோகத்தை நெனேச்சுக்கறப்போ ஆங்காரமும் அழுகையும் வரும். ஆனு இந்த ஒரு விஷயத்துக்காக அவளேத் தெய்வமாக் கொண்டாடத் தோணுது. அவ அப்படி எனக்குத் துரோகம் செய்திட்டுப் போயிருக்கலேன்னு வள்ளிக்கு அது மனசுப் போலே மாங்கலியம் கிடைச்சிருக்குமா?'' என்றான் தழுதழுப்புடன்.

''கௌரியம்மன் கோயில்லேருந்து அன்னிக்கு எல்லாருமா சேர்ந்துதான் திரும்பி வந்தோம். வழியெல்லாம் காளியண்ணன் ஒரே உற்சாகமாத்தான் பேசிக்கிட்டு வந்திச்சு. தன்னே மீறி வள்ளியக்கா இப்படிச் செய்திடுச்சேங்கிற கோவம் அதும் மனசிலே இருக்கிறதாவே தெரியலே!'' என்றாள் மங்கா.

''அன்னிக்கு ராத்திரி உங்க வீட்டு விருந்துச் சாப்பாட்டுக்கு நானும் வந்திருந்தேனே. தங்கச்சிக்காகப் பரிஞ்சு பரிஞ்சு காளியண்ணன் ஒண்ணொண்ணும் செய்யறதைப் பார்த்து நானே பிரமிச்சுப் போயிட்டேன். கூடப் பிறந்த பாசம் எங்கே போயிடும்? தான் ஆடாட்டாலும் தன் சதை ஆடும்னு சும்மாவா சொல்லியிருக்காங்க!'' என்றான் மாயாண்டி.

அன்று விருந்துச் சாப்பாடு முடிந்த பிறகுதான் காளியண்ணன் தான் லீவு எடுத்திருக்கும் விஷயத்தைச் சொல்லி அந்த நாட்களில் உடும்புக் கொட்டகை வேலேயைக் கவனிக்கும்படி மாயாண்டியைக் கேட்டுக் கொண்டான். ஆனல் ஏதோ ஓர் அர்த்தமில்லாத சந்தேகம் மாயாண்டியின் மனத்தில் மீண்டும் மீண்டும் தலேதூக்கி வேதனே செய்து கொண்டிருந்தது. காளியண்ணன் உண்மையிலேயே அவ்வளவு சாத்விகமாக நடந்து கொண்

## பெண்ணழகிகள் பலரும் பெப்ஸோடெண்ட் டூத்பேஸ்ட் உபயோகிப்பதன் ரகசியமென்ன?

பெப்ஸோடெண்ட் உபயோகிக்கும் பெண் புன்னகை புரிய அஞ்சவேண்டியதில்லை... அவளால் இயற்கையாகச் சிரித்து மகிழ்ந்திருக்க முடியும் ... பெப்ஸோடெண்ட் பற்களை, கண்ணைப் பறிக்கும் வெண்மை பளிச்சிடத் துலக்குவதே இதற்குக் காரணம். புன்சிரிப்பு மலர்ந்தால் போதும், முகமெங்கும் ஒளி சிந்தும். நீங்கள் புன்னகை புரியும் ஒவ்வொரு முறையும், உங்களுக்குள் மறைந்திருக்கும் பிரகாசத்தை வெளிப்படுத்தும் பெருமை பெப்ஸோடெண்டையே சாரும்.




பெப்ஸோடெண்டிலுள்ள 'இரியம் ப்ளஸ்' அற்புத நுரைவளத்தை அளிக்கிறது. அது, உங்கள் பற்களின்மேல் படிந்திருக்கும் மங்கலான திரையை அகற்றி, அவற்றை வெண்முத்துப்போல பளிச்சிடச் செய்கிறது!

**பெப்ஸோடெண்ட் கொண்டு துலக்கினாலே**
**பற்கள் பளிச்சிடுமே அதிவெண்மையினாலே!**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரம்சிறந்த தயாரிப்பு

HDL-1936

# தலைவலி

எவ்வளவு கடுமையாயினும்

உபாதை

## வலிக்கும் பகுதியில்

மட்டுமே

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் தசைவலி, தலைவலி, சுளுக்கு மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்ப்புச்சளி, ஜலதோஷம் போன்றவைகளும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக் கணக்கில் வரும்.

அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டுவரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி

டாஞ, அல்லது அவ்வளவும் தன்னுடைய பிரமைதாஞ? சட்டென்று தன்னைத் தானே மண்டையில் குட்டிக் கொண்டான் மாயாண்டி. ''டேய், மாயாண்டி, என்ன அசட்டு எண்ணம்டா இது? அங்கி உன்னே மோசம் செய்து விட்டுப் போயிட்டான்னு அதுக்காக எதிலேயும் நம்பிக்கை இல்லாமல் போயிடணுமா, உனக்கு? வேண்டாததுக் கெல்லாம் இதென்னடா வீண் சந்தேகம்?''

இந்த இரண்டு நாட்களாக மாயாண்டி ''டூட்டி'' முடிந்ததும் வள்ளியின் வீட்டுக்குச் செல்லும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தான். தங்கையை ஒரேயடியாகப் பிரிந்துவிடப் போகிறோம் என்ற துன்பத்தை மறப்பதற்காகக் காளியண்ணன் எப்படியெல்லாம் குதூகலமாக இருக்க முயற்சி செய்து வந்தான், எப்படியெப்படி யெல்லாம் வள்ளியைச் சந்தோஷப்படுத்தப் பாடுபட்டு வந்தான் என்பதை அஞ்சலையத்தை அவனுக்குக் கதை கதையாகக் கூறி வந்தாள்.

''காளித் தம்பி மொரடுன்னு பேரே தவிர அதும் மனசிலே வஞ்சனேயே கிடையாது. நடந்ததென்னவோ நடந்து போச்சு, அதைப் பத்தி அதுக்குச் சம்மதம் இருக்கோ இல்லேயோ, அதைத் தன்னுலே மாத்த முடியாதுங்கிற வரைக்கும் காளித் தம்பிக்குப் புரிஞ்சு போச்சு. வள்ளி எப்போதும் நம்ம வீட்டிலேயே இருக்கணும்னு நடக்குமா? என்னிக்கு இருந்தாலும் புருஷனுேட போய் வாழ வேண்டிய பொண்ணுதானே. அது செய்த பூஜைக்கும், பிரார்த்தனைக்கும் தகுந்தபடி கௌரித் தாயார் கண் திறந்திட்டா. இனிமே இங்கே இருக்கிற ரெண்டு மூணு நாளேக்காவது தங்கச்சியைச் சிரிச்ச முகத்தோட பார்க்கணும்னு அண்ணனுக்குத் தோணுமை இருக்குமா? ஓடியாடி ஒண்ணு மாத்தி ஒண்ணு வள்ளிக்காகப் பரிஞ்சு பரிஞ்சு செஞ்சிக்கிட்டிருக்கு.....''

ஆனால் இதெல்லாம் உண்மைதானு? அல்லது எரிமலையைப் பனி மூடி மூடியிருக்கும் என்று சொல்வார்களே, அம்மாதிரியானதொரு பொய்த் தோற்றம்தானு?

'பார்த்தயா, பார்த்தயா, டேய், மாயாண்டி, இந்தச் சந்தேகப் புழுவை உன் மனசிலேயிருந்து தோண்டியெடுத்து வெளியிலே விசியெறிய மாட்டே நீ?' — மாயாண்டி மறுபடியும் தன்னைத் தானே மண்டையில் குட்டிக் கொண்டான்.




கையில் காமிரா ஏந்தி நிற்கும் இந்தப் பெண்மணி யார் என்று உங்களால் சொல்ல முடிகிறதா? ஒரு பெரிய நாட்டின் முதல் பெண்மணி என்று பேர் வாங்கியவள். இப்பொழுதாவது உங்களால் ஊகித்தறிய முடிகிறதா? முடியாவிட்டால் 85-ம் பக்கம் புரட்டினுல் அவர் யார் என்பதைப் படம் பிடித்துக் காட்டிவிடும்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இலாகா அதிகாரிகளின் அனுமதியுடன் அந்த இரண்டு நாட்களாக அணைக்கட்டு வீட்டில்தான் தங்கியிருந்தான் குமரன். மறு நாள் அவன் அங்கிருந்து வள்ளியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுப் போவதாக ஏற்பாடாகி யிருந்தது. பவர்ஹவுஸில் எஞ்சினீயரா யிருந்தவர் குமரனுக்கும் பழக்கமானவர். குமரனுடைய கொள்கைகளில் அனுதாபம் உள்ளவர். குமரன் வள்ளியை வாழ்க்கைத் துணைவியாக அடைந்ததைப் பற்றி அவருக்கு ஒரே சந்தோஷம். அதைக் கொண்டாடுவதற்காகப் பவர்ஹவுஸ் பகுதியிலுள்ள தமது வீட்டில் இருவரையும் விருந்துக்கு அழைத்திருந்தார். இந்தச் சமாசாரத்தைக் காளியண்ணன்தான் மாயாண்டிக்குத் தெரிவித்திருந்தான்.

''பதினேரு மணிக்கு அவங்க ரெண்டு பேரும் பவர்ஹவுஸுக்கு இறங்கிப்

போகணும். அவங்களை வழியனுப்பற துக்கு நானும் வரப் போறேன். என் கையாலேதான் அவங்களை இறக்கி யனுப்பப் போறேன்'' என்று கூறி யிருந்தான்.

மாயாண்டி சூரியனைப் பார்த்தான். மணி பதினொன்றை நெருங்கிக்கொண் டிருக்கும் போலிருந்தது. ஆயிற்று, இன்னும் சற்று நேரத்தில் அவர்கள் வந்து விடுவார்கள். அத்திமர மேட் டில் உட்கார்ந்திருப்பதைவிட உடும்புக் கொட்டகையிலேயே போய் உட்கார்ந் திருந்தால் என்ன?

உடும்புக் கொட்டகைக்குப் போவ தற்காக மாயாண்டி திரும்பிய போது காளியண்ணன் மட்டும் தனியே வேக மாக வந்து கொண்டிருப்பது தெரிந் தது. மாயாண்டி திகைத்தான். ஏன் இவன் மட்டும் வருகிறான்? அவர்கள் வரப் போவதில்லையா ?

''மாயாண்டி! உனக்கு ஓர் அவசர வேலை இருக்கு. நீ உடனே பவர் ஹவுஸுக்குப் போயாகணும்'' என்று கூறிக் கொண்டே அருகில் வந்தான் காளியண்ணன்.

''பவர் ஹவுஸுக்கா?''

''ஆமாம். அவங்க ரெண்டு பேரும் வர்றதுக்குக் கொஞ்ச நேரமாகும்னு பவர்ஹவுஸ் எஞ்சினீயரய்யாகிட்டே தகவல் சொல்லணும். முன்னே இங்கே சபேசய்யான்னு இருந்தாரில்லே ?.... அவரும் அவர் சம்சாரமும் பட்டணத் திலேயிருந்து வரப் போகிறதா தந்தி குடுத்திருக்காங்களாம். அவங்க வரும் போது யாரும் இல்லேன்னா நல்லாயிருக் காதே. அரை மணி நேரம் அவங்களுக் காகக் காத்திருந்திட்டு அப்பறம் வந் திடறதாக நம்ம மாப்பிள்ளை ஐயா சொல்லிச்சு'' என்றான் காளியண்ணன்.

''இந்தத் தகவலை பவர்ஹவுஸ் எஞ்சி னீயரய்யாகிட்டே சொல்லணுமா ?''

''ஆமாம், மாயாண்டி. நீ உடனே டிராலியிலே புறப்பட்டுப் போயிடு. நீ அங்கே போய்ச் சேர்ந்ததும் நான் டிராலியை மேலே திருப்பிக்கிடறேன்'' என்றான் காளியண்ணன்.

மாயாண்டி தாமதிக்காமல் விரைந்து சென்று டிராலியில் உட்கார்ந்து கொண்டான். காளியண்ணன் உடும்புக் கொட்டகைக்குள் சென்று விசையை அழுத்தியதும் டிராலி கீழ் நோக்கி மெதுவாக ஊர்ந்து செல்ல ஆரம் பித்தது.

காளியண்ணன் தனக்குள்ளேயே சிரித் துக் கொண்டான். ''போ மாயாண்டி, உன்னை அனுப்ப நல்ல சாக்கு அகப் பட்டது. இதுவும் நல்லதுக்குத்தான். நீ இங்கேயே இருந்தா என் வேலை எப்படி நடக்கும் ?'' என்று தனக்குத் தானே பேசிக் கொண்டான்.

''டிராலியை ஏன் கீழே அனுப் பிச்சிட்டே வள்ளியண்ணே ?'' என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்தாள் மங்கா.

''நீ எதுக்கு இங்கே வந்தே புள்ளே?'' என்றான் காளி சற்று எரிச்சலுடன். 'வள்ளியண்ணே' என்று அவள் அழைக்கும் வழக்கத்தை இன்னும் மாற் றிக் கொள்ளாதிருந்ததற்கு மட்டுமல்ல, அந்நேரத்துக்கு அவள் திடுதிப்பென்று வந்து முளைத்ததையும் நினைத்துத்தான்.

''நான் வந்தது இருக்கட்டும். மாயாண்டியண்ணை டிராலியிலே பவர் ஹவுஸுக்குப் போகுது ?'' என்று கேட்டாள் மங்கா.

''ஆமாம். அந்த எஞ்சினீயரய்யா எவ்வளவு நேரம் காத்திருப்பாரு, பாவம். அவங்க ரெண்டு பேரும் கொஞ்சம் நேரம் பொறுத்துத்தான் வருவாங்கன்னு அவருக்குத் தெரிவிக்க வேண்டாமா? ஆமாம், நீ எங்கே வந்தே ?''

''கொட்டகைத் தோட்டத்திலே தக்காளியெல்லாம் பழுத்து வீணாய்க் கிட்டிருக்கே, பறிச்சுக்கிட்டு வரச் சொல்லி அத்தை அனுப்பிச்சுது. அப் படியே அவங்க ரெண்டு பேரும் அங்கேயிருந்து பவர்ஹவுஸுக்குப் போற தையும் பாத்திட்டுப் போகலாமே....''

''அதுவரைக்கும் இங்கே காத் திருக்க வேண்டியதில்லை. தக்காளியைப் பறிச்சிக்கிட்டு வீட்டுக்குப் போயிடு.''— காளியண்ணனின் குரலில் கடுமை தொனித்தது.

''அதுக்கு நீ ஏன் இப்படிச் சீறுறே? எங்க வள்ளியக்காவுக்குக் கல்யாண ஊர்கோலம் எதுவும் நடத்திப் பார்க் காட்டாலும் டிராலியிலே அவங்க ரெண்டு பேரும் ஒண்ணாப் போறதை யாவது நான் பார்க்க வேண்டாமா ?'' என்று கூறியவாறே தோட்டத்தை நோக்கி விரைந்தாள் மங்கா.

காளியண்ணன் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான். ''ஆமாம், கலியாண ஊர்கோலம்.... கலியாண ஊர்கோலம்....'' என்று சொல்லிப் பார்த்தவாறு மீண்டும் பலமாகச் சிரித் துக் கொண்டான்.

டிராலி பவர்ஹவுஸ் நிலையை எட்டி விட்டதை அறிவிக்கும் மணி ஒலித்தது.

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு [illegible], நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








புதிய
சிக்கனமான
டால்க் நவீன
டின்னில்

CLT.CLI.TAM

Graphic CP-2





- கிருமிநாசினி கலந்தது. டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது
- சுகந்தமான மணமுள்ளது.

# Nital

MEDICATED PIMPLE CREAM

**(நிடால் முகப்பரு க்ரீம்)**

குறைந்த விலை

மருந்து கலந்த நிடால முகப்பரு கரீம் உங்கள் சருமத்தில் தோன்றும் பருக்களை ஒருவித அபாயமுமில்லாமல் அகற்றி விடுகிறது. சருமத்துக்கும் பாதுகாப்பளிக்கிறது. சருமத்தின் அடித்தளம்வரையில் இறங்கி கிருமிகளை நாசம் செய்து விடுகிறது. பருக்கள் உலர்ந்து உதிர்ந்து விடுகின்றன. சொட்டையோ, தடமோ பின்பு எதுவும் இருக்காது.

யௌவனத்தின் பொலிவை மிகைப் படுத்துவதாலும, சருமத்தின் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்து பிரகாசப் படுத்துவதாலும் நிடால் க்ரீம் ஆண்களோ, பெண்களோ, யாவருக்கும் மிகவும் ஏற்றது.

உபயோக முறை டபபாவில் அடங்கியுள்ளது.



நாள் முகபபரு சிகிச்சை

*தயாரிப்போர்:*
**கொச்சின் பாம் பிரைவேட் லிட்**
நவரத்ன ஹவுஸ், மந்த்ரா ரோடு
கொச்சி - 2

*சென்னை, கேரளா, ஆந்திர பிரதேசம், மைசூர் ராஜ்யத்திற்கு விநியோகஸ்தர்கள்:*
**கணபதி & கம்பெனி, 103 - 104, லிங்கி செட்டித் தெரு, த. பெ. 1986, சென்னை - 1**

**எல்லா பிரபல மருந்து கடைகளிலும் கிடைக்கும்**

டிராலி மேலே வருவதற்கான விசையை அழுத்தி விட்டுக் காளியண்ணன் ஒரு பக்கமாக உட்கார்ந்தான். உருக்குக் கயிறு ஒரே சீராக உருளையில் வந்து சுற்றிக்கொண்டிருந்தது. அதற்கு ஆதாரமாக ஒன்றையொன்று கௌவிக் கடித்துக்கொண்டு சுழன்று கொண்டிருந்த பல்சக்கரங்களையே கண்ணிமைக்காமல் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான் காளி. உடும்புச் சக்கரங்கள் என்று அவற்றுக்குப் பெயர் வைத்தது எவ்வளவு பொருத்தம்! அவற்றின் உடும்புப்பிடி சற்றுத் தளர்ந்தால் என்ன ஆகும் என்று வள்ளிக்கு ஒரு தடவை விளக்கியது காளியண்ணனின் நினைவுத் தலத்தில் ஒலித்தது.

''என்ன ஆகுமா? உருளையிலே சுத்தியிருக்கிற உருக்குக் கயிறு பொல பொலவன்னு அவுத்துக்கும். சரிவுத் தண்டவாளத்திலே ஓடிக்கிட்டிருக்கிற டிராலி தறிகெட்டு ஓடி அதல பாதாளத்துப் பாறையிலே மோதித் தூள் தூளாயிடும்!''

காளியண்ணன் சிரித்துக் கொண்டான். ''கலியாண ஊர்கோலம். கலியாண ஊர்கோலம்'' என்று அவன் வாய் முணுமுணுத்தது.

டிராலி நிலைக்கு வந்து நின்றது. விசையை நிறுத்திய காளியண்ணன் எழுந்து சென்று டிராலிக்குத் தடுப்பாக இரண்டு கட்டைகளைத் தண்டவாளத்தில் வைத்து விட்டுத் திரும்பி வந்தான். சட்டென்று அவனது ஒற்றைக் கை வேகமாக இயங்கத் தொடங்கியது. உருளைத் தண்டைப் பல் சக்கரங்களின் அச்சுடன் பிணைத்திருந்த காப்பு வளையம் மட்டும்தான் இப்போது இரண்டு அச்சுக்களையும் பொருத்தி வைக்கும் பிணைப்பாக மிஞ்சி நின்றது. குரூரமாக அதைப் பார்த்துச் சிரித்துக் கொண்ட காளி கழற்றிய மறைகளை ஒரு பக்கமாக ஒதுக்கித் தள்ளினான். பின்பு சாவதானமாக ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு வெளியே சென்று அத்திமர மேட்டின் மீது உட்கார்ந்து கொண்டான் அவன். **(தொடரும்)**



## இவரேதான் அவர்!

வாஷிங்டன் பத்திரிகை ஒன்றின் புகைப்பட நிபுணராக வாழ்க்கை தொடங்கிய ஜாக்குலின் கென்னடியே அவர். அமெரிக்காவின் ஜனாதிபதி கென்னடியின் உள்ளத்தை இந்தப் புகைப்பட நிபுணராகவே சென்று கவர்ந்தவர் ஜாக்குலின். கென்னடிக்கும் ஜாக்குலினுக்கும் 1953 செப்டம்பர் 12ந் தேதி திருமணம் நிகழ்ந்தது. 1960ம் வருஷத்தில் ஜனாதிபதி தேர்தலுக்குக் கென்னடி நின்ற போது ஒவ்வொரு தேர்தல் கூட்டத்திலும் அருகில் தமது அருமை மனைவியாரோடு காட்சியளித்தார். கலைகளிலே ஈடுபாடு மிக்கவர் ஸ்ரீமதி கென்னடி. சங்கீதத்தில் பிரியம் அதிகம்; ஓவியம் தீட்டுவதிலே மோகம்; அவற்றைச் சேர்த்து வைப்பதிலே ஆசை உண்டு. அவருக்கு மூன்று குழந்தைகள். கென்னடி தம்பதிக்குப் படகோட்டுவது பொழுதுபோக்காக விளங்கியது. அகில உலகத் தலைவர்களுக்கும் வெள்ளை மாளிகையில் விருந்தளித்துக் கௌரவிப்பதில் ஸ்ரீமதி கென்னடி விசேஷ கவனம் செலுத்தினார். பாரீஸுக்குத் தம் கணவருடன் விஜயம் செய்திருக்கிறார். 1962ம் வருஷத்தில் ஸ்ரீமதி கென்னடி இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் தனியாக விஜயம் செய்தது அனைவருக்கும் நினைவிருக்கும். புகழ் ஏணியின் உச்சியை அடைந்து கொண்டிருந்த கென்னடி தம்பதியருக்கு வாழ்க்கையில் பேரிடி 1963ம் வருஷம் நவம்பர் மாதத்தில் வந்தது. அமெரிக்கச் சரித்திரத்திலேயே கண்டும் கேட்டுமிராத வகையில் மிகச் சிறிய வயதில் பெரும் கீர்த்தி பெற்ற கென்னடி கொடியோனால் கொலையுண்டார். உலகப் புகழ் பெற்ற கென்னடியின் இறுதி யாத்திரையின்போது மூன்று வயது நிரம்பிய அவரது மகன் ஜானுக்குப் பிறந்த நாள்.

கென்னடியின் கடைசி நாட்களைப் பற்றிய நூல் ஒன்று வெளிவர விருந்தது. இதில் கண்ணியக் குறைவான முறையில் பல தவறான தகவல்கள் இடம் பெற்றுள்ளன என்றும், அவை அந்நூலிலிருந்து நீக்கப்பட வேண்டுமென்றும் வழக்காடி அண்மையில் வெற்றி பெற்றுள்ளார் ஸ்ரீமதி கென்னடி.

# ஓடிப் போனவன்!



— நாடோடி —

மேலேயுள்ள தலைப்பில் ''ன்''க்குப் பதில் ''ள்'' என்று போட்டு, ''ஓடிப்போனவள்'' என்று நான் எழுதியிருந்தால், அநேகர் வெகு சுவாரசியமாக இந்தக் கட்டுரையைப் படிக்க ஆரம்பிப்பார்கள். ''யார் அந்த ஓடிப் போனவள்?'' என்று முதல் கேள்வி கேட்பார்கள். பிறகு, ''யாரோடு ஓடினாள்?'' என்று இரண்டாவது கேள்வி கேட்பார்கள்.

அது என்னவோ, தெரியவில்லை, பெண்கள் ஓடினால் யாராவது ஓர் ஆணைக் கூட அழைத்துக்கொண்டுதான் ஓட வேண்டும், தனியாக ஓடக் கூடாது என்று ஒரு நியதி இருக்கிறாற் போலத் தோன்றுகிறது. அதனால் ''ஓடினாள்'' என்றாலே, நாம் ''யாரோடு ஓடினாள்?'' என்று கேட்க ஆரம்பிக்கிறோம்.

ஆனால் நான் இப்போது எழுதுவது ஓடிப் போனவனைப் பற்றித்தான். அதனால் அவன் தனியாகத்தான் ஓடியிருக்க வேண்டும் என்று நீங்களும் ஊகித்திருப்பீர்கள். நானும் அதை ஊர்ஜிதப்படுத்துகிறேன்.

இந்த ஓடிப்போனவன் தனியாகத்தான் ஓடினான். ஒரு பெண்ணையும் கூட அழைத்துக் கொண்டு ஓடவில்லை. அதற்குப் பதில் கூட இருந்த பெண்ணை, அதாவது தன் சொந்த மனைவியையே தனியாக விட்டுவிட்டு ஓடி விட்டான்!

தன் மனைவி தமயந்தியைத் தனியாக விட்டு விட்டு ஓடின நளனைப் பற்றித்தான் சொல்கிறேன். நளனுடைய கதையைப் படிக்கும்போதெல்லாம் எனக்கு ஒரு சந்தேகம் ஏற்படுவதுண்டு. ''அரசை இழந்த நளன் எதற்காகத் தன் மனைவி தமயந்தியை நடுக் காட்டில் தன்னந் தனியாக விட்டு விட்டு ஓடினான்! அந்தக் கஷ்ட காலத்தில் மனைவி கூட இருந்தால் அவனுக்கு ஆறுதலாக இருந்திருக்க மாட்டாளா!'' என்பது தான் அந்தச் சந்தேகம்.

இந்தச் சந்தேகத்துக்குச் சமீபத்தில்தான் எனக்கு விடை கிடைத்தது. அடுத்த வீட்டு அண்ணாசாமிக்குத் திடீரென்று சிறிது காலமாகக் கஷ்ட காலம் ஆரம்பித்திருக்கிறது. சொந்தமாகத் தொழில் நடத்த வேண்டுமென்று அவர் நல்ல சம்பளம் வந்துகொண்டிருந்த உத்தியோகத்தை உதறித் தள்ளி விட்டார். ஆனால் அவர் எதிர்பார்த்தது போலத் தொழில் அத்தனை செழிக்கவில்லை.

பணக்கார நண்பர்களைச் சிநேகம் பிடித்துக் கொண்டால் அவர்கள் தொழிலுக்குப் பணம் போடுவார்கள் என்று நினைத்துக் கொண்டு அவர் அவர்களுடன் காசு வைத்துச் சீட்டு விளையாட ஆரம்பித்தார். இதனால் அவருக்கு இருக்கிற பணமும் போனதுதான் மிச்சமே யொழிய, பணக்கார நண்பர்கள் பணம் கொடுத்து உதவவில்லை. அவர்களே பணக்காரர்களாவதற்கு இப்படிச் சீட்டாடுவதைத் தான் தொழிலாக வைத்திருக்கிறார்களென்பது அண்ணாசாமிக்குத் தெரியாது.

கடன்காரர்கள் நெருக்க ஆரம்பித்து விட்டார்கள். என்ன செய்வது என்று தெரியாமல் அண்ணாசாமி தவித்துக்கொண்டிருக்கிறார்.

இவரைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று போனபோது அண்ணாசாமியும் அவர் மனைவியும் பேசுவது காதில் விழுந்தது.

பிறர் பேசுவதை ஒட்டுக் கேட்பது அநாகரிகம் என்று கருதும் கோஷ்டியைச் சேர்ந்தவன் அல்ல நான். இது விஷயத்தில் நாகரிக மனிதன் என்று பெயர் வாங்க நான் தயாராக இல்லை. ஏனெனில் நான் அப்படி இருந்தால் எனக்குக் கட்டுரைகள் எழுதுவதற்கே விஷயம் கிடைத்திருக்காது. இந்தக் கட்டுரையும் அப்படி ஒட்டுக் கேட்டதன் பலன் தானே!

உள்ளே நடந்து கொண்டிருந்த சம்பாஷணையை இதோ கொடுத்திருக்கிறேன்.

*மனைவி:* ஏன்னா! அன்றைக்கே நான் சீட்டாடப் போகாதேங்கோ, சூதாட்டம் வேண்டாம் என்று சொன்னேனே கேட்டீர்களா! இப்பொழுது எல்லாப் பணத்தையும் தொலைத்துவிட்டுச் சந்தியில் நிற்கிறீர்களே!

*அண்ணாசாமி:* நான் என்ன பண்ணலாம்! ஏதோ நான்கு பணக்காரர்களைச் சிநேகிதம் பண்ணிக் கொள்ள இதுதான் வழி என்று நினைத்து இப்படிச் செய்தேன். இது இப்படி விபரீதமாக முடியும் என்று நான் நினைக்கவே இல்லையே!

*மனைவி:* பணக்காரர்களைச் சிநேகிதம் பண்ணிக் கொள்வதற்கு வெகு நல்ல வழி கண்டு பிடித்திருக்கிறீர்கள்! பணக்காரர்களின் சிநேகிதம் உங்களுக்கு வேண்டுமானால் முதலில் அவர்களுடைய மனைவிமார்களின் சிநேகிதம் எனக்குக் கிடைக்க வேண்டும். அதற்கு எனக்கு நீங்கள் ஒரு பத்து நல்ல புடவைகள் வாங்கிக் கொடுத்திருந்தால் தானே, நான் மாற்றி, மாற்றிக் கட்டிக் கொண்டு போய் அவர்களைப் பார்த்திருக்க முடியும்! ஆனால் நீங்களோ நல்ல நாளிலேயே எனக்குப் புடவை வாங்கிக் கொடுக்கவில்லை. இப்பொழுது எங்கே வாங்கிக் கொடுக்கப் போகிறீர்கள்!

*அண்ணா:* நான் சீட்டாட்டம் ஆடியதைப் பற்றி, எதற்காக, சும்மா இப்படி இடித்து, இடித்துக் காட்டிக் கொண்டிருக்கிறாய்! என்னமோ, ஆடியாச்சு, பணத்தைத் தொலைச்சாச்சு! மேற்கொண்டு என்ன

செய்வதென்று பார்ப்போமா, பழையதைப் பேசிக் கொண்டிருப்போமோ !

மனைவி: மேற்கொண்டு செய்வதற்கு என்ன இருக்கிறது ! நீங்கள் இப்படிக் கஷ்டப்படுகிறீர்களே என்றுதான் குழந்தைகள் இரண்டையும் முன்கூட்டியே என் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டேன். இனி என்னையும் அங்கு போய் நிற்கச் சொல்கிறேளா ! என் பணக்கார அக்காமார்களும் தங்கைமார்களும் என்னைக் கண்டு சிரிப்பதற்கு இதைவிட வேறு ஒன்றும் வேண்டாம்.

இதற்கு மேலும் அங்கு நின்றால் நாம் நிற்பதை அவர்கள் கவனித்து விடுவார்களோ என்கிற பயம் ஏற்பட்டு விடவே, நான் அங்கிருந்து நழுவி, விடு வந்து சேர்ந்தேன்.

அண்ணாசாமியும் அவர் மனைவியும் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்த பிறகுதான் நளன் ஏன் தமயந்தியை நடுக்காட்டில் விட்டு விட்டு ஓடினான் என்பது நன்கு புரிந்தது.

தமயந்தி மாத்திரம் என்ன, அவளும் பெண் இனத்தைச் சேர்ந்தவள்தானே ! அவள் நளனைத் தூஷிக்க மாட்டாள் என்பது என்ன நிச்சயம்? ''சூதாட்டம் வேண்டாம் என்று சொன்னேனே, கேட்டீர்களா!'' என்று அவள் நளனைக் கேட்கமாட்டாள் என்பது என்ன நிச்சயம்! அரசபோகத்தில் வாழ்ந்த அவள் ஒவ்வொரு தடவையும், ''அப்படி வாழ்ந்தவள் இப்படி வாழ வேண்டியிருக்கிறது!'' என்று இடித்துக் காட்டி இருக்க மாட்டாள் என்பது என்ன நிச்சயம்!

இத்தகைய வேதனைகளைத் தவிர்ப்பதற்காகத்தான், கஷ்ட காலத்தில் தமயந்திகூட இருக்க வேண்டாம் என்று நளன் தீர்மானித்திருக்க வேண்டும்.

கஷ்ட காலத்தில், மனைவி நம்கூட இருப்பதில் இன்னொரு பெரிய சங்கடம் இருக்கிறது.

வேறு யார் நம்மைப் பற்றி என்ன நினைக்கிறார்களோ, நம் மனைவி நம்மைப் பற்றி உயர்வாக நினைக்க வேண்டும் என்கிற ஆசை எல்லாருக்கும் இருக்கிறது. ஆனால் கஷ்ட காலத்தில் நம்மைத் தேடி வருகிற கடன்காரர்களுக்கு (அதாவது நமக்குக் கடன் கொடுத்தவர்களைத்தான் சொல்லுகிறேன்) சால்ஜாப்பு சொல்லுவதற்கோ அல்லது விரட்டுவதற்கோ எத்தனை தகிடுதத்தங்கள் பண்ண வேண்டியிருக்கிறது.

உதாரணமாக, வீட்டை மூடிக் கொண்டு வீட்டில் இல்லாதது போலப் பாசாங்கு பண்ண வேண்டியிருக்கிறது! போன் வந்தால், வேறு யாரை விட்டாவது எடுக்கச் சொல்லி, நாம் இல்லையென்று சொல்லச் சொல்ல வேண்டியிருக்கிறது. கடன்கொடுத்தவன் வீட்டுக்கே தேடிக் கொண்டு வந்து, நம்மைக் கண்டுபிடித்து விட்டால், ''இன்னும் இரண்டு நாட்களில் பைசல் பண்ணிவிடுகிறேன். நாளைக்கு ஊரிலிருந்து பணம் வருகிறது!'' என்று பொய் சொல்ல வேண்டியிருக்கிறது. கடன் கொடுத்தவர்கள் எத்தனை கடிதங்கள் எழுதி, நம் கழுத்தை அறுத்தாலும், கடிதமே கிடைக்கவில்லையென்று சொல்ல வேண்டியிருக்கிறது. இன்னும் சில சமயங்களில் பொய்ச் செக்கைக் கொடுத்து ஏமாற்ற வேண்டியிருக்கிறது.

இத்தனை செயல்களையும் மனைவி பார்த்துக் கொண்டிருக்கும் போதே செய்ய, எந்தக் கண்ணியமான கணவன்தான் இசைவான் ! ஆகவேதான் கஷ்ட காலத்தில் மனைவியை விட்டு ஓடுவதுதான் சிறந்த வழி என்று நளன் கண்டுபிடித்து, அந்த வழியைப் பின்பற்றினான் என்று நினைக்கிறேன்.



பழைய காலக் கதைகளில் கடன் தொல்லை பொறுக்காமல் ஊரை விட்டு ஓடினார்கள் என்று நிறையப் படித்திருக்கிறோம். இப்பொழுதுதான் எனக்கே விளங்குகிறது. அவர்கள் கடன்காரர்களுக்குப் பயந்து கொண்டு ஓடவில்லை, மனைவியின் எதிரில் அவமானப்படக் கூடாது என்றுதான் அப்படி ஓடியிருக்கிறார்கள் என்று.

ஆகவே, இனி யாராவது ஊரை விட்டு ஓடினால் (நான் ஓடினாலும் சரி) கடனுக்குப் பயந்து கொண்டு ஓடிவிட்டார்கள் என்று பயந்து கொண்டு, கடன் கொடுத்தவர்கள் கலங்க வேண்டாம் ! அது குறித்துக் கவலைப் படவும் வேண்டாம் ! அவர்கள் மனைவிக்குப் பயந்து கொண்டுதான் ஓடி யிருக்கிறார்கள் என்று கொள்க. நல்ல காலம் வந்ததும் அவர்கள் கட்டாயம் திரும்பி வருவார்கள்! உங்கள் கடனைத் திருப்பிக் கொடுப்பார்கள், (எனக்குக் கடன் கொடுத்துள்ளவர்கள் கவனிக்க !)




□ 'கல்கி' நினைவுச் சொற்பொழிவு

□ வங்கத் தமிழரின் வாழ்த்து!

□ விலையேற்றம்

□ அற்புதமான கதை

கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சொற்பொழிவுகள் ஆண்டுதோறும் நடைபெற்று வருவது 'கல்கி' நேயர்கள் அறிந்ததே. இந்த வரிசையில் இவ்வாண்டு அ. ச. ஞான சம்பந்தம் அவர்கள், ''திரு வி. க.வும் தமிழ் மொழிக்கு 'அவர் புரிந்துள்ள சேவையும்'' என்ற தலைப்பில் மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்துவார். தமிழக அரசாங்கத்தில் தமிழ் வளர்ச்சிக்கான விசேஷ 'அதிகாரியாகப் பணியாற்றும் திரு அ. ச. ஞானசம்பந்தத்தின் இச்சொற்பொழிவுகள் சென்னை சர்வகலாசாலை நூற்றாண்டு விழாக் கட்டடத்தில் ஏப்ரல் 3, 4, 5ம் தேதிகளில் ஒவ்வொரு நாளும் மாலை 5-15 மணிக்குத் தொடங்கி நடைபெறும். அனைவரும் வருகை தந்து சிறப்பிக்கக் கோருகிறேன்.

சென்னை — ரிஜிஸ்திரார்
7-3-67 — சென்னை சர்வகலாசாலை



தேர்தலில் கூட்டணியினர் தமிழ்நாட்டு மக்களின் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்று அண்ணாதுரை அவர்களின் தலைமையில் தி. மு. க. தமிழ் நாட்டில் மந்திரி சபை அமைத்துச் செயலாற்றி வருவதை வங்கம்வாழ் தமிழர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறார்கள். கூட்டணியினர் வெற்றிக்கு ஆக்கபூர்வமான முயற்சியையும் ஒத்துழைப்பையும் நல்கிய இராஜாஜி அவர்களையும் பாராட்டுகிறார்கள்.

கூட்டணியினர் வெற்றியையும், தி.மு.க. ஆட்சியையும் பற்றி ஹௌராவிலும் மத்திய கல்கத்தாவிலும் வாழும் தமிழ் மக்கள் என்ன கருதுகிறார்கள் என்று அறிய முயன்று ஒவ்வொருவர் இல்லத்துக்கும் சென்றதில் இங்கு வாழும் தமிழர்கள் அனைவரும் ஒருமுகத்துடன் மகிழ்ந்து வரவேற்று, பாராட்டி, வாழ்த்துக்களைத் தெரிவித்து ஆண் பெண் அனைவரும் பெருமளவில் கையொப்பம் செய்தார்கள். இந்தப் பாராட்டுக் கடிதங்கள் தமிழ்நாட்டு முதன்மந்திரி திரு அண்ணாதுரை அவர்களுக்கும், திரு இராஜாஜி அவர்களுக்கும் அனுப்பி வைக்கப்பட்டிருக்கின்றன.

தி. மு. க.வின் முக்கிய கோட்பாடுகளான கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் தி. மு. க. மந்திரி சபை செயலாற்றி, தமிழ்மொழி தழைத்துச் சிறக்கவும், உணவுப் பொருட்களின் விலைவாசி இறங்கி 'மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வரவும் வழி வகுப்பார்கள் என வங்கம்வாழ் தமிழ்மக்கள் நம்புகிறார்கள்.

ஷிப்பூர், — எஸ். அண்ணாமலை
ஹௌரா — எம். சுப்பையா
16-3-67 — வி. சிங்காரம்



மத்தியதர வகுப்பினருக்குக் கசப்பாகப் போன மற்றொரு விவகாரம் இந்தக் காப்பிக் கொட்டைப் பிரச்னை. நல்ல தரமான காப்பிக் கொட்டை, நியாய விலையில் சிரமம் இல்லாமல் கிடைத்தது என்பது பழைய கதை. காப்பி போர்டார் நடத்தும் (சென்னையில்) டிப்போக்களில் திடீரென்று எல்லா ரகக் காப்பிக் கொட்டைகளின் விலையும் உயர்ந்து விட்டது. (சுமார் கிலோவுக்கு 50 பைசா வீதம்) இது முன்னறிவிப்பு இல்லாமல் அடிக்கடி நிகழும் சம்பவமாகி விட்டது. சென்ற ஆண்டுதான் பீப்ரி காப்பி கொட்டையின் விலை கிலோவுக்கு ரூ. 5.60 லிருந்து ரூ. 6.18 ஆக மாறியது. மீண்டும் விலையேற்றம். ஒவ்வொரு கிலோவுக்கும் 50, 60 பைசா மத்திய எக்ஸைஸ் வரி அவசியம்தானா? பாராளு மன்றத்தில் அங்கத்தினர் இது விஷயம் பேசி, பட்ஜெட் கூட்டத்தில் வரிச் சலுகை கிடைக்க வகை காண வேண்டும்.

சென்னை-24
18-3-67 — எஸ். வெங்கடேசன்



கல்கி இதழில் வெளியான சாயிப்பிரியாவின் ''விலங்கிற்கோர் விலங்கு'' சிறுகதை மிக அற்புதமானது. திருமணமான எந்தப் பெண்ணும் தன் கணவன் தனக்கே உரியவன் தன்னை மட்டுமே நேசிக்க வேண்டும்; வேறு பெண்களை ஏறெடுத்தும் பார்க்கக் கூடாது என்ற எண்ணம் உடையவர்கள் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார் கதாசிரியர். தவிர, ஒரு பெண் ஓர் ஆடவனுடன் பழகும்போது சாதாரணமாக அவன் 'மன விபசாரம்' செய்கிறான் என்பதைத் தெளிவாக்கியுள்ளார் ஆசிரியர்.

மேட்டூர் அணை
18-3-67 — ஸ்ரீ சக்கரவர்த்தி

[இந்தக் கதையைப் பாராட்டிப் பல கடிதங்கள் வந்துள்ளன. — ஆசிரியர்]

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# INDIA PISTONS EMPLOY THE BEST DISTRIBUTION NETWORK FOR MARKETING THEIR QUALITY PRODUCTS




Power Pak pilfer proof sets at a dealer's counter.

The IP leadership in Original Equipment is an assura
of the same rigid quality for replacement. Decade
experience in parts merchandising through a distribu
network, the pick of the automotive trade in India,
further assurance of availability of the right produc
the right price even in remote parts of the country.

To add to this, the IP Service Training Centre set u
train engine mechanics all over the country for qua
re-conditioning, is a further assurance of the best v
for the money spent on quality product sales backe
effective service.

*To be of complete service to automobile manufacturers, the trade and consumers, IP's Second Stage expansion will soon go into production to make available their products more freely at competitive pricing. The range is being widened to cover every popular type of car, commercial vehicle, motor cycle tractor and stationary engine.*



**INDIA PISTONS LIMITE**
**SEMBIAM MADRAS-1**